உ

கடவுள்துணை.

# அரிச்சந்திரமகாராஜன்

## கதை.

இஃது

திருவண்ணாமலை

வேங்கடாசலமுதலியாரவர்களால்

வசனகாவியமாகச் செய்வித்ததை

சேலம்

சுப்பராயப்பிள்ளை

அவர்கள்அநுமதியின்பேரில்

கொண்ணூர்

மாணிக்கமுதலியார்

கம்பேனியாரவர்களால்

தமது

மநோன்மணிவிலாச வச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு. காப்பி ௲.

சித்திரபாநு ௵ 2-0-0

சிவமயம்.

# விளம்பரம்.

——:0:——

இதனால் யாவருக்குந் தெரிவிப்ப தியாதெனில், சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை செங்கான்கடைக்கடுத்த நாட்டுப்பிள்ளையார்கோயிலுக்கருகில் சீரங்கபட்டணம் சுப்பிரமணிய முதலியார்தெருவில் கீழண்டைவாடை (உஅ) வது கதவிலக்கமுள்ளவீட்டில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மநோன்மணி விலாசமென்னும்அச்சுக்கூடத்தில்

பதிப்பித்திருக்கின்ற புத்தகங்கள்.

அகஸ்தியர்தேவாரத்திரட்டு, திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு பெரியபுராணச்செய்யுட்டிரட்டு இவைகளடங்கிய அருட்பா.

சானந்தகணேசர்புராணம்.

சேதுபுராணவசனம்

கஉ-ஸ்கந்தமாகிய பாகவதவசனம்- சித்திரப்படங்களுடன்

ஞானவாசிஷ்டவசனம்.

இரங்கேசவெண்பாமூலமும்-உரையும்.

கந்தரந்தாதிமூலமும்-உரையும்

விதானமாலைமூலமும்-உரையும்.

சிதம்பரபுராணமூலமும்-உரையும்.

குசலவநாடகம்.

மன்மதநாடகம்.

ஜோகிநாடகம்.

ருக்குமாங்கதநாடகம்.

ஸ்ரீகிருஷ்ணவிலாசம்.

சிங்கீஸ்வரவிலாசம்.

பிரகலாதனவிலாசம்.

ருக்குமாங்கதவிலாசம்.

இலக்ஷணக்குறவஞ்சி.

காளத்திபுராணம் மூலம்,

கந்தபுராணச்சுருக்கம் மூலம்.

சகஸ்திரமுகராவணன்கதை.

சாரங்கதரன்கதை.

பத்திராசலராமதாஸ்கீர்த்தனை.

பெரிசி-சின்னசாமிகீர்த்தனை

சுப்பராமஐயர்-பதம்.

இன்னும் பலவித தமிழ் தெலுங்குமுதலிய வயித்தியசாஸ்திரங்களும், விலைசரசமாய் விற்பனைசெய்து வருவதால் வேண்டுபவர்கள் மேற்கண்டவீட்டிலும், சிதம்பரம் மேல்கோபுரவாசற்படில் புத்தகஷாப்புக்கடைவைத்திருக்கும் கொ. மாணிக்கமுதலியாரிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

உ

கடவுள் துணை.

# அரிச்சந்திரமகாராஜன் கதை.

## காப்பு.

### விநாயகர் தோத்திரம்.

(*)

### வெண்பா.

மன்னுகின்றபாற்கரன்றன்மரபிலவதரித்த *
மன்னனரிச்சந்திரன்மாவன்புகழைத்-துன்னச் *
சீரார்கதையாகச்செய்யவரமருளுங் *
காரானைமாமுகவன்காப்பு. *

### பாயிரம்.

சிறப்புமிகுந்த நெடியகடல்சூழ்ந்த வுலகத்தில் பலவளமுமி
குந்த அயோத்தியாபுரியை அதிகமேன்மையுடன் யாவர்க்கும் ஒ
ருகுறைவுமில்லாமல் ஆறிலொருகடமை பகுதிவாங்கிப் புலியும்
பசுவும் பொருந்திவாழவும் - புரவலர்கள்தாழவும் -தானதர்மமோ
ங்கவும் - தாழ்ச்சியானதுநீங்கவும் - சதாகாலமும் தாபதர்வந்து
ஆசீர்வாதஞ்சொரியவும் - சாஸ்திரமாராய்ந்த அந்தணர்கள் வேத
கோஷீடம்புரியவும் - தன்னுடையசக்கரநெறிப்படியாவரும் செ
ழித்துய்யவும் - மாதமும்மாரிபெய்யவும் - தன்மனையாளன்றி ம
ற்றவரைத் தாயாகவெண்ணவும்-திரிகாலமும் சிந்தையிற் கடவுளை
த்தியானம்பண்ணவும் - தளர்வில்லாமல் பயிர்கள்வளரவும்-அரசு
செய்யவமைந்த (அரிச்சந்திர மகாராஜன்) நெடியபுகழை வசன
காவியமாகச்சிறுவர்முதல் யாவருமெளிதிலறியும்படியாகவும் - அ
ம்மன்னனுடைய பெருமையைக்கேட்டாலும் - அவன்கதையை
ப்படித்தாலும் - பிறருக்குச்சொன்னாலும்-எழுதினாலும்- கலிய
ல்பதுநீங்கிச்சவுக்கியமடைவார்களென்று கற்றுணர்ந்தபெரியோ
ர்கள் திருவாய்மலர்ந்தருளிச்செய்திருக்கிறபடியினாலும் என்னாலி
யன்றமாத்திரம் சொல்லத்தொடங்கினேன் இதனில்-சொற்குற்ற
ம் பொருட்குற்றம்-எழுத்துக்குற்றம் - எதாவதிருந்தாலும் வித்வ
சிரோன்மணிகளாகிய மேலோர்கள் தாங்கள்வருந்திப்பெற்ற பிள்

ளையின் மழலைச்சொல்லைக்கேட்டு மகிழ்வடைந்து அப்பிள்ளையின் சொல்லைத் திருத்திச்சொல்வதுபோல என்குற்றத்தையும் திருத்திக்கொள்ளுவார்களென்றுநம்பி அவர்களுடைய பாதாரவிந்தத்தையும் (வெண்டாமரையாளாகிய) சரசுவதியம்மன் பாதாரவிந்தத்தையும் வணங்கிச்சொல்லலுற்றேன்.

## கதையின்வரலாறு.

பொற்பிரகாசமமைந்த சிம்மாசனத்தில் சத்தியகீர்த்தி முதலாகிய மந்திரிகள் வணங்கவும்-கவிவாணர்கள் இணங்கவும் - கட்டியர்கள் கட்டியங்கூறவும் மன்னர்மன்னனாகிய அரிச்சந்திரமகாராஜன் மனதிற்களிப்பூறவும் - கன்னியர்கள் நிர்த்தனமாடவும் - தம்புரு-வீணை - கையிற்கொண்டு சிலமின்னார்கள்பாடவும் - வாத்திய கோஷ்டமுழங்கவும்-வகைவகையான-தானதருமம்வழங்கவும்- வானோர்கள்மதிக்கவும்-வந்தமன்னர்கள்துதிக்கவும்-வச்சிரமுடிபுனைந்து-வாகுவலயந்தோளில்தரித்து அழகியசெங்கோலைகரத்தினிலேந்தி அளகாபுரியைஅரசுசெய்யும் குபேரனைப்போலும்-பொன்னுலகத்தையாளும் புரந்தரனைப்போலும் அரிச்சந்திரமகாராஜன் அதிகமேன்மையுடன் ஆவலுடனே அரசியற்றிக்கொண்டிருக்குங் காலையினில்,

காசிமுதலிய சிவஸ்தலங்கள்தோறுஞ் சஞ்சரித்து அங்கங்கேயுள்ளதீர்த்தங்களிலாடி மிகவும் பெருமைபெற்ற சிலவேதியர் அயோத்தியாபுரியைஆளும் அரிச்சந்திரமகாராஜனைக் காணும்பொருட்டு அவ்விடமெழுந்தருளினார். அவர்கள் வருவதைக்கேள்வியுற்றமகாராஜன் மந்திரிபிரதானிமுதலாகியசேனைகள் சூழும்படியாய் எதிர்சென்று நமஸ்காரஞ்செய்து அழைத்துவந்து அரிதாகிய ஆசனமளித்து சோடசோபசாரமுஞ்செய்து வந்தனைவழிபாடுடனே எதிர்நின்று தேவரீர் சிறியேனை ஒருபொருளாயெண்ணி இவ்விடம் எழுந்தருளிவந்தது யான்செய்தபுண்ணியவசமோ - அல்லது என்னுடைய தாய்தந்தைகள்செய்த தவமோ - அன்றி எந்தன் சுற்றத்தாரியற்றிய நோன்பின்பலனோ-தெரியவராது; ஆயினும் தாங்கள் எந்தெந்ததீர்த்தங்கள் மூழ்கினீர்கள் எவ்வகையானதேசங்களைக்கண்டீர்கள் - அங்கங்கேஎன்னென்ன புதுமைகளைப் பார்த்தீர்கள் - அதனைஅடியேன் மகிழ்வடையும்படியாகஅருளிச்செய்யவேண்டுமென்று அவர்களுடைய பாதாரவிந்தத்தை வணங்கிக்கேட்க - அப்போது அந்தப்பிராமணர்கள் உளமகிழ்ந்து சொல்லத்தொடங்கினார்கள்.

ஓ! மகாராஜனேகேளும்; நாங்கள் அனேகசிவஸ்தலங்கள்தோ

றுஞ்சஞ்சாரஞ்செய்து-கங்கைகளில்மூழ்கி-மான்-மழு-சூலகபாலம்-கையிலேந்திய மகாதேவராகிய மயேஸ்வரனுடைய ஆலயங்கள்தோறும்வணங்கி-அங்கிருந்து-கன்னோசிநாட்டில், கண்டகி யென்னும் புண்ணியதீர்த்தங்களாடி - உம்முடையபெருமையும்-பிரதாபத்தையும்-அரசாளும் கீர்த்தியையும் உமது அயோத்தியாபுரியின் அலங்காரமுங்கேள்விப்பட்டு உம்மைக் காணும்படியாய் இங்குவந்தோம் - இன்னஞ்சொல்லுகிறோம்-சற்றேகவனமாய் கேட்பீராக - அந்தநாட்டினில் அதிகசிறப்புற்ற கன்னமாபுரியில்நடக்கப்பட்ட அரசும்-நீதியும்-பெரியோரிடத்தில்மிகவும் வாஞ்சையும் சத்துருசங்காரனும் மித்துருநண்பனும்ஆகிய-மதிதயமகாராஜனென்பவன் சந்ததியில்லாமல் தளர்வுற்றுசந்திரசேகரனைவருந்திதவம்புரிந்து அந்தமகாதேவர் வரப்பிரசாதத்தினால் அனேகதானதருமஞ் செய்துபெற்ற ஒருபெண்-அப்பெண்ணின்பேரோ(சந்திரவதி)ஆ ஆ-மகாராஜனே-அப்பெண்ணினழகுக்கு-இந்தமண்மாதரும்நிகரல்ல-அந்தவிண்மாதரும் நிகராகார்கள்-நாகமாதரும் அவளைக்கண்டால்நாணங்கொள்வார்கள்-மேலுங்கற்பினிலோ அருந்ததிக்குஎண்மடங்கு சாஸ்தியானவள் அவளுடையதிரேகவொழுங்கைச் சிலது சொல்லுகிறோம்- சற்றே செவிகொடுத்துக்கேளும் மகாராஜனே-(ஆ-ஆ-கேட்கக்கேட்கச் சிரவணாநந்தமும் சிந்தையில் வியப்புமுண்டாகின்றது இன்னஞ்சொல்லுவீர் சுவாமிகளே) அந்தமாதினுடைய-கூந்தலுக்குக்கடலும்-மேகமும் - கலக்கங்கொள்ளும்-அவளுடையஇருவிழிக்கு - இணையாகப்பாம்பும் - வண்டும்-வேலும்-சேற்கெண்டையையும் ஒப்பாகச்சொல்வர்-அதுவாகிலும் - வண்டானது அஞ்சி-காட்டிலுலாவுகிறது - வேலானதுபயந்து - சுப்பிரமண்ணியரிடத்திற் - போய்விட்டது, சேற்கெண்டையானது - திகைத்து - மயங்கி - ஜலத்திலொளித்திருக்கின்றது, அவளுடையமூக்கோ-குமிழம்பூ, அதரமோ - கோவைக்கனி, பற்களோ-முத்து, முத்தென்றாலும்-கடலிலிவளுக்கஞ்சி யொளித்திருக்கின்றது, மார்பிலிருக்குந்தனமோ-பொற்குடமும் -தங்கக்குடமும் - ஒப்புச் சொல்லலாம், இடையோ-வஞ்சிக்கொடியாகும், தொடையோ-செவ்வாழைத்தண்டாகும், இன்னஞ்சொல்லலாமென்றால் வேணதுண்டு இதுகளெல்லாமிருக்கட்டும் - ஓய்மகாராஜனே-அந்தசந்திரவதியென்றுசொல்லப்பட்ட சுந்திரியின்னுடைய பேரைக்கேட்ட சந்திரனென்பவன் நாணமுற்றுவாடி தன்னுடைய கிரணங்களை யெல்லாமறைத்து பூரணமானது நாளுக்குநாள்தேய்ந்து இராக்காலத்தில் கண்டுங்காணுமலுலாவித்திரிந்து நலிந்திடுகிறான்-அப்பேர்ப்பட்டசந்திரனே அப்படிவெட்கியுலாவியிருப்பானேயாமாகில்இன்னம்வேறேயுவமைசொல்லவேண்டுமோ-யோசித்துப்பாரும்அ

ரிச்சந்திரமகாராஜனே-இன்னமுஞ்சொல்லுகிறேம் கேளும்-அந்தமாதினுடைய சொல்லுக்குக்கிள்ளேயும்-அச்சங்கொள்ளும்- ஓசைக்குக்குயிலும் வெட்கப்படும், நடைக்கு-அன்னமும்-மயிலும்அயர்ச்சிகொள்ளும், அப்பேர்ப்பட்ட அணங்குக்குக்கற்பகக்காவில்வாசஞ்செய்யும் இந்திராணியும், சங்குசக்கரகட்கபாணியாகியதிருமாலின்மார்பில்வாழும்சீதேவியும், அன்னவாகனன்மனேவியாகிய வாணியும்-ஆச்சரியப்படுவார்கள், ஆ-ஆ-அவளைப்பெற்ற மதிதயமகாராஜன் சுகிர்தமேசுகிர்தம், மேலும் அந்தமாதை மாலைசூட்டுகிறவன்மகாபோகபாக்கியத்தையும்பெறுவான், வேனிலாளியாகியமன்மதனுசைக்குகந்த இரதியும்ஏக்கங்கொள்வாள், இப்பேர்ப்பட்ட அவயவலட்சணமுடைய அணங்கைப்படைத்தபிரம்மதேவனே யார்தான்புகழார்கள் என்றமறைகளாய்ந்த வேதியர்கள்வர்ணித்த வசமொனது அரிச்சந்திரமகாராஜன்செவியில் திவ்வியதேவாமிர்தத்தைச் சொரிந்தாற்போலாகி அந்தவேதியனாசாஷ்டாங்கமாகவணங்கிச்சொல்லத்துடங்கினன்.

பூசுரர்யாரும் புகழும்வேதவேதியர்களேகேளீர்கள் - ஆ-ஆ-தாங்கள்சொல்லும்போதே இவ்வளவு உற்சாகமும் - ஆசையும்-அன்புமானல் அந்தப்பொன்போன்ற மின்னுகியஒய்யாரமாதைக்கண்ணிறைக்கண்டால் என்னமாகுமோ - எவ்விதக்களிப்புண்டாகுமோதெரியவராது-ஆ-ஆ-ஆச்சரியம்-ஆச்சரியம்-என்றுவந்த வேதியர்க்குச்சொல்லி - அந்தமாது அரிச்சந்திரன்மனேவியென்றமுன்னமே பிரம்மதேவன்விதித்தவிதியினுல் அடங்காதமோகமுந்தாகமுஞ் சோகமுமிகுந்து புத்திகெட்டு அறிவுமடங்கி- நீதி-நெறியானதுஞ்சிதறிச் சந்திரவதியாகியமந்திரவலையைப் பிராமணர்கள் எடுத்துவீச-சுந்திரமேருபோன்றதோளேயுடைய அரிச்சந்திரமகாராஜனுகிய (மச்சமானது) வலையிலகப்பட்டமான்போல மயங்கிக்காமசுரத்தாற்றயங்கிக்களேயினுல்தியங்கி-கட்டுப்பட்டு-கருத்தயர்ந்து-கண்சுருண்டு-கையிற்குடையும்-மார்பில் முப்புரிநூலும் கொண்டஅந்தணரைப்பார்த்துச் சொல்லுகிறுன் - ஐயரோகேளீர்கள்-மாதர்க்கரசியாகிய சந்திரவதியை அடியேனுக்குவிவாகஞ்செய்துவைத்தால்தான் என்னுயிர்தரிக்கும், அடியேனைத்தாங்கள் சந்திரவதியென்கிறகாமக்கடலில் தள்ளிவிட்டீர்கள் ஆகையால்யான் கரையேறிஎன்னரசை யாளும்படியாக அடியேன்மீது தேவர்கள்கிருபைசெய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய- ஆரியகுலதிலகர்களாகிய-பிராமணர்கள்சித்தமகிழ்ந்து நமக்குமகாராஜனுல்மெத்தமரியாதையும்-கனமும்-தனமும்-கிடைக்குமென்று ஒருவர்க்கொருவர் கலந்துபேசிக்கொண்டு சொல்லுகிருர்.

ஆழிசூழ்ந்த அயோத்தியாபுரியை ஆளும் அரசர்க்கரசனுகி

யஅதிகசவுந்தரியமுடைய அரிச்சந்திரமகாராஜனேகேளும் - ஒப்பாருமில்லாத சுந்திரமிகுந்த சந்திரவதியை நீர்மணம்புணர எங்களால்ஆகவேண்டியது என்னென்றுமறையவராகிய அந்தணர்கள் கேட்க, வீரதீரனுகிய அரிச்சந்திரராஜன்சு வாமீ அடியேன்வையகமீதில்வாழும்பொருட்டாய் என்மீதிற்கிருபைசெய்து சீக்கிரம் கன்னமாபுரிக்குச்சென்று சந்திரவதியின் தந்தையாகிய மதிதயமகாராஜனைக்கண்டு அந்தப்பெண்ணைஎனக்குக்கொடுக்கும்படியான தந்திரவுபாயங்களைச்சொல்லி மதிதயமகாராஜன்மனதுசம்மதியாகும்படிசெய்து திட்டம்பண்ணிக்கொண்டு அந்தமகாராஜன்வாய்மொழியையுங் கேட்டுக்கொண்டு விரைவில்வருவீர்களென்று வேந்தர்வேந்தனுகிய அரிச்சந்திரமகாராஜன்கூற, அந்த மொழியைக்கேட்ட பிராமணர்கள் திரேகமெல்லாம் புளகாங்கித மெழுந்து பொங்கிவழியும்படியாய் ஓ மகாராஜனே? உம்முடையசொற்பிரகாரம் அப்படியேநாங்கள்சென்றுமதிதயனைக்கண்டுகலந்துபேசி அவர்மனதைக்கரைத்து உமதுபெருமையை அவருக்குரைத்து கலியாணநாளையும் நிச்சயப்படுத்திக்கொண்டுவருகிறோமென்று இஷ்டப்பிரியமாகச்சொல்லி மகாராஜனைவாழ்த்தி விடைபெற்றுக்கொண்டு அச்சபையைவிட்டெழுந்து கன்னமாபுரியைநோக்கிப்பிராமணர்கள்போனூர்கள்.

இப்பால் அரிச்சந்திரமகாராஜன்-மந்திரிகள் - பிரதானிகள் முதலாகியசேனைகளை அவரவர்களுடைய அரண்மனைக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தானும்அரசைவிட்டெழுந்து திருமனைக்குட்சென்றுகுளித்துபூசைமுடித்து உண்டிமுதலியஉணவையருந்திசுகந்தகதம்பங்களை மெய்யிலணிந்குபள்ளியறையிற்சென்றுபஞ்சணைமீதுபடுத்து சந்திரவதியென்னும்நினைவெடுத்து காமக்கடலுளாழ்ந்துமன்மதனுடைய பாணத்திற்பட்டு மயங்கி-வருந்தி-வாடி தியங்கி-தீராதமோகதாகத்திற்சிக்கிதளர்வுற்றநெஞ்சமானது சோர்வடைந்து தனக்குத்தானேசகியாமல் சொல்லுகின்றான் ஆ-ஆ-மின்னலைப்போன்றசந்திரவதியென்னும் தையலாகிய பெண்ணின் பேரைஎனக்குச்சொல்லி என்னைமயலாக்கி என்னுயிரைக் கவ்விக்கொண்டுபோனமறையவர் இப்போதுவருவாரோ - வரமாட்டாரோ-அல்லதுயேமாற்றினுரோ என்னமோவென்றேங்கிஇற்றைநாள்வரையில்-காமமென்னும் நோயில் கட்டுப்படாமல் கடினசித்தமாயிருந்த என்னுயிரானதைஇன்றையத்தினம்இப்பேர்ப்பட்டகாமத்தியில் கருகி-உருகி-வாடும்படியாய்கடாட்சித்தாயோகடவுளேயென்று கையைப்பிசைந்துமன்மதன்பேரிற்கோபித்து கடலைச்சீறிதென்றற்காற்றைச்சினந்துதுறிகூவுங்குயிலைத்துறத்திஎன்னுவைக்குரியமயிலணங்கைஎன்றுகாண்பேன் - எப்போதுசேர்வேன்-இ

ப்போது வேதனைசெய்யும்காமநோயை-எவ்விதந்தணிவேன்- எப்படிதணிவேன்-என்றுமறையவர்போனவழியை நோக்குவான்-வந்துகாண்பவர்மீது சினமுண்டாக்குவான், மலரயன்இப்படி வாடும்படியாகநமக்குச்செய்தவிதியோ-அல்லது பிராமணர்கள் செய்தசதியோ-மேலும்கார்காலகதியோஎன்றுகசிந்து, மனது நசிந்து, கலைகாணுக்கப்பல்போலும், மழைகாணுப் பயிர்போலும், காய்காணுச்சேய்போலும், தீயிற்பட்ட மெழுகைப்போலும், சந்திரவதியென்றபெயரைநினைந்து பஞ்சணையைத் தாவுவான், தனக்குத்தானேகூவுவான், மதிதயன்சம்மதித்தானோ இல்லையோவென்று தவிப்பான், பிராமணர்போனார்களோபோகவில்லையோவென்று கையைநெறித்துக்குவிப்பான், புரோகிதர் துரோகஞ்செய்வார்களோஎன்னமோவென்று புழுங்குவான், மாளுத்துயரத்தால்மனமழுங்குவான், இளவஞ்சிக்கொடிபோன்ற சந்திரவதியினுடைய-உள்ளம் என்னமாயிருக்குதோவென்றுஎண்ணுதவெண்ணமெல்லாமெண்ணி இறைபவனுகிய அரிச்சந்திரமகாராஜன்எழுந்து மந்திரிகள் யாவருஞ்சூழக் கொலுவில்வந்து வீற்றிருந்தான்-

அந்தக்காலையில் பிராமணர்கள்-காடு-மலை கான்யாறுமுதலாகியதுங்கடந்து அழகில்மிகுந்த கன்னமாபுரியென்னும்நகரத்தைச்சேர்ந்து மதிதயமகாராஜன் சபைக்குட்சென்றார்கள் அவர்கள்வருவதைக்கண்ட மதிதயமகாராஜன் எழுந்து எதிர்நோக்கிவந்துமுடிதாழ அடியில்பணிந்து அழைத்துப்போய் அவரவர்க்கு ஆசனமளித்து வீற்றிருக்கச்செய்து சந்தோஷித்துடன்அவர்கள்திருமுகத்தைநோக்கிச் சொல்லுகிறான். ஓமகாத்மாக்களான புண்ணியபுரோகிதர்களே தாங்கள்முன்பு அடியேனைக்கண்டு ஆசிர்வதித்துப்போனவர்கள் பின்னும்இங்கெழுந்துவந்ததுயாதுகாரணம் அதை அடியேனுக்குத் திருவுளம்பற்றவேண்டுமென்றுவிளம்ப, மறையவர்கள்(கேளும்மதிதயமகாராஜனே)நாங்கள் அயோத்திமாநகரஞ்சென்று அந்தநகரத்தையாளும் நீதிமிகுந்தஅரிச்சந்திரனைக்கண்டு அவனுக்குஉம்முடையநகர்வளமும் நாடுவளமும்நீதிநெறியும் நிலைமையையும்உமதரசின்பெருமையும் உம்முடையகுமாரத்தியின் சீரும்சிறப்பும்சொன்னோம்சொன்னளவில் அந்தஅரிச்சந்திரன்மனமகிழ்ந்து மிகவும்பூரித்து உச்சாகத்தோடுஉம்மைக்காணவும்உமதுகுமாரத்திக்கு மணவாளனுகவும் அவனுள்ளத்திற் கருதியிருக்கிறான், மேலும்அவனுடையபிரதாபத்தைச் சிலதுசொல்லுகிறோம்அதைநீர்கேட்கக்கடவீர், இந்தஆழ்கடல்சூழ்ந்தபூமிமுழுதும் யாங்கள்சஞ்சரித்திருக்குறோம்,அந்தந்தநகரத்தையாளப்பட்டஅரசர்களைக்கண்டும் அவர்களுடனேவார்த்தையாடியும்வந்திருக்கிறோம் அவர்களில் இந்தஅரிச்சந்திரமகாராஜனேவென்றால், சத்தியசந்த

னன்-சர்வகுணுளன்- நல்லோர்நேயன் - பெரியோருடைய வாஞ்சனையுள்ளவன் - சத்பாத்திரக்கையன் - தருமவுருவான மெய்யன்- தன்னுயிர்போல மன்னுயிரைக்காப்போன் - தயை தாக்ஷண்யமுள்ளவன்-தருமசீலன் - பிறர்பொருளுக் காசைவையாதவன் - நீதிநெறியுடையவன்-நிஷ்களங்கநிராமயஜோதியான கடவுளின்பாதத்தைமறவாதவன் - ஆறிலொருகடமை வாங்கப்பட்டவன் - அயோத்தியாபுரியை ஆளப்பட்டவன் - அதிவீரதீரசூரன் - அழகினில்மாரன்-ஆதுலர்க்குபகாரன் - ஆகையால் உம்முடைய குமாரத்தியாகிய சந்திரவதிக்குகந்த நாயகனவனேயாகும், அப்பேர்ப்பட்டவனுக்கு உம்முடைய குமாரத்தியைக்கொடுத்தால் உமக்கும்பெருமையாகும் எங்களுக்கும் சிறப்பு கிடைக்கும், சந்திரவதியும் நன்குறவாழ்வடைவாள், உமது சுற்றத்தாருக்கும் மேன்மை கிடைக்கும், தேசத்தரசர்களும் மகிழ்வடைவார்கள், என்றுசொல்லிய பிராமணரைப்பார்த்து மதிதயமகாராஜன்சொல்லுகிறன். ஐயரே, தாங்கள் சொல்லியதெல்லாஞ்சரிதான், ஆயினுந் தேவதேவராகிய சிவபெருமான் ஆதியில் திருவாய்மலர்ந்தருளிய தேவரகசியமொன்றுண்டு அதுதெரிந்தோர் யாவராயினுஞ் சரிதான் அவருக்குயான் தவமுந்தானமுந் தளர்வில்லாமற் செய்துபெற்ற சந்திரவதியைத் தபோதனராகிய தங்கள்திருவாக்கின்படியே தருவேன், ஆதலால் அவரை இக்ஷணம்நீங்கள்சென்று அழைத்துவரலாமென்றுகூறி முடியிற்கைகூப்பி அடியிற்பணிய அவ்வாறேசெய்வோமென்று ஆசீர்வதித்து அந்தணர்கள் அயோத்தியாபுரியைநோக்கிவருகின்றார்கள்.

அப்போது, மதிதயராஜன்மகிழ்ந்து தன்மந்திரிகளைப்பார்த்து ஓமந்திரிகளே என்குமாரத்தியாகிய சந்திரவதிக்குச் சுயம்வரம்இன்றுஏழாநாள் ஆகையாலதற்கு ஐம்பத்தாறுதேசத்தரசர்களும் வரும்படியாய் ஓலையெழுதி அனுப்பிவையுமென்றுஇயம்ப, அவ்வாறே மந்திரியும் களஞ்சியக் கணக்கனையழைத்து ஆக்கியாபிக்க, அந்தக் கணக்கனுமதற்கிசைந்து (ஆரிய - அங்க - வங்க-கலிங்க - வங்காள- மத்திர-மாகத-மதங்க -மச்ச - மராட - விராட-காரட - கர்னாடக- கன்னட - காஸ்மீர . கஞ்சக - கந்தர - காந்தார - காம்போஜ- காம்பீர - காளிம்ப - குருகு - குச்சர - குந்தள - கௌள - கேகய- கேரள - கொங்கண - கோசல - சவ்வீர - சங்கிராத - சிந்து -சிங்கள-சீன-சுதக்ஷண-சுரா-பாண்டீர - சூரசேன - சோழ - சோன- திராவிட -திரிகர்த்த - நிஷத - பப்பர - பவுண்டிர - பாண்டித்திய . புளிந்த - விதர்ப்ப - விதரூப - விதேக - ஓட்டதேச முதலான (அகண்டமண்டலாதிபர்களுக்கும்) மதிதயமகாராஜன் அறிவித்தசந்திரவதி சுயம்வர திருக்கலியாண திருமுகச்செந்திரிக்கை பெ

ன்னவென்றால், இன்றுதொடங்கி நாளேயேழாநாள்எனது குமாரத்தி சந்திரவதிக்குச் சுயம்வரம். ஆகையால், தாங்கள் என்னுடைய கன்னமாபுரிக்கு வருகவென்றெழுதி தூதுவர்கையிற்கொடுக்க, அவர்களந்த திருமுகச்செந்திரிக்கையை வாங்கிக் கொண்டுவிரைவிற்போய் ஐம்பத்தாறுதேசத்தரசர்களுக்கு மறிவிக்க, அவரவர்கள் அத்தக்ஷணமே ரதாரூடராயும்-சிவிகை-யானை-குதிரை முதலாகிய வாகனரூடராயும், சேனைகள்தாழவும், மந்திரிதந்திரிகள் சூழவும், கடலானது வளைந்திட்டதைப்போலக் கன்னமாபுரிபட்டணத்தைச்சுற்றிலும் வந்துநிறைந்தார்கள்,

அக்காலையில் யாத்திரைப்பிராமணர்கள், மெத்தவுஞ்சந்தோஷித்துடனே அரிச்சந்திரனைத் தேடிவருவதைக்கண்ட அரிச்சந்திரமகாராஜன் சிந்தைகளித்து தெய்வாதீனம் இன்று என்னெண்ணம் நிறைவேறிற்றென்று திடீலென்றெழுந்து எதிர்வந்தழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்கு ஆசனமளித்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து வாய்புதைத்துக் கைகூ[illegible]பி (சுவாமிகளே) தாங்கள் இந்தச்சிறியேனுக்காக இவ்வளவுபிரயாசையெடுத்துக்கொண்டதற்குள்ளுடையஜெனனமே தங்களுக்கு ஊழியஞ்செய்ய ஜெனித்தது போற்றோற்றுகின்றது. ஆயினும், தாங்கள் மதியமகாராஜனிடத்திற்சென்று சொன்னதும்,அவர்தங்களைக்கேட்டதும் அருளிச்செய்யவேண்டுமென்றுவினவ, தபோநிதிகளாகிய அந்தணர்கள் அரசனைப்பார்த்து மகாராசனே பூமியில் பெரியதவத்தைச் செய்தவனீயல்லாமல் மற்றியாவருண்டு, மகா சௌந்தரியமுடைய நுண்ணிய இடையைப்பெற்ற அன்னநடையையுற்ற சுந்திரம்பொருந்திய சந்திரவதியை உமக்கே திருக்கலியாணஞ் செய்துகொடுக்கமதியமகாராஜன் சம்மதித்துஉம்மையழைத்துவரச்சொன்னார் வாருமென்றழைக்க, அரிச்சந்திர மகாராஜனுக்குத் தேகம் புளகாங்கிதமுறவும், திருமுகமலரவும். புயங்கள்விம்மவும், கண்கள்குளிரவும், சந்திரவதியை எப்போது காண்போமென்ற அவாவானது தேடவும், மார்பினிற்றொங்குமாலைகள் அசைந்தாடவும், ஆரியர்கள்மீது அன்பானதுபெருகவும், அவர்களைப்பலவாறுபுகழ்ந்து அவர்களுக்குப் போசனத்துக்குவேண்டிய சாமக்கிரியைகளுங்கொடுத்து அவர்களையுண்ணச்செய்து பிறகு தன்னுடைய பட்டணத்திலுள்ள சேனைகளையும்-மாதர்களையும் - முன்பாகக் கன்னமாபுரிக்குப் போகச்செய்துதானும் தன்னுடையதேர்ப்பாகனையழைத்து அதிகவேகமும் அந்தமுமுள்ள அஸ்வத்தைப்பூட்டிச்சீக்கிரம் ரதத்தைக்கொண்டுவரச்செய்துஉடனே அரசைவிட்டுவெளியினில்வந்து குருவாகியவசிஷ்டமகாமுனிவரும் சத்தியகீர்த்தி முதலாகியமந்திரிமார்கள் நெருங்கும்படியாய் தேரிலேறியவுடனேசத்த

சாகரமுழக்கம்போல-முரசம்-சங்கம்-சின்னம்-காளம்; எக்காளம்-பூரி-பேரி-நாகசுரம்-புள்ளாங்குழல்-என்னும் வாத்தியக் கருவிகள் முழங்கவும்-விலாவினில்-அரிச்சந்திரன்தன்தேரை நடத்தினன்-

அந்தத்தருணத்தில், கவிகைகளும், ரத்தினத்தினலிழைத்தசிவிகைகளும், யானைகளும், சேனைகளும், குதிரைகளும், ஒட்டகங்களும்·அணியணியாய்நிறையவும், கட்டியர் கட்டியங்கூறிப்போற்றவும், பாவலர் ஆசீர்வாதங்கள் சாற்றவும், மாதவரநேகர் மங்களவாழ்த்து வாழ்த்தவும், மன்னர்கள்மகிழ்ந்து வர்ணிப்புடனேத்திப்போற்றவும், சமுத்திரத்தைப்போல் யானைகள்செல்லவும் அலையைப்போலக் குதிரைகள்நடக்கவும். தன்னுடன்கூடவரப்பட்டவர்கள் யாவரையுந்தரையில் நடக்கவொட்டாமல் சிவிகைமீதும்குதிரையின்மீதும் ஏறிவரச்செய்தும் வெள்ளைக்குடையும் பவளக்குடையும் பக்கங்களிற்பிடித்துவரவும் முத்துக்குச்சமைத்துமேலேதங்கக்கலசம்வைத்த குடைகள் கவியவும், சதகோடி சூரியனுதித்தாற்போல அரிச்சந்திரமகாராஜன் புறப்படவேந்திநிறைந்தஜோதிக்கொடிபறக்கவும்,ஆதித்தன்குலமானதுசிறக்கவும், வெண்சாமரம்வீசவும்,விவாகமங்களத்தை வீதிகளில்நின்றோர்பேசவும், மன்னர்மன்னனாகிய அரிச்சந்திரமகாராஜன் அநேகசேனைகள் நெருங்கவும் காடுமலைகானாறுகள் பலவாகக்கடந்து நல்லகுளிர்ச்சிபொருந்தியகோமதிநதியை யடைந்தான். அப்போதுசூரியனும்மேற்குத்திசையிலிறங்கவே மன்னவனும் மற்றசேனைகளும் அவரவர்கள் ஏறிவந்த வாகனங்களை விட்டிறங்கி அவ்விடந்தங்கி யானைகளோர்புறமுங் குதிரைகளோர்புறமும் ஒட்டைகளோர் புறமுங்கட்டி அதற்குத்தக்கின உணவுகளைப் புகட்டினர்கள்,மற்றும்சிவிகைகளொருபக்கமும் கவிகைகளொரு பக்கமும்வைத்து தாங்களும் போசிப்புமுதலாகிய துமருந்தி மகாராஜனுக்கு வேண்டிய பணிவிடைகளெல்லாஞ்செய்து அவரவர்கள் நித்திரையிலிருந்தார்கள் அரிச்சந்திரமகாராஜனுக்குச் சந்திரனுற்பத்தியாகி சந்திரவதியென்றபேரைக்கியாபகமாக்கி-நித்திரையைநீக்கி - மோகதாபத்தையுண்டாக்கி-கருத்தானது சந்திரவதியின்பேரிற்றிரும்பி அதிகவருத்தமுங்காமவேதையுந்தீர்ப்பேனென்கிறதாய்சமுத்திரதீரத்தில்சூரியனுதயமானன்.அக்காலையில் அவரவர்கள்மீண்டும் தங்கள்தங்கள்வாகனங்களின்மீதிலேறினர்மகாராஜனும்தன்னுடைய நித்தியகாலக்கடனைமுடித்துக்கொண்டு தம்முடைய குலகுருவாகிய வசிஷ்ட மகாமுனிவரும்சத்தியகீர்த்தியும் மற்றவர்களும் ரதத்திலேறினர்களேறியவுடனே அந்தப்புண்ணியநதியைக்கடந்து மகாராஜனவன் சுந்தரமலையையுஞ் சிறப்புமிகுந்த சந்தமால் கிரியையுந்தாண்டி அரிதாகிய-பலா-தென்னை-புன்னை-வாழை-மாமரம் - வாசனை மிகுந்த

சம்பங்கி-சோங்கு-சண்பகம்-அசோகு-மல்லிகை - முல்லை - ஆகிய சோலைகளையுந்தாண்டி அங்கிருக்கும்நதிகளில் யாவரும்நீந்தி விளையாடி கரையேறி நல்லமலர்களைக்கொய்து வாசனைநுகர்ந்துக்கொண்டு அந்தவனத்தைக்கடந்து சமுத்திரம்போலச் சேனைவெள்ளஞ்சூழ்ந்துவரவும், யானைகள்கதும்பவும், குதிரைகள் கனைக்கவும், சிவிகையினிற் பதித்தரத்தினமும் முத்தும் பவளம் சூரியனது ஒளியினாலேயிரகாசிக்கவும் சத்தரிஷிகள் ஆசீர்வாதம்புரியவும்சோலைகளில்வண்டானது தேனையருந்துவதற்காக இதழ்விரிந்தபூவின்மேலுட்காரவேண்டித்தாவும்போது அப்புஷ்பங்கள் ஆகாயத்தின்மீதுதேவர்கள் பூமாரிசொரிதல்போல அரிச்சந்திரமகாராஜனுடைய இரதத்தின்மேரிற்சொரியவும் அதிகசீருஞ் சிறப்புமிகுந்த நற்பெயரினைக்கொண்ட முனிவர்கள் வேதவேதியர்கள் யாவருந்தொழுதுதுதிக்கும்படியாகிய வனதுற்காபரமேஸ்வரி வீற்றிருக்கும் பாலைவனத்தில் வந்திறங்கினார்கள்.

அவ்விடத்தில் ஒருதிருக்குளமுண்டு அந்தத் திருக்குளத்தில் திவ்வியதாமரையும், அல்லியும்படர்ந்து இளநீரைப்போல ஜலமுமிருப்பதைக்கண்டு-மகாராஜனும்-வசிஷ்டமகாமுனிவரும். மந்திரிசத்தியகீர்த்தியும் - ஆச்சரியப்பட்டு-ஆ-ஆ, இந்தப் புண்ணியதீர்த்தத்திற்போய் ஸ்நானஞ்செய்வோமென்று யோசனைசெய்து இறங்கி ஸ்நானம்பண்ணி காலநியமங்களை முடித்துக்கொண்டார்கள்- அப்போது மன்னர்மன்னனாகிய அரிச்சந்திர மகாராஜனுக்குமனம்பூரித்து-எனதுகுருவாகிய-வசிஷ்டமகாமுனிவரோ- அப்பா சத்தியகீர்த்தி-இந்தப்புண்ணியநதியை நான்காணவும்-இதில் ஸ்நானஞ்செய்யவும் நித்தியகடனைமுடிக்கவும் லபித்தது-நான்செய்த தவமோ-என்னுடைய தாய்தந்தைகளியற்றிய நோன்போ-எனதுமாபோர்செய்தவெள்வியோ-அறியேன், ஆகிலும் இந்தத் தடாகமே இவ்வளவு உன்னிதமாயிருக்குமானால் இந்தவனமுழுதும் என்னவிநோதமாயிருக்குமோ அறியேன், ஆகையால் இந்தவனமுழுதுஞ் சுற்றிப்பார்த்து வரவேண்டும் என்பேரில் தயவுகூர்ந்து வாருங்களென் றழைக்கவே அவர்களுஞ்சம்மதித்துவர அக்ஷணமே மகாராஜன் புறப்பட்டு அந்தவனத்தின் பெருமைகளைப் புகழ்ந்து சொல்லலுற்றான்.

இந்தப்பாலைவனத்தில்-மாமரம்-பலாமரம்-தென்னை-வாழை-செவ்வாழைமுதலிய கனிவர்க்கவிருக்ஷங்கள் பழுத்துக்கமழ்கின்ற பரிமளமும்-மல்லிகை-முல்லை - சம்பங்கி வெள்ளாம்பல் செவ்வாம்பல்-பாதிரி-புன்னை-மரு-சோங்கு மந்தாரையென்று சொல்லும் பலபுஷ்பச்செடிகளில் மலர்கள் புஷ்பித்து அலர்ந்து வாசனைமணக்கும் விநோதமும், அம்மரங்களில் உச்சிதக்கிளிகளை களுட்கார்ந்

தோன்றுடனென்றுகூடிக்குலாவிப்பேசுகின்றவேடிக்கையும்,குயி
ற்கூட்டங்கள் கிளைகளின்மீதிருந்து கேளிவிலாசமாய்க்கேட்பவர்
செவிக்கு இனிப்பாகவும் இதயமகிழும்படியாகவும் கூவுகிறவோ
சைகளும்,பார்த்தீர்களா இவ்விடத்தில் சித்திரக்கலாபத்தைவிரித்து
உன்னதமாகமயில்கள்தழைந்த மரங்களின்கீழிருந்தாடுகிற அலங்
காரங்களும்,அவ்வாடலுக்குச் சரியாகப்பின்னுஞ்சில பஞ்சவர்ண
க்கிளிகள் பன்னிப்பன்னிப் பேச்சாகியபாடலைப்பாடுகிறதும்,அத
னைக்கண்டு எவ்வர்ணமுள்ள அன்னங்கள்நடனம்புரியவும்,தெய்வ
லோகமாதர்கள்கண்டுநாணங் கொள்ளும்படியாகநடக்கிற விநோ
தங்களையும் நானிதுவரைக்கும் எங்குங்கண்டதில்லை நமக்கே இவ்வ
ளவுவியப்பைத்தருமானால் நல்லசவுந்தரியமுள்ள நாயகிநாயகரிரு
வர்கள்இவ்வனம்வருவார்களேயாமாகில்அவர்கள் எப்பேர்ப்பட்ட
ஆவலும்அவாவுங்கொள்ளார்கள் மேலும்தண்டுகமண்டலங்கையிற்
கொண்டமகாரிஷிகள் தவஞ்செய்யப்பட்ட இடமோ அல்லதுவன
தேவதைகள்வாசஞ் செய்யப்பட்டதோ-ஆ-ஆ,தாமரையில்வாசஞ்
செய்யும்சரஸ்வதி வீற்றிருக்கப்பட்ட இடமோ. ஸ்ரீதேவியானவள்
வாசஞ்செய்யுமிடமோ,அந்தக்கற்பகக்காவிலுறையும் இந்திராணி
யிருக்கப்பட்ட இடமோஅறியேன்,ஆயினும்இந்தவனமே இவ்வள
வுஅலங்கார அற்புதமாயிருக்குமேயானால் இதையாரால் மதித்துச்
சொல்லக்கூடும் ஆயிரம்நாவையுடைய ஆதிசேஷனுஞ்சொல்வத
ரிதுதான்·மேலும்இந்தவனத்தினுள் அதோஒருதிருவாலயந்தோற்
றுது அந்தஆலயத்தில்வாழுங்காளிகா பரமேஸ்வரியைக்கண்டுபணி
ந்துஅந்தத்தாயின் திருவருளும்பெற்றுவருவோம் வாருங்களென்
றுகூற,அப்படியேஅவர்களும் மகாராஜன்வார்த்தைக்குடன்பட்டு
வர சந்நிதானத்தினுட்புகுந்து அந்ததிரிசூல கபாலியைத்தியானி
க்கலுற்றான்.

சங்கரி-திரிசூலி-தாருகவினசனி-சௌந்தரி - ஓங்காரி-உன்னை
ப்போற்றிவணங்கும் புண்ணியவான்கள்துயரைப்போக்கும்பார்வ
திசத்தமாதர்கள் அனுதினமும்வந்து சாமரைவீசி தாளினைப்பணி
யப்பெற்ற சர்வலோகேஸ்வரிபலகலையுந்தெரிந்தபாவலர்கள்பாடி
த்துதிக்கும் பக்தவற்சலிமாதவரியாவரும் வாஞ்சையுடனேவாழ்த்
திப்போற்றுமகேஸ்வரி இந்திரசந்திராதியர்கள் இடைவிடாமலே
வல்செய்யப்பெற்ற இரட்சகிபொற்கிரீடம் பொற்சுட்டி புனைந்த
புராதனி ஒருகரங்கத்தியும்-மற்றொருகரம்பத்திரமும்-ஒருகையில்
மழுவும்-ஒருகையில்வச்சிராயுதமும்-பிரகாசம்பொருந்திய வாளு
ங்கொண்டவைரவிசித்திரவிச்சித்திரமுடைய சிம்மவாகினியென்று
மஞ்ஞனமிடப்பட்டவரும் இருவிழிக்குமைதரிக்கப்பட்டவரும்ம
லர்களைக்கொய்து மாலைதொடுப்பவரும் ஆகியஇடாகினிகள்அநே

ஞ்சூழ்ந்து அர்ச்சனைசெய்யவமைந்த அன்னையே! நானாவிதமான ஆபரணங்களைப்பூண்ட நாரணி, திரியம்பகனுடனே நிர்த்தனஞ் செய்ததேவதேவிகடககங்கண கேயூரமணிந்தகாளிகாபரமேஸ்வரி சரப்பளி தாழ்வடந்தரித்த சாமுண்டி கெட்டிக்கொலுசு - சுருள் கொலுசு-பாடகம்-பாதத்தில்தரித்த பரமேஸ்வரி அடையலர்களை அதாகநம்பண்ணும் ஆரணிஅரிதற்கரிதாகியகாரணி நண்பருடைய சிந்தையிலிருக்கும் தாரணிமாந்துளிர்போன்ற மேனியையுடையவராகி-கரியமேகம்போன்றகூந்தலையுடைய கன்னிகாபரமேஸ்வரிசந்திரன்போன்ற வதனத்தைவாய்த்ததாயேகின்னம்போன்றதனத்தையுடையகிளிமொழியாளே-தாளம்போன்றபற்களையுடையதாயே-த வுதற்சரிய பாதாரவிந்தத்தையுடைய சர்வலோகநாயகி-திரிபுரதகனி - திரியம்பகி - உனதுமகிமையை நானென்ன சொல்வேன் உன்னைத்துதித்துவணங்கஎன்னாலாகுமோ நாயினுங்கடையேனாகியஎன்னையாட்கொண்டாளுவாய் அகிலாண்டேஸ்வரிநான் வரும்போது என்கண்முன்பாக உன்னுடையசந்நிதியிலிருந்தகற்றேரும்-கற்குதிரையும்-கற்சிலையும்-கற்கணையும்-இப்போது எல்லாம்பொன்னாகத்தோற்றுகின்றது ஈதென்னகாட்சியோ.யார்செய்தசூட்சியோஅறியேன்என்றுவாடித் துதித்திருக்குங்காலையில்முற்காலத்தில்கல்லாகச்சமைத்த சிகரத்தையுடையதேரும்-குதிரையும்-வில்லும்-அம்பும்-பொன்னானதைக்கண்ட அரிச்சந்திரமகாராஜன் அச்சமும்அயர்வும்-ஆகிமெய்வருந்தி சிந்தைதளர்ந்து இதுவென்னவிந்தையோஎன்று மெலியுங்காலையில் அந்த காளிகாபரமேஸ்வரி சிம்மவாகனரூடியாய் சந்நிதியைவிட்டு அரிச்சந்திர மகாராஜன் முன்பு பிரசன்னமானாள்.

அந்ததேவியைக்கண்டமகாராஜன் ஏத்தித்துதித்து நன்குறப்பணிந்து யெந்தனை ஆட்கொள்ளவெழுந்த பக்தரக்ஷகிய உன்னைப்பணிந்துபுகழ அடியேனாலாகுமோயென்று வாய்பொத்தி இருகாமுங்குவித்து சிரசின்மேல்வைத்துயாரும்நாடுதற்கரிய நாராயணியே-நாயேன்உன்னுடைய திருச்சந்நிதிக்குவரும்போதுஇவ்விடத்திருக்குங்குதிரையும் இரதமும்-வில்லும் - அம்பும்-கல்லாகக்கண்டேன் இப்போதுமறுபடியும் அதுகளெல்லாம்என்கண்ணுக்குப்பொன்னாகத்தோன்றுகின்றது அதுஎன்ன நியாயமோஉன்னுடையமாயமோ-அறியேன்,அதனை-அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்றுபணிய அப்பாலை வனத்தில்வாழுங் காளிகாபரமேஸ்வரி அதன்மகிமையைச் சொல்லலுற்றாள்.

ஓய் - அரிச்சந்திரமகாராஜனே இந்தசமுத்திரஞ் சூழ்ந்தமண்ணுலகைவிட்டுநீங்கிய வருணமகாராஜன் முன்னாளில் இதனை யிவ்விடத்திற்கொண்டுவந்துவைத்து ஒருவரும் அபகரிக்காதவண்

ணம் இதுகளைக்கல்லாகச்சமைத்து எனக்குக்காண்பித்து இவைக ள்யாருடைய நேத்திரத்திற்குப் பழையவுருவாகிய பொன்னுரு வாகத்தோன்றுமென்று கண்டுசொல்லுகிறார்களோ அவர்களே இ தற்குரியராவார் அவருக்கே இதனைக்கொடுப்பாயென்றுஎன்வசத் தில்வைத்துப்போனான்! அதுகள் இந்நாள்வரையில் ஒருவருக்கும் அப்படிக்குத்தோற்றாமலிருந்து இப்போது உன்னுடைய நயன த்திற்குமாத்திரம் பொன்னாகத்தோற்றியதால் உன்னுடைய புண் ணியவசமேவசம் நீநினைத்துப்போகிறகாரியமுஞ் சித்தியாகும்பு த்திரகளத்திராதி போகபாக்கியங்களையும் பெறுவாய் உனக்குவரு கிற இக்கட்டுகளெல்லாம் சூரியனைக்கண்டபனிபோல நீங்கும் நீந ல்லதருமசுரூபியாகையால் உன்கண்ணிற்குப் புலப்பட்டது, மே லும்இதுவரையில் எத்தனையோராஜராஜாக்கள் மகானுக்கள்-மகா ரிஷிகள்-சித்தர்கள் முதலானவர்கள் என்னுடைய சன்னிதானத்தி ற்குவந்ததுண்டு, அவர்களுக்கு இதுபுலப்பட்டதுமில்லை, அவர்க ள் என்னைக்கேட்டதுமில்லை. நான்வெகுநாளாய் பாதுகாத்துவை த்திருந்தேன், இப்போது நீசொன்னதுவுண்மைதான், ஆகையால் இதனைநீயே ஆளக்கடவாயென்று அன்னையாகியதுர்க்கி ஆசிர்வதித் து அதுகளைக்கொடுக்க அயோத்தியாபுரியைஅரசாளப்பட்ட அ ரிச்சந்திரமகாராஜன் அதிகமகிழ்வோடு அதனைப்பெற்றுக்கொண் டு அந்தவனத்துற்காதேவியைப் பலவாறுதுதித்துப் பாதாரவிந்த த்திற் பணிந்து பக்திவிசுவாசத்துடனே அப்பரமேஸ்வரியினது அனுக்கிரகமுந்திருவருளும் ஆசிர்வாதமும் அம்மகாதேவியினிட த்திற் செலவும்பெற்றுக்கொண்டு அந்தத்தேரைநிறுத்திஅவ்விடத் திற் கனகமயமாயிருக்கும்-குதிரை-யானை - முதலாகியதை அதனி ற்பூட்டி வெளியினிற்கொண்டுவந்து மெத்தவும்வியந்து வசிஷ்ட மகாமுனிவரையும் சத்தியகீர்த்தியையும்அதனிலேறச்செய்துபொ ன்வில்லையும் அம்பையுங்கரத்தினிலேந்தி. அம்புறாத்தூணியை மு துகினிற்றூக்கி-ஆ-ஆ நாம்செய்தபாக்கியமோ நமக்கு நாயகியாக வருகின்றநங்கையாகிய சந்திரவதிசெய்த பாக்கியமோ என்று ந கைபுரிந்துதேடப்போனதிரவியம்காலில் தட்டுப்பட்டதைப்போ லும்?சேற்றிற்புதைந்தமாணிக்கம் மழையினிலடித்துக்கொண்டுத ன்முன்பாகவந்ததைப்போலும்,அரிச்சந்திரன் அகமும்முகமும்அ லர்ந்து-அங்கம்பூரித்து-தான்சாரதியாகவுட்கார்ந்து தேரை விரை வாகநடாத்திக்கொண்டு தன்சேனைகளிருக்குமிடத்திற்கு வந்தான்.

அப்படியாகவந்தவுடனே அஸ்தமனமாகையால்யாவரும்மு க்கனிசர்க்கரையோடு அறுசுவைபதார்த்தத்துடனமைந்த அன்ன முண்டபின்புவந்தசேனைகள் அயர்ச்சியாகி உறக்கங்கொண்ர்கடா

ள். மகாராஜனுந்தன்னுடைய வேவுகாரர்களால் அமைத்தபஞ்ச
ணையிற்போய்ப்படுத்து காத்தினிஃஜங்கணைகொண்ட அரும்பாவி
யாகிய அங்கதன்செய்யும் வாதையைச் சகிக்கமாட்டாமல் அதிக
மோகக்கடலிலாழ்ந்து அரிவையர்க்கரசியாகியசந்திரவதியின் திரு
முகத்தையென்றுகாண்பேன் திருமங்கில்யம்எப்போது அவள் க
ழுத்திற்பூண்பேன் என்றைக்குஅவளுடைய இஞ்சொல்லைக் கேட்
பேன் இச்சையுடனேயென்றுசேருவேன் என்னாவலைஎவ்விதத்திற்
தீர்ப்பேன்என்று அந்தஇராவெல்லாம் அவள்மீதிலேயே கருத்தை
ச்செலுத்தி கசிந்துநசிந்துகண்ணுறக்கங்கொள்ளாமல் கலங்கிய த
ருணத்தில் சூரியனும்உதயமானான். அப்போதுயாவரும் எழுந்து
காலக்கடனைமுடித்துக் காளிகாபரமேஸ்வரி கொடுத்த ரதத்திற்கு
திலாகளைப்பூட்டி மகாராஜனுக்குத்தெரிவிக்கமகாராஜனும் வசிஷ்
டரும்-சத்தியகீர்த்தியும்-மூவரும்-சந்தியாவந்தனை முதலிய நித்தி
யவிதிகளை முடித்துக்கொண்டு ஆடை-ஆபரணங்களை அலங்கார
மாகத்தரித்து அம்மூவரும் தேரிலேறினார்கள். உடனேசூதனானவ
ன்தேரைநடத்தவே ஒருபுறம்கரிகள்சூழ்ந்துநடக்கவும் - மற்றொ
ருபுறம் பரிகள்சூழ்ந்துவரவும் - சேனைவெள்ளங்கள் சமுத்திரம்
போலநெருங்கிவரவும் - வெள்ளைக்குடை-முத்துக்குடை - கவியவு
ம்-சாமரைவீசவும்-சந்தனம்-புனுகு-கஸ்தூரி-வாசனைகள் - எங்குங்
கமழவும்-நாரியரனேகர்நடனம்புரியவும்-பேரிகைமுதலியவாத்தி
யங்கள்முழங்கவும்-வேதவேதியர்கள்வாழ்த்தவும்-வேந்தர்கள் முடி
தாழ்த்தவும்-விருதுக்கொடிபறக்கவும் - அரிச்சந்திரமகாராஜன் கீ
ர்த்திசிறக்கவும்- மதிதயன்மகளுக் கேற்ற மணவாளனிவனாகுமெ
ன்றுநகைசெய்தல்போல முல்லைமலரவும்-சந்திரவதியின் ஸ்தனத்
தைக்காட்டல்போலக் குவிந்ததாமரைவிரியவும் - நல்லகாலம் நல்
லகால மென்று-அல்லி-ஆம்பல்-மலரவும்-சந்திரவதியாகிய மின்னா
ளுக்குக்கணவன் வருகிறானென்று இசையையுடைய தும்பிபறக்க
வும்-கிள்ளை மொழியையுடைய சந்திரவதிகேள்வன் வருகிறானென்
றுகிள்ளைகள்பாடவும் குயிலிசையையுடைய சந்திரவதியின் குண
த்திற்கிசைந்தமணவாளன்வருகிறானென்று குயில்கள்கூவவும் - அன்
னநடையையுடைய சந்திரவதியினழகுக்கிசைந்த அனங்கன்வருகி
றானென்று அன்னங்கள்முன்புநடக்கவும் - செந்நெல்-சம்பா-சாலி-
கருஞ்சாலி-முதலியநெற்கதிர்கள் செழித்துதாமரைமுகமுடையச
ந்திரவதிக்குத்தகுந்த கணவனிவனே தகுந்தகுமென்று தலையசை
ப்பதுபோலக் கதிர்கள்சாய்ந்தாடவும்-வருதலைக்கேட்ட மதிதயம
காராஜன் சீக்கிரத்தில் தன்னுடைய பட்டணத்தின் வீதிகள்தோறு
ம் பச்சைப்பந்தலிட்டு மகரதோரணம்-மாந்தோரணங்கட்டி - வா
ழை-பலா-முதலியதும் நாட்டி-தென்னங்குலை - ஈச்சங்குலை - முத

லியதுங்கட்டி- தயார்செய்து எதிர்பார்த்துக்கொண் டிருக்கையில்
அரிச்சந்திரமகாராஜன் கன்னமாபுரிநகரம் வருவதைக்கண்ட மாத
ர்களும் - ஆடவர்களும் - என்னசொல்லுகிறுரென்றால் அளகாபுரி
யை ஆளப்பட்ட குபேரனே - அல்லது இரதிதேவியைச்சேரும்
மாரனே-சுவர்க்காதிபதியாகிய இந்திரனே - மாதர்கள் வதனத்தை
க்கவ்வுஞ்சந்திரனே-அன்னவாகனமேறும் அயனே - ஆழ்கடலிற்
றுயிலும் ஆயனே-சூரசம்மாரஞ்செய்த சுப்பிரமணியரோ - என்
று ஆடவர்கள் பலவாறுபுகழவும் - சந்திரவதிசெய்த தவமோ - இந்
தச்சுந்திரநாயகன் கிடைத்ததென்று சொல்லவும், மதிதய மகாரா
ஜன் வருந்திப்பெற்ற வருத்தந்திரத்தக்கதாக வாய்த்த மணவாளன்
வல்லமையே வல்லமையென்று சாற்றவும் - இந்தப்பட்டணம்புரி
ந்த நோன்போ-இந்தப்புண்ணியவா னிங்குவந்ததென்று புகலவு
ம்-கைநிறைந்த பொன்னைவிட கண்ணிறைந்த கணவனைக்கண்டா
ளே சந்திரவதியென்று சழறுவாரும்-எங்களரசியாகிய சந்திரவதி
யின் கணவன் வருகிறுனென்று ஆலாத்திசுற்றுவாரும் - திருவுக்குச்
சமதையாகிய சந்திரவதியின் திருமணுளன் வருகிறுனென்று திருஷ்
டிகழிப்பாரும் - முத்தாலாத்தி - பவளாலாத்தி யெடுத்துச்சுற்றிக
ண்ணேற்பார்த்து கருத்திற்செழிப்பாரும்ஆகி - அப்பட்டணத்திலு
ள்ளவர்கள் இன்னமநேக விந்தைவிந்தையா யெடுத்துரைக்கவும்மு
ன்னூடியாய்வந்த மகாராஜர்கள் முழித்தகண்கிமிட்டாமற் பார்க்க
வும் சூரியனைப்போல அரிச்சந்திரமகாராசன் சேனைகள்சூழ, கன்
னமாபுரிநகரின் வீதியிற்புகுந்து அவ்வீதியின் அற்புதங்களையும்அ
லங்காரத்தையும் பார்த்துக்கொண்டு அவ்வூரிலிறங்கினுன்.

இப்பால்மதிதயமகாராஜன்தன்பட்டணத்தில்வந்தமகாராஜா
க்களையெல்லாம் சபாமண்டபத்திற்குவரும்படியாய் பறைசாற்று
ம்படி மந்திரிகளுக்குத் திட்டம்பண்ணவே அவர்களும்பறையறை
வோனையழைப்பித்து தெருக்கள்தோறும் பறைசாற்றும்படி ஆக்
கியாபிக்க அவ்வாறேசெய்தார்கள் உடனே அதனையறிந்ததேசதே
சத்தாசர்களும் மந்திரிகளும் மதிதயனியற்றிய சபாமண்டபஞ்
சேர்ந்து-மதிதயனுல்-பலமரியாதைகளுஞ் செய்யப்பெற்று அவ
ரவர்களிருந்தார்கள் - பிறகு அரிச்சந்திர மகாராஜனும் குருவாகி
யவசிஷ்ட மகா முனிவரும் தான் நினைத்தகாரியத்தை நிறைவேறச்
செய்த பிராமணர்களுஞ்சூழ அந்த வீதியிலுள்ளோர்கள் யாவரு
ந்துதித்துப்போற்ற மாடவீதி-மறையோர்வீதி - வைசியர்வீதி-ம
ன்னன்வீதி - சூத்திரர்வீதி - இன்னமுள்ளவீதிகளி னுல்லாசத்தை
யும்-மதிதயமகாராஜன் பெருமைகளையும்-அவனுடைய குணுதிசய
ங்களையும், அவ்வூரில்வாழுங்குடிகளுடைய சிறப்பையும் கற்பின்மி
குந்த கன்னியர்களுடைய நிலைமையும் - அவர்கள் தெரிவையுங் கூ

௫

டவரும் பிராமணர்களாற்சொல்லக்கேட்டு - இந்திரபுரியும் இதற்
கீடல்லவென்றும் இப்படியிலுதித்தசந்திரவதியே இவ்வூருக்கு இல
ட்சுமியென்றும், சிலமறையோர் சொல்லவுங் கேள்விப்பட்ட அ
யோத்திமகாராஜன் மனமுவப்பெய்தவும் பெரியோர்கள் சூழவும்
வருவதைக்கண்ட மதிதயன்முதலிய யாவருமெழுந்து வந்தனை வ
ழிபாடுசெய்யவும் மதிதயமகாராஜன் அரிச்சந்திரனைத் தழுவவும்
ஆசனத்தில்வதிஷ்டருஞ் சத்தியகீர்த்தியுடனும் அநேககோடிநக்ஷ
த்திரங்கள்சூழ மத்தியில் ஒருசந்திரனிருந்து ஒலிப்பதுபோல இ
ராஜராஜர்களாகிய நக்ஷத்திரக்கூட்டங்கள் மத்தியில் - ஒருசந்திரன்
போல அரிச்சந்திரமகாராஜன் இனிதுவீற்றிருந்தான்.

இப்படியாக சபாமண்டபத்தினுள்ளே கீர்த்திபொருந்திய
மன்னவர்களும் - கலியாணத்தைவிரும்பிவந்தவேந்தர்களும் - சுற்
றிலும்நிறைந்த மந்திரிமார்களும், இன்னமுண்டாகிய பேர்களும்
சர்ருவது கண்ணிமைகொட்டாமல் அரிச்சந்திரமகாராஜன் வதன
த்தைப்பார்த்து அதிரூபவிசித்திர அணங்காகிய சந்திரவதிக்குத்த
குந்த கணவனிவனேயல்லது வேறொருவருந் தகாதென்று சொல்
லுங்காலையில் சித்திரப்பிரதமைபோல அரிச்சந்திர மகாராஜன் தி
கைத்து வேறொரு உத்தரமுஞ்சொல்லாமல் தனக்குள்தானே சிந்
தையில்மகிழ்வுண்டாகி - வேலாயுதத்தையொத்த விழியையுடைய
சந்திரவதி நல்லதவஞ் செய்திருப்பாளாயில் என்னுடைய புயமும்
மார்பும் அவளுக்குப் பொருந்துமென்று மயலுற்றுவாடினான், அ
ப்போதுமதிதயமகாராஜன் முன்புபரமசிவனாரருளிச்செய்த திரு
வுளப்படியே சந்திரவதியின் திருக்கழுத்தினுற்றமங்கிலியம் இவன்
கண்ணுக்குப்புலப்பட்டு இவனே நாயகனானால் நான்செய்த தவமு
ம்என்மகள்செய்ததவமும் பெரிதாகியதவமாகும்- அது இவன்கண்
ணுக்குத்தோன்றாமற்போனால் எல்லாத்தவமும் அவமாகுமே யெ
ன்றெண்ணி அளவில்லாத துக்கசாகரத்திலழுந்தி, அரிச்சந்திரன்மு
கத்தைநோக்கி-வியப்புற்று-இனிநம்மால் ஆகவேண்டியது ஒன்று
மில்லை - ஆதியிலருளிச்செய்த ஐயனுடைய திருவுளச் செயற்ப
டியமையுமென்று தியக்கங்கொண்டு மண்டபத்தினுள் வந்த மகா
ராஜரைப்பார்த்து நீங்கள்யாவரும்இந்தக்கலியாணமண்டபத்துள்
நாளையத்தினம் வரவேண்டும் இன்றைத்தினம் அவரவர் வந்தி
ருங்கியிருப்பிடம்போய் வாருங்களென்று சொல்லவே வந்தமன்
னர்களும்-மந்திரிமார்களும் மற்றுமுள்ளோர்களுஞ் சென்றார்கள்
அரிச்சந்திரமகாராஜனுஞ் சென்றான்.

அப்போது அச்சபையில் சந்திரவதியின் பாங்கியொருத்திவ
ந்திருந்தனள் - அவள் அவ்விடத்தில் நடந்தசங்கதிகளியாவற்றையு
ங்கேள்விப்பட்டு சந்திரவதிக்குச் சொல்லும்படியாய் விரைவிலோ

டிசந்திரவதியிருக்கும் அந்தப் புரத்திற்குப்போய் நிற்பதைக்கண்
டசந்திரவதி சந்தோஷமாகி நீ சீக்கிரமாக ஓடிவந்தகாரிய மென்
னவென்றுகேட்க - அந்தத்தாதி அடிபணிந்து - அம்மணீ உன்னை
க்கலியாணஞ் செய்யவந்த மன்னர்கள் அநேகம்பேருண்டுஅவர்க
ளில்-ஆ-ஆ - அயோத்தியாபுரியை யாளப்பட்ட அரிச்சந்திரமகா
ராஜனென்றொருவர் வந்திருந்தார் அவருடைய சுந்தரமுள்ள திரு
முகத்தைக்கண்டேன் அப்படிக்கண்ட எனக்குமறுபடியும் இவ்வி
டம்வர மனமுந்தோன்றவில்லை - காலும்எழவில்லை - வேறொன்றி
லுங் கருத்தும் நாடவில்லை ஆகிலும்-கிரியைப் போன்ற புயமும்
திருத்தமான கண்ணும் - வாள்போன்றவிழியும் - இரவலர்க்கு இல்
லையென்னுமற்கொடுக்குங் - கரமும் - இந்தப் பூமியிலுள்ள மாதர்
உயிரையெல்லாங் கொள்ளைகொள்ளும்முகமும் - பவளம்போன்ற
வாயும்-வாசனைவீசும் மாலையயுடைய மார்பும் - மகரகுண்டலம்
பொருந்தியகாதும்-கண்டமாதர்கள் மயங்கிவீழ்ந்தாலும் வீழ்வர்
மாண்டாலுமாள்வர்-பட்டமரங்கள் தழைத்துப்பூர்க்கும்படியாகி
யநகைப்பும் - இப்படியாகவந்த மன்னனைக்கண்ட கண்கள்மற்று
மின்னும்வந்திருக்கப்பட்ட வேந்தரைநோக்கவே யில்லை-அவரது
செய்கையை விசாரிக்கையில் பின்னும் விசித்திரமாகவே விளங்கு
கின்றது. அதையுஞ்சொல்லுகிறேன்சற்றேகேள் - மகாசத்தியசந்த
னனும்.சத்பாத்திரசீலனும் - தனக்கொருவர் நிகரில்லானும் - அதிக
தனவானும்-மிகவுங்கனவானும்-அடுத்தவரை யாதரிக்கும் வல்லவனு
ம்-அரியாதிகளுக்கு மிகவும்நல்லவனும்-அடையலர்க்குக்காலனும்-
அரிவையர்க்கனுகூலனும் - அறிவொருகடமை வாங்குவோனும்-அ
ரசர்நொந்தால் தாங்குவோனும் - அவன்பட்டணத்தில் மாதமும்
மாரிசொரியுமாம் - புலியும்பசுவுங் கூடிக்குலாவித்திரியுமாம் - மா
ரனிலுமிகுந்தவடிவன் - வாஞ்சையன்புடையவன் - என்றுதோழி
பலவாறுகவர்ணித்துச் சொல்லுவதைக்கேட்ட ஓவியம்போன்றகா
வியங்கண்ணையுடையசந்திரவதி-தக்ஷணந்- தன்னைமறந்தாள்-கையி
லிட்டவளையலையும்-உடுத்திய ஆடையையுந்துறந்தாள்-பெற்றஅன்
னையைவெறுத்தாள் - உண்ணுமுணவைமறுத்தாள் (அடிபாங்கி) கா
தலாகினேனேயொழிய அவரைக்கண்ணிலேகாண்கிலேனே இப்
போதென்று அயர்வாள்-பின்னும் அடிக்கடியோடி- வாசனையுடை
ய-கலவைச்சேறும்-சந்தமும் - புழுகும்-கஸ்தூரியும் - வாரிவாரி
மேலெங்கும்பூசுவாள் - மன்னவனைக் காணேமேயென்று பேசுவா
ள்-தாதியையேசுவாள் - கையைநெரித்துவீசுவாள் - உதட்டையும்ப
ற்களையுங்கடித்துக்கூசுவாள் - ஆசையாகிய காமக்கடலில் ஆழ்ந்தி
அதிகமான துயரப்படுவாள்-அயோத்தியாபுரியைவிட்டு என்னைநா
டிவந்தஅந்தமன்னவனுள்ளம்எப்படிவாடுமோ-எவ்விதமாய்த் தே

டுமோவென்றாளெண்ணுவாள்-மன்னவனுக்குமாலைசூட்டி வையுமெ ன்றுகடவுளைத்துதிபண்ணுவாள் காமன்மேற்கோபிப்பாள் - அவ ன்விடுங்கணைகளைத்தையுஞ்சாபிப்பாள் - காதல்கொடுக்குங்கிளியைய க்குயிலைத்தூறுவாள் - கடுகடுத்துச்சீறுவாள் கலவிக்குரிய பருவமா ச்சேயென்பாள்கண்டால்மாத்திரம்உயிர்வைத் திருப்பேனென்பா ள் இப்படியாகசந்திரவதிவாதைப்படுகையில் திங்கட்குடைகவியவு ம்தென்றற்றேரினிலேறி-மூரசம்-ஆரவாரிக்க - மகரகேதனம்ஒலிக் க-கருப்புச் சிலையையூன்றி - இசைகளைப்பாடும் கருப்புவில்லைக் கொண்டு - தாமரைஅஸ்திரம் - அசோகாஸ்திரம்-முல்லையாஸ்திரம் மாம்பூஅஸ்திரம்-எடுத்துமன்மதன் பவனிவந்துமையலாக்கிக் கணை களையொன்றென்றாகச் சந்திரவதிமனத்தினிடத்தே விடுக்கவே-அ வளுடைய உடல்முழுதும் பொருந்தி திங்களின் செந்தீயானது யெரிக்கவே ஆசையானதுபெருகிக் கண்ணீர்ததும்பப் பஞ்சணை யின்மீது சுழன்று வீழ்ந்துசொல்வாள்,

கேளாய்திங்களே-கண்ணில்லாத அரூபியாகிய பாதகக் காம னுக்குறவாகினையோ - ஆ - ஆ, உன்பெயரைத்தரித்தும் உனக்கு க்கொஞ்சமாவது மனமிரங்கவில்லையோ - ஓ - மன்மதா - முன்னொ லி-உன்னைக்கொன்று உருவமில்லாமற் செய்தவரைக் கொல்லுவதல் லவோ உன்னுடைய வீரத்தன்மை - அதைவிட்டுப் பேதமையாகி யபெண்ணாய்ப்பிறந்த என்னைக்கொல்லுவது மிகவும் உமக்கு எளி ைமாகுமேஎன்று பலவாறாகப்பேசி அன்றிரவைத்துலைத்து அம ளியில் அயர்ந்தாள்-அப்போது அஞ்சாதே - அஞ்சாதே - அந்த அரிச்சந்திரனை இன்றையத்தினங் காண்பிக்கிறேனென்று தூங்கு கின்றவளை யெழுப்பவருவதுபோல அரிச்சந்திரன் குலத்தலைவனா கிய சூரியன்காலையி லுதயமாகினன்.

அப்போதுமதிதயமகாராஜனுடைய சுயம்வரமண்டபத்தில் வேந்தரும்மந்திரிமாருங்-வேதவேதியருங் - முனிவர்களும்- இரவ லர்களும் மாதர்களும்வந்து சேர்ந்தார்கள் - அரிச்சந்திரமகாராஜ னும்கூடவந்த மற்றவர்களும்வந்து நிறைந்தார்கள் - அத்தருவா யில் மதிதயமகாராஜன் தாதிகளையனுப்பித் தன்மகளை யழைத்து வரச்சொல்லி ஆக்கியாபிக்க. அவ்வாறேதாதிகள்சென்று அம்மணி இன்றையத்தினம் உன்னெண்ணம் நிறைவேறிற்று எழுந்துவருவா யென்று அழைத்துக் கொண்டுபோய் சந்திரவதிக்கு - அப்பியங்க ஸ்நானஞ்செய்வித்து தேகமுழுதும்-மஞ்சட்காப்பிட்டு மயிரை ஆற்றிக்-கோதி-சீவிச்சிணுக்கறுத்து-கொண்டையிட்டு- சடையில்லை சூச்சுக்குப்பிகுடி-மல்லிகை- முல்லை-இருவாட்சி - சண்பகம் - குரு வேர்-மருக்கொழுந்து-முடித்து,இருவிழிக்கு-மைதீட்டி- திலர்தப் பொட்டை நெற்றியிலிட்டு - கம்மல் - சிமிக்கை - கத்திரிப்பாவல்

ஒன்னப்பு-கொப்பு.மயிர்மாட்டிமுதலியதுங் காதுக்கலங்காரமா
கப்பூட்டி, வச்சிரப்புலாக்கு - முத்துத்தொங்கலிட்டநத்தும்-மூ
க்குக்குச்சூட்டி-நெற்றிக்குச்சுட்டிகட்டி,பொன்காப்பு-தங்கக்கொ
லுசு-காத்தினிலிட்டு, கைவிரலுக்குத்தக்க நகையுமிட்டு, முத்துமா
லை-பவளமாலை - மாணிக்கப்பதக்கம் - மார்பினிற் றெருங்கவிட்டு,
சுருள்கொலுசு-கெட்டிக்கொலுசு-காலுக்கலங்கரித்து, கால்விரலு
க்குகந்த ஆபரணமிட்டு. நவரத்தினகசிதமயமான சரிகைரவிக்கை
யுந்தரித்து, அதிகவிலைபெற்றஆடையை இடையிற்கட்டி, பொன்
மயமான ஒட்டியாணத்தா லிறுகச்செய்து, அற்புதவிசித்திர அல
ங்காரமுள்ள பல்லக்கிலேற்றித் தாதிகள் தாங்கவும், பச்சைக்கு
டை - முத்துக்குடை - நவரத்தினக்குடைபிடிக்கவும், வெண்சாம
ரை-ஆலவட்டப்-தாலவட்டம் - வீசிவரவும், விரைவினிற்கொண்
டுவந்து சபையில்விடவே, அந்தச் சந்திரவதியானவள் சபாமண்
டபத்துள் அன்னம்போலுலவி, பாங்கியரை அருகிலழைத்துஇந்
தச்சுயம்வரச்சபையில் வந்திருக்கின்ற மன்னவர்களுடைய பேரு
ம்-ஊரும் - அவர்கள்நீதி - நெறியும் - இன்னதின்னதென்று எனக்
குத்தெரியும்படியாய்ச் சொல்லிக்கொண்டு வருவீர்களென்னவே
பாங்கியர்கள் சொல்லத்தொடங்கினார்கள்.

கார்போன்ற குழலையுடைய (சந்திரவதித்தாயே) இவர்குட
நாட்டரசன், சந்திரவதனத்தைவாய்ந்த எங்களரசியே) இவர்தான்
தமிழைவளர்க்கும் பாண்டியமகாராஜன், வேலையும் வண்டையும்
அயரச்செய்யும் விழியையுடைய (ஆரணங்கே) இவர்புனநாட்டர
சன்,கோவைக்கனியைப் பழிக்கும்வாயையுடைய(கோமளமே)இ
தோயிருக்கின்றவர் - குருநாட்டரசன், மகாமேன்மைபெற்ற மு
த்தையொத்த பற்களையுடைய(பாக்கியவதியே) இங்கிருக்கின்றவர
சன்-குருரோசன், குமிழப்பூவையொத்தநாசியையுடைய மதியம
காராஜன் (குமாரத்தியே) இவர்மகததேசத்தரசன், சங்கைப்போ
ன்ற கழுத்தையுடைய (தங்கமே) இவர் கவுடதேசத்தரசன், தங்
கக்குடத்தையொத்த ஸ்தனத்தையுடைய (சந்திரவதித்தாயே) இ
தோ யிருக்கின்றவர் சிந்துதேசத்தரசன், ஆலிலைபோன்ற வயிற்
றையுடைய யெங்கள் (அன்னமே) இவர் வளநாட்டரசன், எறு
ம்பூறும் உரோமவரையையுடைய (சித்திரக்கலாபமே) இவர்தான்
பாஞ்சாலதேசத்தரசன், இளவஞ்சிக்கொடியையணைந்தஇடையை
யுடைய எங்கள் (அரசியே) இவர்தான்காந்தாரதேசத்தரசன், வா
ழைத்தம்பத்தையுற்றத் துடையையுடைய (மயில்போன்றவளே)
இங்கிருப்பவர் கலிங்கதேசத்தரசன், காந்தட்பூவையொத்த கரத்
தையுடைய (கன்னியர்க்கரசே) இவர் அவந்திதேசத்தரசன் - செ
ண்டைப்போன்ற முழங்காலையுடைய (பெண்மயிலே)இவர்மத்தி

நதேசத்தரசன், மாந்துளிர்போன்ற வடிவத்தையுடைய (மங்கை
யே) இவர்மச்சதேசத்தரசன், அன்னநடையைப் பின்னிடச்செ
ய்யும் (அமிர்தமே) இவர் கேகயதேசத்தரசன், வையகமாதரியாரு
ம்வந்துபணியும் மலர்ப்பதத்தையுடைய (மனோரஞ்சிதமே) இவ
ர்குலநாடரசன், எழுதுதற்கரியசித்திரப்பாவையையொத்தஎங்கள்
(அம்மணி) இவர்தான் அயோத்தியாபுரியை அரசாளப்பட்டஅரி
ச்சந்திரமகாராஜனென்று சுட்டிக்காட்டி- அவள்சுண்டுவிரலைக் கிற
வே, உவகையெய்தி - உட்காரத்தினோடுநோக்கிய - சந்திரவதியான
வள்-தாதிகள்நமக்குச்சொன்னதைவிட பார்த்ததில்-பதின்மடங்
கு-அழகினிற்சாஸ்தியாயிருக்கிறானென்று-மற்றொரு சிந்தனைபு மி
ல்லாமல் - இன்னம்வந்திருக்கும் மன்னவரையும் - சிந்தையில் உ
ன்னாமல்-மாலைஇவருக்கேசூடவேண்டும் - வாழ்ந்தாலும்- இவரிட
த்திலேயே வாழவேண்டும்-மருவினாலும் இவரையே மருவவேண்
டும்-புத்திரர்களைப்பெற்றாலும்- இவருக்கேபெறவேண்டும்- பேறு
பெற்றாலும்-இவர்கையினாலேயே பேறுபெறவேண்டும்-அப்பால்
தெய்வசங்கற்பம்-எப்படியாமோ - எவ்விதமாய்ப்போமோ என்
ணப்படியே முடியுமா-முடிந்தால் நான்செய்த தருமமும் - தா
னமும்-நோன்பும்-சித்தித்ததென்றும் - நம்மைப்பெற்ற தாய்த
ந்தையர்கள்-மெத்தஉத்தமர்களாவார்களென்றும்-ஏகோமனதாய்க்
கடவுளையும் - தங்களிஷ்டதேவதையையுந்தியானஞ்செய்துக்கொ
ண்டு அன்னம்போல - அச்சபையினிலுலாவிக்கொண்டிருக்கையி
னில், அரிச்சந்திரமகாராஜன்தவிர - மற்றும்வந்த மகாராஜர்கள்
ஓ ஓ-இம்மாதோ-தெய்வலோகத்து மின்னலெல்லாந்திரண்டு ம
திதயமகாராஜன்புத்திரியாய் வடிவங்கொண்டு வந்திருக்கின்றனள்-
நம்மைப் பார்க்கவுமில்லை - இன்னாரினியாரென்று கேட்கவுமில்
லை - அப்படிக்குப் பார்த்தாலுங் கேட்டாலும் - அதனால் நமக்
கொருபலனுமில்லை- நமக்கும்வாய்க்கத்தக்கதல்ல - நாமுஞ் சுவர
க்ஷணைபண்ணமாட்டோம்-மேலும்-அம்மாதுக்கு-நம்மில் - யாரி
டத்திலும் நாட்டமில்லை-கண்ணுங்கருத்தும் நீரோட்டம்போல-
வேறோரோட்டமாகத் தோற்றுகின்றது - நாமெண்ணிவந்ததுவீ
ணெண்ணந்தான்- என்றுநானாவிதமாக-ராஜராஜர்கள் பேசிக்கொ
ண்டுநல்லது எப்படியாகுதோ-ஈஸ்வரசங்கற்பமெவ்வாறாய்ப்போ
குதோபார்ப்போமென்றுஇருக்கும்போது(இராஜாதிராஜனாகிய)
அரிச்சந்திரமகாராஜன்-தான்கொண்ட அவாநீங்க-அடிமுதல் - மு
டிவரைக்கும்-அம்போருகம்போன்ற கண்ணினால் அளவிட்டுப்பா
ர்த்து-பின்னும்முகத்தைப்பார்த்துச் - சந்தோஷப்பட்டுக் கழுத்
தைப்பார்த்துச்-சற்றே கவனங்கொண்டு - அரிச்சந்திரனும் தான்
கொண்டஅவாநீங்க அதிகவியப்புடன்பார்த்து - ஆ-ஆ - நம்மை

இந்தப்பிராமணர்கள் ஏமாற்றினாலல்லவா - இதோ பார்த்தீர்களா ராஜராஜர்களே-இந்தமாதுமூலனம் யாருக்கோமாலையிட்டவள் அதற்கத்தாட்சியாக-இதோ இவளுடையகழுத்தில் மாங்கில்யமிருக்கின்றது - மேலும் - அந்தநாயகனை என்னமோசஞ்செய்தாளோ தெரியாது-நல்லது இந்தமதிதயமகாராஜனுவது ஒருவனுக்குமுன்னம்விவாகஞ்செய்துகொடுத்து பின்னும்மற்றொருவனுக்குமாலையிடச்செய்வதுநீதியா கையினிற்செங்கோற்கொண்டு வையகத்தையாளுகின்ற மன்னவர்க்கடுக்குமா நாமும்இப்பேர்ப்பட்ட அநீதியாகிய காரியத்திற்கு உடன்படுவது உத்தமமா ஓ - ஓ - ஒருவனைமோசஞ்செய்வதும், ஒருவன்பொருளை அபகரிப்பதும், ஒருவன்தாரத்தையிச்சிப்பதும் - பஞ்சமாபாதகத்தைவிடமகாபாதகமல்லவாவென்றுசொல்லவே-மற்றபார்த்திபர்களும், அந்தச்சந்திரவதிகழுத்தைப்பார்த்து ஏதோவொன்றுமில்லையே-இவர்மாத்திரம் இப்படிச்சொல்வதென்ன-இந்தமாதின்பேரிற்கொண்ட - வெறியினுல்-மதிமயங்கிற்றோ-அல்லது - கண்பலவாறுயிற்றோ - காமமயக்கந்தலைக்கேறிற்றோ-இந்தமாதைக்கண்டதினுல்கருத்துமாரிற்றோவென்று காசிமன்னர்கள் புகலவும் இதுகளைக்கேட்ட மதிதயமகாராஜன்-கலகலவென்றுநகைத்து - கடவுள்சொன்னதைநினைத்து காரியமனுகூலமாயிற்றென்றும் - நமது- செல்வதிக்குமணவாளன் வாய்த்தானென்றும் சித்தங்களித்து திரட்சியாகவந்திருக்குமன்னவனைப்பார்த்துஇவர்சொன்னதுமெய்தான் -ஆதியில்பரமசிவன் எனக்கு அருளிச்செய்தது யாதெனில்-இந்தமாதினுடைய திருக்கழுத்தில் அழியாத திருமங்கில்யம் ஒன்றுஉண்டாக்கினோம்- அதுயார்கண்ணிற்றோன்றுகின்றதோ அவன்தான் இந்தமாதுக்குமணவாளனுவானென்றும்-மற்றவர்களுக்கு மங்கிலியம் புலப்படாதென்றும்,திருவாய்மலர்ந்தருளிய வண்ணம் இப்போது இவர்கண்ணிற்கண்டபடியினுலே இவரே கணவனென்றும் - என்னெண்ணப்படியே நிறைவேறிற்றென்றும், எனதுகுமாரத்தியின் விரதமும் சம்பூர்ணமாயிற்றென்றுஞ் சொன்னுன்.

இதனைக்கேட்ட ராஜராஜர்களும் வேதவேதியர்களும்-பிரதானிகளும்-அமைச்சர்களும்-மறுவார்த்தையொன்றுஞ்சொல்லாமல் அசைவற்றசித்திரம்போலவிருந்தார்கள், அந்தச்சமயத்தில் அரிச்ந்திரமகாராஜன் ஆக்கிரம வியாக்கிரமம்போல ஆரோகணித்து-ஆ-ஆ-ஒரு அரசனுக்காகவும் - அவாளித்தபேதைமையையுடைய ஒருபெண்ணுக்காகவும் - ஆதிபகவானுகிய சாம்பசிவமூர்த்தி இப்பேர்ப்பட்ட ஆச்சரியகாமான அலுவல்செய்வாரா- இவ்விடம்வந்திருக்கும் ஆருக்கும்அவள்கழுத்திலிருக்கும் - மங்கில்யந்தோன்றுமல் எனக்குமாத்திரந் தட்டுப்படும்படி வைப்பாரா வையார்-நீங்

களெல்லாரும் ஒருமிக்கக்கலந்து உறவாடிமதிதயமகாராஜனுக்குஉ
ட்பட்டதால் உங்களுக்குத் தோன்றவில்லையென்று உரைத்தீர்கள்
ஆகிலும், அந்தக்கடவுளானவர் அவ்வாறு செய்வாராஞல் அவ
ருடையமகிமைக்குத்தான் அது அழகாகுமா-அப்படியாஞல் இ
ந்த மதிதயமகாராஜனுக்குத்தான் இந்தப்பெண்ணிஞல் ஒருபெ
ருமை கிடைக்குமா - கிடைக்காது நல்லது - அந்தப்பெண்ணின்
கழுத்தில்தான் இரண்டுமங்கில்யங்கட்டலாகுமா - அவனுக்குத்தா
ன்அப்படிசெய்துக்கொள்வதில் புகழுண்டாகுமா - உண்டாகாது
தமக்காகப்பாடுபட்ட இந்த மகானுபாவராகிய பிராமணர்களுக்
குத்தான் மேன்மையாகுமா ஆகாது - அப்படியாகப் பரமசிவ
ஞனவர் அருளிச்செய்திருப்பாராகில் இந்தச்சமயத்திலும்உதவி
செய்யமாட்டாரா-அவர்தான் இன்னம்பார்ப்போமென் றிருந்தா
லும்இந்தப்பூமியாகாயம்பொறுத்திருக்குமா - ஒருக்காலும்பொ
றுக்காதென்றுசொல்லவே - இவ்வுளவைக் கண்டறிந்த வசிஷ்டம
காமுனிவர் - மதிதயனைப்பார்த்து- ஓ - மதிதயமகாராஜனே அரி
ச்சந்திரன் சொன்னதும்-ஆச்சரியமாயிருக்கின்றது - அதற்குகந்
தாப்போல நீரும் அதுஉண்மைதான்-அப்படியாகத்தான் - கடவு
ளனுக்கிரகஞ்செய்திருக்கிறுரென்றுஞ் சொல்லுகிறீர்- வந்திருக்கு
ம்-மகாராஜாக்களெல்லாஞ் சந்தேகப்பட்டு வாய்திறந்து மறுவா
ர்த்தையொன்றுஞ் சொல்லாதிருக்கின்றுர்கள்- ஆகையால், அது
நிஜப்படும்படியாகவும்-இவ்விடம்வந்திருப்பவர்கள் மனச்சந்தே
கம் நீங்கும்படியாகவும்-அந்த மாதுசிரோன்மணியின்கையில் ஒ
ருபூமாலையைக்கொடும் - அதைபந்தஅணங்கானவள் சுற்றி யாகா
யத்திலெறியட்டும் அது அரிச்சந்திரன் கழுத்தில் விழுகின்றதோ
மற்றெவ்விதமாய்ப்போகின்றதோ அதன்பின்பு கண்டறியலாமெ
ன்று வசிஷ்டமகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளவே (அவ்வாறேம
திதயமகாராஜன்) அலர்ந்துவாசனைகமழும் ஒருபூமாலையைஅழை
ப்பித்து மங்கையின் அங்கையினிற்கொடுத்து ஆகாயத்தினிற்சுழ
ற்றிவிடச் செய்ய அந்தக்ஷணம் அம்மாதானவள் மகேஸ்வரனை
த்தியானித்துப் பூமாலையைச் சுழற்றிவிடவே அந்தமாலையானது
அரிச்சந்திரன் திருக்கழுத்தினில்வந்துவிழவே - யாவருங்கலகலெ
ன்று சிரித்து கருத்தினிற் சந்தோஷித்து மதிதயமகாராஜன் சொ
ன்னது மெய்தானென்றும் அரிச்சந்திரமகாராஜனே மாதர்க்கர
சியாகிய சந்திரவதிக்கு மணவாளனென்றும் வாழ்த்திஞர்கள். அ
ப்போதும் அரிச்சந்திரன் அச்சங்கொண்டே மௌனமாகவிருந்
தான் அத்தருணத்தில் ஆகாயத்தில் அசரீரிவந்துநின்று (ஓய்-அரி
ச்சந்திரமகாராஜனே) மற்றுமுள்ளோர்களே முன்ஞல் மதிதயம
காராஜன் மகப்பேறுக்காக மாதவஞ்செய்கையில் பரமசிவஞனவ

ர் அந்தம்கா பதிவிரதையாகிய சந்திரவதி திருக்கழுத்தில் திருமங்
கிலியம் ஒன்று உண்டாக்கி இதையாருடைய கண்ணுக்குந் தோன்
றாது. திருமங்கிலியம் இவள்கழுத்தில் உண்டென்று யார்சொல்லு
கிறார்களோ - அவன்தான் அந்தமாதுக்கு மணவாளனென்று அரு
ளிச்செய்தது உண்மைதான்-அந்தத்தேவரகசியம் இதுவரைக்கும்
ஒருவருக்குந் தெரியாமலிருந்து இப்போது உன்னால் வெளிப்ப
ட்டபடியால் நீர்தான் அந்தமாதுக்கு மணவாளன் - அவள்தான்
உமக்குநாயகி - இதுஉண்மையென்றுசொல்லி மறைந்தாள் அக்கா
லையில் ஆகாயத்தில் புஷ்பவருஷிந் தேவர்கள் சலசலவென்றுபொ
ழிந்தார்கள்.

அப்போது -அரிச்சந்திரன் - மதிதயமகாராஜனையும் - வேத
வேதியரையும்-பலவாறுபுகழ்ந்துமங்களித்தால்-வந்தமகாராஜர்
களும்-அரிச்சந்திரனைப்புகழ்ந்தார்கள் - இப்பால்மதிதயமகாராஜ
ன்-நல்லசுபநாளைப்பார்த்து - வயிற்றுப்பொருத்தம் -கழுத்துப்
பொருத்தம்-இதுகளையும்-நல்லலக்கினமுங்கோறி-முத்துப்பந்தல்,
பவழப்பந்தல்-பச்சைப்பந்தலிட்டு-வாழை. கமுகுநாட்டி-மணவ
றையிட்டு-குத்துவிளக்கு-குடவிளக்கேற்றி - மகரதோரணம் -மாந்
தோரணங்கட்டி - அரிச்சந்திர மகாராஜனுக்கும்-சந்திரவதிக்கும்-
நலங்கிட்டு - மணவளாயி லுட்காரச்செய்து - வசிஷ்டமுனிவரும்
வேதவேதியரும், கவிவாணரும். மற்றவரும், சேஷையிட்டு, ஆசி
ர்வாதம்செய்யவும், அரிச்சந்திரன்கையால் சந்திரவதிக்கு மங்கிலி
யந்தரிப்பித்து, அம்மிமிதித்து - அரசாணிசுற்றி அருந்ததியைக்
காட்டி-முகூர்த்தத்தை நிறைவேற்றி - வந்தராஜராஜர்களுக்கும்-ம
ற்றவர்களுக்கும், தாம்பூலம்-சந்தனம் - புஷ்பமுதலியது - அறுசு
வையுண்டிமுதலாகியதும்-அளித்து - வேதவேதியர்களுக்கும் - யா
சகர்களுக்கும், வஸ்திரதானம்-சொர்ணதானம் - அன்னதான முத
லாகியதும்-அளித்து-அவரவர்களுக்குச் செய்யவேண்டிய வந்தனை
வழிபாடுகளை-மதிதயமகாராஜனும் அரிச்சந்திரனுஞ்செய்ய - அதி
கமகிழ்வோடு, ஐம்பத்தாறு தேசத்தரசர்களும்-அவர்களிடத்தில்வி
டைபெற்றுக்கொண்டு தங்கள்தங்கள் ரதகஜதுரகபதாதிகளும்சே
னாவிதவாத்தியகோஷங்கள்முழங்கவும் - அரிச்சந்திரமகாராஜ
னுக்குச்சந்திரவதிவாய்த்தசந்தோஷப் பெருக்கைப்பேசிக்கொண்
டு காடு-மலை-காடுகள்கடந்து அவரவர்கள் நகரத்தைப் போய்ச்
சேர்ந்தார்கள்.

பின்பு-மதிதயமகாராஜன் வசிஷ்டமகாமுனிவரைப்பலவாறு
வந்தனை வழிபாடுடனே இருகரங்குவித்து இடம்புரி வலம்புரிட்
சுவந்து - இணையடியில் விழுந்தெழுந்து எதிர்நின்று - சுவாமிதங்க

ஈ

ளுடைய திருவருளினாலல்லவோ - எனது சுவபுத்திரிக்கும் - மாலை சூடலாயிற்று-மாலைசூட்டின மன்னவனுமல்லவோ-பஹோனுபாவராயும்-நித்தியானந்த சைதன்னியராயும்-நிஷ்களங்க ரகிதமானசாம்பசிவ மூர்த்தியைப்போன்ற தங்களுடைய சேர்வையையுங் காணப்பெற்றேன்-ஆ-ஆ, அதுவே நான்பெற்றபாக்கியம் ஆகையால்தாங்கள் இன்னுஞ்சிலநாளிவ்விடமிருந்து அடியேனால்தங்களுக்குவேண்டிய யேவலைப்பெற்றுப் பிறகு போகவேண்டுமென்று மதிதயமகாராஜன் வேண்டிக்கொள்ள அவ்வாறே வஷிஷ்டமகாமுனிவருஞ் சம்மதித்திருக்கப்-பின்பு வேதவேதியராலும் ஜோதிடர்களாலும்-நல்லலக்கினமும்-நக்ஷத்திரமும்-கோறி - சுபசோபனத்திற்குநன்மையான ஒருநாளை நியமித்தார்கள்.

அப்படி நியமித்தநாளில் அரிச்சந்திரனும் - சந்திரவதியும்-உண்டி முதலியதருந்தி - மல்லிகை - முல்லை-சம்பங்கி - முதலிய மலர்கள் பரப்பிய சப்பிரகூட மலரணையில் இருவரும்போய்ச்சேர்ந்து - சந்தனகஸ்தூரிமுதலிய கலவைகளை ஒருவர்க்கொருவர்திரேகத்திற்பூசிக்கொண்டு - அடைக்காய்வெள்ளிலையோடு-ஜாதிக்காய்-சாபத்திரி-ஏலம்-லவுங்கம் - முதலாகியவைகளென்றும்-ஒருவர்க்கொருவர்-இன்றும்-பின்பு ஆகத்தோடாகம் அழுந்தவும்-கரத்துடன் கரம்பற்றவும்-மார்புடனமார்பு நெருங்கவும்,முகத்தினுடன்முகம்பொருந்தவும் முத்துமாலையசையவும் - முகத்தினின்வேர்வைகசியவும்-இருவர்கருத்தும் ஒருமைப்படவும் மங்கையின் காதலும்-மணவாளனாசையுந் திரும்படியாய் - மதனாகமத்தின் வழிமுறைப்படி-நாகமுஞ்சாரையும்போலும்-அன்றிலும்பேடையும்போலும்-இரதிமதனைப்போலும்,சுப்பிரமணியர்வள்ளியைப்போலும் திருமாலுஞ்சீதேவியைப்போலும், மாறிமாறிச்சேர்ந்து-மயலைத்தீர்ந்து-வாஞ்சைமிகவுங்கொண்டு வாயிரசமுண்டு - பாரன்பகையைவிடுத்து-வகைவகையான லீலையைத்தொடுத்து - வல்லியுமன்னவனும்,மருவிவிளையாடி-வருத்தத்தைத்தந்த - தென்றற்காற்றையும்-திரைகடலையும், சந்திரனது வாடையையும், கிளியின்வார்த்தையையும்-குயிலோசையையும்,வெறுத்து-கடுகடுத்து - நானாவிதகலவிகள்புரிந்து-கன்னிக்குக்கணவன்மேற் காதற்பெருகவும், காதலிமேற்கணவனுக்கு ஆசைவருகவும்,கட்டியணைந்து கன்னத்தையுதட்டைக்கடித்து - கனசரசங்கள்செய்து-காலொடுகாற்பின்னி - காமசுரத்தைவிண்டு நானாவிதகனிகளையும், பலகாரங்களையும், உட்கொண்டு கன்னமாபுரியையாளும்மன்னவனாகிய மதிதயராஜன் அரண்மனையிலிருந்து பின்பு அவரிடத்தில் அரிச்சந்திரமகாராஜனும், சந்திரவதியும் - விடைபெற்றுக்கொண்டு - வெகுவித பரியாதைகளையும், பெற்றுத் - தானுந்தன்மனைவியும், ஒருரதமேறவும், வஷிஷ்டரும்,

சத்தியகீர்த்தியும், மற்றொரு - ரதமேறவும் - மற்ற சேனுஜனங்கள்
அவரவர்களுக்குத்தக்க வாகனங்களிலேறவும் - வாத்தியகோஷ்டங்
கள்முழங்கவும்-மங்கையரானேகர்கள் பாடவும் - நாட்டியமாடவும்
வெண்சாமரைவீசவுஞ்-சந்திரவட்டக்குடை - இந்திரவட்டக்குடை
பிடிக்கவும்-கன்னமாபுரியி லுள்ளவர்கள்யாவரும் பின்றொடர்ந்து
வந்து வழிவிடுக்கவும் - அப்பதியைக்கடந்து அப்பால் நடந்துவ
ழியிற்காணுஞ் சோலைகளையும்-அச்சோலையிலுள்ள விநோதங்களை
யும்-நதிகளையும்-மலைகளையும் - அங்கங்குண்டாகிய வேடிக்கைகளை
யும்-சந்திரவதிக்குக்காண்பித்து (சிவஸ்தலம்) விஷ்ணுஸ்தலங்களிற்
சென்று தரிசித்துக்கொண்டும் தன்னுடைய பட்டணமாகிய அ
யோத்தியாபுரிக்கு வருவதைக்கேள்விப்பட்ட குடிகள்யாவரும்மு
கமலர்ந்து-அகங்குளிர்ந்து - அதிகசந்தோஷமாகித் தங்கள்தங்கள்
வீதிகள்தோறும் பச்சைப்பந்தலமைத்து, தோரண முதலாகியது
ங்கட்டிதெருக்களிற் சலந்தெளித்து சித்திரக்கோலங்களிட்டுசிங்கா
ரஞ்செய்திருக்கையில் அப்பட்டணத்தினுட்செல்லவே மாங்கில்ய
ஸ்திரீகளில் முத்தாலாத்தியெடுப்பவரும்-பவழாலாத்தியெடுப்பவ
ரும்-திருஷ்டிகழிப்பவரும்-தெரிசனை செய்பவரும் - எங்களுருக்கு
ச்சீதேவிவந்தாளென்று-சிந்தையில்மகிழ்வாரும் - அரசனுக்குத்த
குந்தஅணங்குஅமைந்தாளென்று அகமகிழ்வாரும் - நம்முடைய
பட்டணம்என்னபூஜைசெய்ததோ-இந்தப்புண்ணியவதிஇவ்விடம்
வருகவென்று பூரிப்பவர்களுமாக வீடுகள்-தெருவுகள்-மேடுகள்மு
தலாகியவிடங்களில்-கும்புகும்பாய்க்கூடிப் பிரஜைகள்பலவாறுபு
கழும்படியாகசேனைகளுந்தளங்களும் வேதவேதியர்களுஞ்சூழும்
படியாகஅரிச்சந்திரமகாராஜன்தன்மாளிகையில்வந்துசேர்ந்தான்.

இப்படியாகவந்தமகாராஜன் தன்பட்டணத்திலுள்ள குடிக
ள்யாவரும் சந்தோஷப்படும்படியாய் விருந்துசெய்வித்து- தன
க்குச்சரீரசகாயப்பட்ட வேதவேதியருக்கும்-வசிஷ்ட மகாமுனிவ
ருக்கும் பூதானம்-கோதானம்- வஸ்திரதானம் - மகாதானமுதலாகி
யதுங்கொடுத்துத் தானுந்தன்மனைவியும் போற்றித்துதித்து- அவ
ர்களாசீர்வாதமும் பெற்றுக்கொண்டு அவரவர்களையனுப்பிவிட்டு
த்தானுந் தன்மனைவியுஞ் சுகமாக வாழ்ந்திருக்கிற நாளையில் அரி
வையர்க்கரசியாகிய (சந்திரவதி திருவயிற்றில்) கெர்ப்ப முண்டா
யிற்று, அப்படியுண்டாகிய கருப்பமானது (பயிர் செழித்துவளர்
வதுபோல)நாளுக்குநாள் கெர்ப்பமும்யாதொரு குறைவுமில்லா
மல் வளர்ந்துவருவதற்குத்தக்க குறிகளானது எப்படியிருந்ததெ
ன்றால்-சந்திரவதிக்குக் கண்சொருகுதலும்-அசதியும்-முகம் வெளு
த்ததும் - புளிப்பின்பேரிலாசையாயும் - ஸ்தனத்தின்முகங் கருப்பு
ண்டாகியும்-கூந்தல்சோர்ந்தும்-இடையிற்சட்டிய ஆடையஅடிக்க

டிஅவிழ்ந்தும்-இருந்திருந்துசோர்தலுண்டாகியும் - நடைதடுமாறியும்-நரம்புகள்பசுமையாயும்- பத்துமாதமும் நிறைவாயிற்றென் றுபாங்கிகளறிந்து (அல்லும்பகலும் அறுபதுநாழிகையும்) விட்டு நீங்காமல் இருபுறமுந்தாங்கவும்-பிள்ளைப்பேறில் கைகண்டமருத்துவச்சிவந்து வுபசாரணை சப்பவும் - நல்லமுகூர்த்தத்தில் சுபலக்கினத்தில் பாலசுப்பிர மணியனைப்போல (பரமசிவனுடைய) திருவருளினாலே ஒருசிறுவனைப்பெற்றாள்-அச்சிறுவன் பிறந்தசேதியைத்தந்தையாகிய அரிச்சந்திரமகாராஜன் கேழ்விப்பட்டுசிந்தை மகிழ்ந்து-யாசகர்முதலானவர்களுக்கு - நம்முடைய பொக்கிஷவறையைத்திறந்து ஏழுநாள்வரைக்கும் பரிசுகொடுங்கொன்று மந்திரிகளுக்குச்சொல்ல அப்படியேகொடுத்து தெருக்கள்தோறுஞ் சர்க்கரைவழங்கவும் - அஸ்திநபுரியிலுள்ளவர்கள் நமதூர் அரசனுக்கு ஒருஆண்பிள்ளை பிறந்ததென்று அகமகிழ்ச்சி கொள்ளவும் மங்கிலியஸ்திரீகள் கும்புகும்பாய்வந்து சந்திரவதியைக்கண்டு தக்க வுபசாரங்கள்செய்யவும் புத்திரனைபெடுத்து - நீராட்டிநெற்றியிற் பொட்டிட்டு விழிக்குமைதீட்டி பொற்றொட்டிலும் மாணிக்கத்தொட்டிலும் வளர்த்தி தாதிகள் நாற்புறமுஞ்சூழ்ந்து சந்திரவதிசந்தோஷமாகத்தாலாட்டவும்-சாமரை விசிரிகொண்டுமெல்லெனவீசவும்-அரிச்சந்திரமகாராஜன் ஆசையுடனே அடிக்கடிவந்துபார்க்கும்படி ஓசையுடனேபாடவும் இவ்விதமாகவளர்க்குங்காலையில் வேதவேதியரும்-சோதிடர்களும்வந்துநல்லநாள்பார்த்து பிள்ளைக்குத்(தேவதாசனென்று)நாமகரணமிட்டார்கள்-அப்போது கைக்குத்தங்கக்காப்பும்-கொலுசும்-முத்திழைத்தகிண்கிணியும்-விரலுக்குமோதிரமும்-இடைக்குப்பொன்னரைஞாணும் இட்டுநாளொருமேனியும் பொழுதொரு வர்ணமுமாகவளர்த்து சந்திரவதியும் அரிச்சந்திரனும் அயோத்தியா புரியிலுள்ளவரும்-யாதொருதாழ்வில்லாமல் சுபோலக்ஷபாய் வாழ்ந்திருந்தார்கள்.

இப்பால்-இந்திரசபை.

இதன்பிற்பாடு - அழகியமாடமண்டபமும் - விசித்திர-மேடைகளும்-வாயில்களும்-கூடகோபுரமும் - மின்னார்கள் நாடகசாலைகளும்-பாடகசாலைகளும் - மறையோர்கள் வேதசாலையும் - யாகசாலையும் - கீதசாலையும் - நாதமிகுந்தகின்னரசாலையும் - காதல்மிகுந்த-காமசாலையும்-முனிவர்கள்செய்யும் யோகசாலையு முடையதாகவும், சிவந்தபுஷ்பம்விளைவதாயும் - குளிர்ச்சியைத் தருவதாயும்-இனிதாகிய மணந்தருவதாயும் - பனியைச்சொரிவதாயும்-மணியைச்சிந்துவதாயும்-ஆபரணமுதிர்வதாயும் - செழுமை பொருந்தியகனியைத்தருவதாயும் - பரிமளமலரையுடையதாயும் - ஐந்துகற்பகத்தருவுள்ளதாகவும், பொருந்தியபொன்னுலகத்திலே - தெய்வ

படிகத்தாலமைத்ததாயும்-பொன்தகட்டினாற்செய்த குறடுள்ளதா
யும்-வரிசைவரிசையாகப்பருத்த ஆயிரந்தூண்களைநிறுத்தி - மே
லே போதிகைவச்சிரத்தினால் அமைத்து - நீலம் - கோமேதகம்-ம
ரகதம்-இப்பேர்ப்பட்டதுகளால் தளவரிசை சுற்றிலும் இழைத்த
தாய் - வாய்கள்தோறும் - ரத்நமுத்துகளைத் தூராய்ந்ததாய் - நா
ற்புறத்தும் -யாளி-சிம்பம்-குதிரை-அன்னம்-கிளி-இதுமுதலாகிய து
கள் சித்திரவிசித்திரமாகச் செய்ததாய் - பூரணகும்ப முள்ளதாய்
அகலநீளம் ஆயிரங்காத விஸ்தீரணமுடையதாய்-ஒவ்வொருபுற
த்திற்குக்கோடாகோடியான பூதங்கள்சுமக்கத்தக்கதாயும்.மேலே
நிமிர்ந்துவளர்ந்து பிர்மாவினுடைய பதத்திற்கும் நிகவமளாவிய
தாய் அந்தப்பிர்மன்படைக்காதவுலகமாயும் - தெய்வவிஸ்வக்கர்மனா
ல்படைத்த சிங்காரமண்டபத்தின்மீது-பலகோடிய ரம்பையர்கள்
வெண்சாமரைப்போடவும் - முப்பத்துமுக்கோடி தேவர்களும்
அஷ்டவசுக்களும்-நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும்- கருடகாந்த
ருவ சித்தவித்தியாதரர்களோடும், பூதகணாதிபதிகளோடும் - இயக்
கர்போற்றவும், குருவாகிய பிரகஸ்பதிபகவான்-வாழ்த்தவும், சந்தி
ரசூரியர்மேவவும், வருணன்-வாயுதேவன் - குபேரன் முதலாகியவ
ர்கள்சூழவும், தேவேந்திரமகாராஜன் அயிராணியோடும் இனிது
வீற்றிருந்தான்.

அப்போது-அந்தச்சபைக்கு- மகத்துவப்பொருந்திய - சன
கர்-சமதக்கினி-சனற்குமாரர்-பிருகு-அத்திரி-அகத்தியர்-சுகர்-காசி
பர்-கௌதமர்- உரோமபாதர் - பாரத்துவாசர்-பராசரர் - வசிஷ்
டர்-விஸ்வாமித்திரர்-நாரதர்முதலாகிய முனிவர்கள்வந்தார்கள்-அ
வர்கள்யாவருக்கும் இந்திரன் ஆசனங்கொடுத்து - பெருமைபொ
ருந்தியமுடியுற இருகாமுஞ் சிரமேற்கூப்பிச் சொல்லுகிறான், ஓய்
திரிலோகமுஞ் சஞ்சரிக்கும் நாரதமகாமுனிவரே - நெடியகடல்
சூழ்ந்தபூமியின்கண் அரசாளும் - இராஜராஜர்களுக்குள்ளே பொ
ய்சொல்லாமலும் - பிறர்பொருளுக் கிச்சைவையாமலும்-நீதிநெ
றியில்வழுவாமலும் தன்தாரந்தவிர பிறர்தாரத்தைத் தாய்போற்
பார்த்தும்-வேதநூல்களிற் சிந்தையைவைத்தும் -பெரியோர்களு
க்கு-ஒழுக்கம்- வணக்கமுடையனாய் - அரசில் வழுவில்லாதவனுமாய்
அரசாண்டுவாரும் அரசனிருந்தால் எனக்குச் சொல்லுவீரென்று
கேட்டான்-அப்போது நாரதர்-இதோ-வசிஷ்டர் விஸ்வாமித்திரர்
வந்திருக்கின்றனர் அவர்களைக்கேட்டால் விசிதமாகச் சொல்லுவா
ர்களென்று நாரதர்சொல்ல-அந்தக்ஷணத்தில் வசிஷ்டமகாமுனி
வர் ஓய் சுவர்க்காதிபதியே கேளும் பூமியில் அயோத்தியா புரியை
ஆளுகின்றவனொருவன்-அவனோ - மகாசத்தியசந்தனன்- பிறர்தார
சகோதரன்-வெவ்வியபோரினில்மகாசமர்த்தன் - புகழினிற்சிறந்த

வன் ஆகமகலையக்கியானங்களில் அன்புடையவன்-நீதிநெறியைக்க டவாதவன்-பெருமையிற்சிறந்தவன் - நல்லோரிணக்கமுள்ளவன்-சற்பாத்திரபுண்ணியன்-தன்னுயிர்போல மன்னுயிரைக் காப்பவன் தேவபக்தியுள்ளவன் - குருவணக்கமுள்ளவன் - கேட்டதை இல்லையென்னாமற்கொடுப்பவன் - அவன்பேரோ அரிச்சந்திர னென்று வசிஷ்டர்சொன்னார்.

அதனைக்கேட்ட விஸ்வாமித்திரர்-கண்களில் நெருப்புப்பொறிபறக்கவும் - கடுங்கோபமிகவும் பிறக்கவும் - கெற்சித்து கதும்பி முன்னாளில் வசிஷ்டர் மைந்தரைச் சாம்பலாய்ச் சபித்தாலும் - ஒருகாலத்தில் தனக்கும் அவர்க்கும்போர் விளைந்தமையாலும்-அதனைநினைத்துக்-கனைத்து இப்போதும் விடுகிறதாவென்று நெடுமூச்செறிந்து-ஆ-ஆ-ஓய்வசிஷ்டரே-நான் அவனை அறியேனா-அவனோ மகாகொடியன்-பாதகன்பரதார விருப்பமுள்ளவன் - வீணைக்கெப்போதும் பொய்யுடையவன்-நிஜமென்பதைக் கனவிலும் நினையாதவன்-நிலைமையுநெறியுஞ் சிறிதுமில்லாதவன்-சோரத்தனமுள்ளவன் - கபடன் - காதகநினைப்புள்ளவன் சொன்னதை இல்லையெனபவன்துரோகன்-அவனைத்தானோ நல்லோனென்று இந்தமகாசபையிலிருப்பவர்கள்கேட்டு நகைப்புகொள்ளும்படி இந்திரன்முன்பாகச்சொன்னீரென்று விஸ்வாமித்திரர்சொல்லவே (வசிஷ்டமகாமுனிவருக்கு)வயிறெரிந்து மனம்பதைத்து(கௌசிகமுனியே நீசாங்கிய காரியமொன்றுமில்லாத ஒப்பற்ற அந்தஅரிச்சந்திரனை, உன்னுடைய மனக்கர்வத்தால் இப்படியாகத்தூஷித்தாய் - அதனால் (கௌசிகா) உன்வாயும் வேகவில்லை மனமும் வேகவில்லை - வம்பாகச்சொன்ன நீயும் வேகவில்லை - ஆ - ஆ, தெய்வமும் உனக்குப்பொய்த்துதோவென்று அத்தெய்வத்தை மனதிலேநொந்து ஐயையோ-உத்தமனைத் தூஷிக்குங்காலமாச்சுதோ - மத்திமனைப் பூசிக்குங்காலம்வாய்ச்சுதோ-ஹரிஹரி - துஷ்டருக்குத் தெய்வசகாயமாகுதே-இஷ்டருக்குத்தெய்வசகாயமேகுதே-என்றுமேன்மையினவுடையவசிஷ்டமகாமுனிவர் கௌசிகனைப்பார்த்து கௌசிகா நீ-உன்னுடைய வாய்மதத்தாலும்-இதாகிதந் தெரியாதவிதத்தாலும்-தபநிலையறியாதவனாகையாலும் - நல்லோர்நேயம் சற்றுமில்லாமையாலும் காமக்குரோதம்-லோபம் - மதம்-மாற்சரியம்-பொருந்தியவனாகையாலும்-சபைக்குயோக்கிய மல்லாதவனாகையாலும் இப்படி தூஷித்தாயென்று சொல்லவே-கௌசிகனுக்குக் காலாக்கினிருத்திரனைப்போலக் கண்கள்சிவந்து சடைமுடியவிழ்ந்தாடவும் தன்கமண்டலங்குலுங்கவும்-தன்னாசனத்தைவிட்டுத் தள்ளித்தன்னியெதிரில்வந்து(ஓய்வசிஷ்டரே)நீ-தபநிலை கண்டவன்போலேயிருக்கிறவர்கள்நினைக்கும்படியாய்ச்சொன்னாயல்லவா சபாஸ்சபா

ல் அவ்வளவுதிறமுள்ளவனானால் - இப்பேர்ப்பட்ட தபமுனிவர்கள் சூழ்ந்திருக்குந் தெய்வலோக இந்திரனுடைய திகழ்சபையில் ஒரு அற்பமனிதனாகிய அயோத்தி அரிச்சந்திரனை - அதிகமேன்மைப்படுத்துவாயா - உன்னுடைய சிஷ்யனென்கிற ஆங்காரமா-நானாத்திருக்கிறோம் நம்மையாருமொன்றுஞ் சொல்லார்களென்கிற ஓங்காரமா ஆகையால் - இப்பேர்ப்பட்ட சபையில் நீ அவனைப்புகழ்ந்ததால் உன்னுடையவாயிற் புழுவாய்ச் சொரியுமேயல்லது - என்வாயும், மனமும்-வேகாதென்றான்.

அப்போது வசிஷ்டர் தினகரனைப்போலமுகத்தில்-தீஜொலிக்கவும் எழுந்துமனதிலடங்காத கோபங்கொண்டு - இருவரும்வாதாடும்போது அக்கினிகளானது தெய்வலோகத்தைக் கப்பிக்கொண்டு-எங்கும் தீப்புகைமூடியபோது இந்திரனவன் நடுநடுங்கி அலைந்துகுலைந்துஎழுந்து தீராத அவர்களுடைய கடுங்கோபத்தையாற்றி நீங்களிப்படிவாதாடுவது தகுதியல்லவென்றுதடுத்து - நல்லவிடைகொடுத்து-கையமர்த்தி இருவரையும் ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து-இப்போது உங்களிருவரில் விளைந்தவாய்மையையறியும்படியாய் அந்தஅரிச்சந்திரனைப் பொய்சொல்லச்செய்துவைத்தால் இன்னதுசெய்வதென்றும் - பொய்சொல்லாமற் போனால் இவ்வாறுசெய்வேனென்றுஞ் சமாதானமான வார்த்தைகளாகச்சபதங்கள் சொல்லுங்களென்று-இந்திரன்கூற - வசிஷ்டமகாமுனிவர் சொல்லுகிறார்-கேளாய்இந்திரபூபதியே ரிஷிகள்தபோதனர்களே அரிச்சந்திரனிடத்தில் எதாவது-ஒருதவறுதலாவது-பொய்யாவது அவனுவில்இந்தக்கௌசிகன் - உண்டாக்கிவைப்பானேயாகில் என்னுடையதவத்தைவிட்டுத் துற்கந்தமான கள்ளுப்பாண்டத்தைத்தலையிற்சுமந்துக்கொண்டுதெற்குத்திசையிற்செல்லுவேன் இதுவே உண்மை இதுதான்சபதம் இதுதான் நிசுசயமானவார்த்தை இந்திரபூபதியேயென்று வசிஷ்டர்சொல்ல-அதனைக்கேட்ட நாரதர்-வசிஷ்டமாமுனிவர்சொன்னது நிலைமைதான் ஓய்கௌசிகரே-நீரேன் சும்மாயிருக்கிறீர் சமயம்வந்தபோதல்லவோ சாமார்த்தியத்தைக் காட்டவேண்டும் அதைவிட்டு ஆலசியம்பண்ணலாமாசுவர்க்காதிபதியானஇந்திரராஜன்முன்னேநீரும் சுருக்கினிற் சொல்லுமென்றுதூக்கிவிடவே-கௌசிகருக்கு அகோரமான கோபம்பிறந்து-இதோ சொல்லுகிறேன்கேளீர் இந்திரபூபதியே-மற்றஇருடிகளே கருடகாந்தருவசித்தவித்தியாதரர்களே - இந்தவசிஷ்டனைப்போல நான் வீணானவார்த்தையைச் சொல்லமாட்டேன் அந்தஅரிச்சந்திரனினியாதாமொருபொய்யை விளைவிக்காமற்போனேனேயாமாகில்நான் அக்கினியில்நின்று செய்ததவங்களிற்பாதி அரிச்சந்திரனுக்குத்தானமாகக்கொடுப்பேன்· இதுதான்என்னுடையசபதம்அந்த

ச்சபதம் நிறைவேறுகிறவரையிலும் இந்தவசிஷ்டன் அப்புறம்இப்
புறம்அசையக்கூடாது ஒப்தேவேந்திரமகாராஜனே-உம்முடைய
கட்டுக்காவலிற்குள் பத்திரமாய்வைத்துவையும் - விட்டுவிடுவீரேயா
மாகில்எல்லாங் கெட்டுவிடுமென்னவே வசிஷ்ட மகாமுனிவரும்
(கேளாய்கௌசிகா)ஆ ஆ,சூரியகுலத்திற்றோன்றிய அந்தஅரிச்சந்
திரனிடத்தில் நீபோய்இப்போதுஇவ்விடத்திற்சாதித்தசாதிப்புப்பி
ரகாரம் உன்னாலான சாமார்த்திய மெல்லாகாட்டி அவன்வாயிற்
பொய்சொல்லும்படி வென்றுவருவாயேயாமாகில்-அதுதான்-வீ
ரம்-அதைவிட்டீர மொன்றுமில்லை போய்வாசலுநீயென்றுசொ
ல்லிவசிஷ்டர் அவ்விடத்திற்றானேயிருந்தார். அதன்பின்புமற்றமு
னிவர்களும் இன்னமுன்டானவர்களும் இதெப்படியாமோ எவ்
வாறாய்ப்போமோஎன்றுமனதிற்சிந்தித்துவசிஷ்டர்கூறியசபதமு
ம்கௌசிகர் சொல்லிய சத்தியவாய்மையும் தப்பிப்போகுமா இ
ருவரும்மகாதபோநிதிகள்மேலும் அரிச்சந்திரனோமெத்தவும்இள
மனதுடையவன் இந்தக்கௌசிகர் அவனையென்னபாடுபடுத்துவா
ரோஜயோபாவம்-இப்போதுதான் அவனுக்கொருபுத்திரன்பிறந்
தான்அப்புத்திரன்பிறந்த நக்ஷத்திரத்தின்கொடுமையோ அல்லது
மனைவியாகவாய்த்த சந்திரவதியின்தவப்பலனோ இப்படிஇவர்கள்
இந்ததெய்வலோகத்தில் சபதங்கூறியதென்று அரிச்சந்திரனுக்காக
இரக்கமுற்றுஇந்திரனிடத்திற்செலவுபெற்றுக்கொண்டுதங்கள்தங்க
ளிருப்பிடம் போய்ச்சேர்ந்தார்கள்.

இப்பால்-கௌசிகர் அரிச்சந்திரனைத் தீயோனென்று தேவர்
கோன்முன்பாகச்செப்பினோமே அதையெப்படிமெய்ப்பிப்போ
மென்று சிந்தையிற்கருதி இந்திரனிடத்தில் விடைபெற்றுக்கொ
ண்டுதெய்வலோகத்தைவிட்டுதன்னுடையதபோவனம்வந்தார் அந்த
ருவாயில் அவ்விடமிருந்த தவமுனிவர்கள் கௌசிகனைகப்பார்த்து
தேவரீர்இந்திரசபைக்குப்போயிருந்தீரே அங்கேயென்னவிந்தை
யான சமாச்சாரம்நடந்தது அதைஎங்களுக்குச் சொல்லுமென்று
தவமுனிவர்கள்கேட்க(கௌசிகன் இந்திரன்கேட்டதும்,அதற்குவ
சிஷ்டர்சொன்னதும் அதைமறுத்துத்தான்சொன்னதும், பின்புஇ
ருவருஞ்சபதம்புரிந்ததையும், அவர்களுக்குத் தெரியப்படச்சொ
ல்லிப்பின்பு தன்மனதில்கவடப் நினைத்து ஒய்யாதவர்களே நான்ஒ
ருவேள்விசெய்யவேண்டும்அந்தவேள்வி நிறைவேற கொஞ்சந்திர
விபம்வேண்டியதாகையால்அதற்காக அயோத்தியாபுரியையாளப்
பட்ட அரிச்சந்திரமகாராஜனிடத்தில் நீங்கள்போய்திரவியம்கொடு
க்கும்படியாய்அவனிடத்தில் நிக்ஷயமானகெட்டிப் பத்திரம்பெற்
றுக்கொண்டுவாருங்களென்றுகௌசிகர்சொல்ல அவ்வாறேஅகத்த
யப்போய்க்கேட்டுவருகிறோமென்று தவமுனிவர்களந்தவனத்தை

விட்டெழுந்து அயோத்தியாபுரிக்கு வருவதைக்கேள்விப்பட்ட அ
ரிச்சந்திரமகாராஜன் ஆசனம்விட்டெழுந்து எதிர்நோக்கிவந்து அ
டிபணிந்தழைத்துப்போய் ஆசனமளித்து அடியேனிடத்தில் தாங்
கள் எழுந்தருளிவந்ததை அருளிச்செய்யவேண்டுமென்றுவணங்கிக்
கேட்க-தவமுனிவர்கள் சொல்லுகிறார்கள்-ஓய்மகாராஜனே விஸ்வா
மித்திரமகாரிஷி ஒருயாகஞ்செய்யவேண்டுமாம் அதற்குவேண்டி
யதிரவியம்உம்மிடத்திற்கேட்கும்படியாய்எங்களை அனுப்பிவைத்
தார்-ஆகையால்நாங்கள் உம்மிடத்தில்வந்தோம் நீருமென்று
கேட்க-அப்படியேதருகிறேனென்றுசொல்ல-அவ்வசனத்தை அரி
ச்சந்திரனிடத்தில் முனிவர்கள் உறுதிப்படுத்திக்கொண்டுஅயோத்
தியாபுரியைவிட்டுவிசாவினில்விஸ்வாமித்திரரிடத்தில் முனிவர்கள்
வந்து-அரிச்சந்திரன் பொருள்தருகிறேனென்று உறுதிவசனமாக
ச்சொன்னமொழியைச்சொல்லி அவரவர்தங்கள்தங்கள் தவநிலையி
லிருந்தார்கள்.

அதன்பிறகு வஞ்சகநெஞ்சமுடைய விஸ்வாமித்திரன்-தான்
சொல்லியசபதத்தைநிறைவேற்றும்படியாயும்-அரிச்சந்திரன்வாழ்
வைக்கெடுக்கும்படியாயும்கொடியபாதகன்வருவதைப்பார்த்து அ
யோத்தியாபுரியிலுள்ள-ஏரிகள்-குளங்கள்-வாவிகள் - காவுகளுந்து
க்கமுற்றுநடுக்கங்கொண்டன - பின்னும் - கள்ளமனதையுடைய
கௌசிகன் துள்ளிவருவதைக்கண்டு-மயில்கள்-குயில்கள் - கிளிகள்
ஆ-ஆ-நமதுவள்ளலைக் கெடுக்கவருகிறானேயென்று உள்ளம்நடுங்கி
யுறக்கங்கொண்டன-பாரொருதாழ்வில்லாமல் வாழ்வுற்றுவரும்-ச
த்தியரிச்சந்திரனுடையசமஸ்தானத்தைக்கலக்கச்சபதம்பண்ணி
யசண்டாளன்வருகிறானே என்று வாவியிலுள்ள ஜீவஜெந்துக்களெ
ல்லாம்வாட்டங்கொண்டு தாங்களிருந்த நிலைகள்சாய்ந்து அப்பால்
போயிற்று-வாழை-தென்னை முதலியகனிவிருக்ஷங்கள்-குலைகளைச்
சாய்த்து அசைவற்றயர்ந்தன-சம்பா-வாடைச்சம்பா-முதலியபயி
ர்கள்தலைகளைச்சாய்த்து சஞ்சலமுற்றது-மாடமாளிகை - கூடகோ
புரம்-ஆடுகின்றசாளரம்-அண்ணலிருக்கும் மண்டபம் அனைத்தும்
நடுநடுங்கும்படியாயும்-அயோத்தியாபுரிபட்டணமும் - ஒடுங்கும்
படியாயும்-அடாதசபதஞ்செய்து - படாபாடுபடுத்தவருகிறதை
யறியாத அரிச்சந்திரமகாராஜன் அமைச்சர்முதலானவர்கள் சூழத்
தக்கதாக-எதிர்கொண்டுவந்து அழைத்துப்போய் அதிகமரியாதை
யுடனே ஆசனமளித்து அன்பாக அநேகந்துதிகளோடு அடிவணங்
கி அருகில்நின்றுகரங்கூப்பி தேவரீர் அடியேனைநாடி வந்தகாரியம்
யாதோ அதையருளிச்செய்தால்சிறியேன்செய்யக்காத்திருக்கிறே
னென்றுமன்னவன்சொல்ல-விஸ்வாமித்திரன் - ஏறெடுத்துப்பார்த்
து-ஓய்இறையே முன்னம்முனிவர்கள் நமக்காகஉம்மைவந்து கே

ட்டதிரவியத்திற்காகவந்தேனென்ன - அப்படியேதருகிறேன்-தே வரீருக்கு-எவ்வளவுதிரவியம்வேண்டியதோ அதனைத்தெரியச்சொ ன்னால் இந்தக்ஷணந்தருகிறேனென்றுமன்னவன்சொன்னான்-அப் போதுவிஸ்வாமித்திரன், மனமகிழ்ந்துநமதுமாயவலையிலகப்பட் டானென்றுநகைத்து-ஓய்மகாராஜனேகேளீர் - பலவந்தனான ஒரு புருடன்யானையின்மீதிலேறி கையினிற் கவண்கற்கொண்டு ஆகாய மார்க்கம்எறிந்தால்அதுஎவ்வளவுதூரம்போகுமோ அவ்வளவுதூர ம்பொன்கொட்டி எனக்குத்தந்தால் அந்தயாகம்நிறைவேறுமென் றுகௌசிகன்சொல்ல , அம்மொழிக்குமகாராஜனுடன்பட்டுதன்ப ட்டத்தியானையைவரச்செய்து அதன்மீது ஒருவனையேற்றிக்கவண் கல்எறியச்செய்யஅதுமிகவும்உயரஞ்செல்ல அவ்வளவுதிரவியமும் அண்ணலாகிய அரிச்சந்திரமகாராஜன்கொட்டிக்கொடுக்கஅப்போ துவிஸ்வாமித்திரன் இப்போதுஇதனை எடுத்துக்கொண்டுபோய்வி ட்டோமானால்பின்னும் இவனிடத்தில்வரவேண்டிய காரியமில்லை யேயென்று பாரியயோசனைசெய்து(ஓய்)மகாராஜனேநான் அந்த வேள்விசெய்யநல்லநாளை யேற்படுத்திக்கொண்டுவந்து எடுத்துப் போகிறேன்அதுவரைக்கும் இந்தபொருள்உன்னுடையஅடைக்க லமாகவிருக்கட்டுமென்று-அதற்கொருமுத்திரையும்போட்டு அரிச் சந்திரனிடத்தில்வைத்து செலவுவாங்கிக்கொண்டு வெளியேவந்து- மகாசந்தோஷத்துடனே - இந்திரன்சபையில்சொல்லியசபதம்த டையின்றிமுடித்திடுவேனென்று கைமேற்கை யடித்துக்கொண்டு. இனிவிடுகிறதில்லைமன்னவனையென்று - கடுகடுத்து-கனைத்துக்-கது ம்பி-கடூரசித்தனாய்-வனங்களைக்கடந்து தன்னுடைய தவநிலைச்சார பினிடம்வந்து நுழைந்திருக்குப்-ஒருபெரிய விருக்ஷத்தி னீழலிலு ட்கார்ந்து-யோசனைசெய்து-இவ்வனத்தினில்வாழும்-பலவித மிரு கங்களும்-பறக்கும்பலபக்ஷிகளும்-சீக்கிரம் இவ்விடம்வந்துசேரக் கடவதென்று சிந்தையில்நினைத்தான்.

அப்போது-உண்பதும்-உறங்குவதும் - கூடிக்குலாவுவதும்- குந்திக்கொண்டிருப்பதும்- படுத்திருப்பதுமாகிய யானைக்கூட்ட ங்களும்-புலிக்கூட்டங்களும்-பன்றித்திறங்களும் - காட்டெருமை த்திறல்களும்-சிவிங்கி-செந்நாய்களும்-நரிகளும்-முயல்களும் -மா ன்கும்பும்-கடம்பைக்குப்பும்-இன்னங் காட்டினில்வாழு மிருகங்க ளும்வந்து முனிவனைப்பணிந்தன-பின்பு பறப்பனவும் - இரைக் காக வாயைத்திறப்பனவும்-ஆகிய - மயில்-குயில் - காடை - கௌ தாரி-மாடப்புறா மணிப்புறா-வல்லூறு-டேகை - செம்புறா-வெண் புறா-கிளி-அளி- அன்னம்-சக்கரவாகப்பட்சி - கருஞ்சிட்டு - செஞ் சிட்டு முதலாகியபலவிதபட்சிகளும்- கும்புகும்பாய் முனிவனுக் குக்குடைகவிப்பதுபோல் சிறகைவிரித்துப்பறந்துவந்து முனிவ

னைக்கும்பிட்டுஎங்களையழைத்தகாரியமென்ன சொல்லுவீரென்று
மிருகங்களும்-பறவைகளும் விருப்பமாய்க்கேட்க - விஸ்வாமித்தி
ரன்-ஓமிருகங்களே - பக்ஷிசாதிகளே-நீங்கள் இன்றையதினம் என
க்கொருசகாயஞ் செய்யவேண்டியது - அஃதென்னவென்றால் அ
ரிச்சந்திரனுடைய பட்டணம்போய் அவடத்திலிட்டிருக்கும்பயி
ர்களையும்-பலகனிவகைவிருஷங்களையும் - பூஞ்சோலை முதலியவன
ங்களையும்பாழ்படுத்தி வெறுந்தரையாக்கி விரைவில் வருவீர்களெ
ன்றுமுனிவன் வெகுண்டுவினவ-அவ்வாறே அட்டியில்லாமற்செய்
வோமென்று கெட்டியுத்திரஞ்சொல்லி விலங்குகள் முன்செல்லபி
ன்புபக்ஷிகளுஞ் சிவ்வென்றுகிளம்பிவந்து கதிர்செழித்திருக்கும்ப
யிர்களைகாலாலும்-மூக்காலும்-வாயாலும்-கடிக்கிறதும் - ஒடிக்கிற
தும்-மெல்லுகிறதுமாகவிருந்தது-யானைகள்-கனிவிருக்ஷங்களை மு
றிக்கிறதும்-தும்பிக்கையால்உறிக்கிறதும் - காலால்தேய்க்கிறதும்-
மலைபோற்குவிக்கிறதும்-வாயிற்போட்டுக் கொள்ளுகிறதுமாகவி
ருந்தது-நரிகள்-கரடிகள்- பன்றிகள்இட்டபயிரைவேரைக்கெல்லு
கிறதும்-கீழேதள்ளுகிறதும் - மெரித்துத்துவைத்து பக்ஷிகளுக்கு
விருந்தாகக்கொடுக்கிறவேலையிலிருந்தது-புலிக்கூட்டங்கள் நான்
குதிக்கினும்யாரையும்வரவொட்டாமற் காவலாகக்காத்துக்கொண்
டிருந்ததுகள்-பின்னுஞ்சிலயானைகள் ஏரிக்குளங்களிலிறங்கிச்சலங்
களைச்சேறுநீருமாகக்கலக்கி மதகையுடைத்துவிடுகிறதுமாக இப்ப
டிஅயோத்தியாபுரிபட்டணத்தை அதம்பண்ணுவதைப்பார்த்துச்
சகியாமல்இட்டபயிரும்போச்சுதேஇனியெல்லாயாடும்படலாச்சு
தேயென்றுஇதயமெலிந்து எண்ணாதவெண்ணமெல்லா மெண்ணி
நலிந்து-குடிகளானவர்கள்-இடிவிழுந்தபனைமரம்போல்குய்யோ
முறையோவென்றுகூவிக்கும்பாகக்கூடிகொற்றவன்முன்வந்துஅந்
தவர்த்தமானத்தைச்சொன்னார்கள். அதனைக்கேட்டஅரிச்சந்திரன்
அங்கம்வாடி - திங்கள்சூடிசெய்த திருவிளையாட்டினுக் கினிசெய்
வதென்னவென்றுதன்சிந்தையைத்தேற்றி-வந்தகுடிகளின் துயரை
யாற்றி-பயப்படாதீர்கள்-பயப்படாதீர்கள்-நீங்களிரண்டு வருடம்
நமக்குப்பகுதிகட்டவேண்டியதில்லை உங்களிதாஸ்தானம்போய்ச்
சேருங்களென்று அவர்களையனுப்பிவிட்டு மன்னவன் மந்திரிகளை
நோக்கி-அப்பாமந்திரிகளே-நமதூரில்வாழுங் குடிகள் - நிலத்தை
நம்பி நலத்தைப்பெறலாமென்று பயிரிட்டு நமக்குப்பகுதிகட்டி
சுபேக்ஷயாம் வாழ்ந்துவந்தனர்கள்-இப்போது அப்படியிட்ட
பயிர்செழித்து விளைந்திருப்பதை - வனத்திலிருக்கும் விலங்குக
ளும்-பக்ஷிகளுஞ்சேதப்படுத்துவதால் - அவர்கள் பதறிக் கதறிய
ழுது நம்மிடத்திற்சொல்லிப்போனார்கள். இனிநாம் என்னசெய்ய
லாஞ்சொல்லுவீர்களென்று மிகவும்பரிதாபப்பட்டுக்கேட்டான்.

அதற்குமந்திரியானசத்தியகீர்த்திமகாராஜனை வணங்கிச்சொல்லுகிறான் - எங்களாண்டவரே-நாம்சும்மாயிருப்பது நியாயமல்ல அநியாயஞ்செய்யும் விலங்குகளையும்-பக்ஷிகளையும்-அல்லோலகல்லோலமாய்அலறிட்டோடும்படிசிலகளைப்பூட்டிவாட்டிமாய்த்துவிடவேணும்-ஆகையால்வேட்டைக்கு நாம்போகவேண்டியதேயுக்தமென்றுமந்திரிசொல்ல-மகாராஜன் அதற்கிசைந்து அப்படியே வேடக்கூட்டங்களை அழைப்பிக்கும்படி ஆக்கியாபித்த வுடனே வேடர்- வில்லியர்-வல்லூரு டேகைக்காரர்-கருநாய் - செந்நாய்களுடனும்-ஈட்டி-எறிபீட்டி - வாங்குவலயம்-துப்பாக்கி - பல்லயம்குந்தளம்-எறிவலை - ஒடிகன்னிவலை முதலாகிய அவரவர்கள் ஆயுதமுஸ்திபுகளுடனே புறப்பட்டு மகாராஜன்முன்புவந்து பணிந்தார்கள்-உடனேமகாராஜனும் நீங்களெல்லாம்முன்னுகப்போங்களென்றுமந்திரிகளையும் அனுப்பிவிட்டுத்தான் சந்திரவதியிருக்கும் அந்தப்புறஞ்சென்று-தன்னுடைய ஆடையாபரணங்களை அவிழ்த்துவைத்து-வேட்டையாடுதற்குத்தகுந் தஉடுப்புகளைத் தரித்து-மணிமுடிபூண்டு - வெற்றிபொருந்தியவாளும்-கத்தியும் - முன்னுலேதனக்குப்பத்திரகாளிகொடுத்த பொற்சிலையையும் அகோரமானபாணங்களையும்எடுத்துக்கொண்டு சந்திரவதியுந்தானும் தேரின்மிசையேறி-மன்னவர்சூழவுஞ் சேனைகள்தாழவும்புறப்பட்டு நான்குதிக்கிலும்வளைத்துக்கொண்டுவேடர்கள்விடுகிறபாணத்தாலும் - குற்றுகிறபீட்டியாலும்-விலங்குகளின் குடல்சரிந்தும் - உடல்பிறிந்தும்சிரமறுபட்டும்-உரந்தறிபட்டும்-கால்கள்முறிபட்டும்-வால்கள் தறிபட்டும்-விழுந்தவைகள்சிலது, மகாராஜன்கைச்சரத்தினால் யானைகள்தும்பிக்கைமாய்ந்தும்-தலைகள்சாய்ந்தும்-ஓய்ந்து ஒடுங்கிவிழுந்தவைகளநேகம்-பின்னும்-கத்திகளினாலும் - வாட்களினாலும்-வெட்டுவதில்லன்றிக்கூட்டங்கள் பலவாகக்குன்றிவிழுந்தன-வீராவேசங்கொண்டுவில்லியர்வீசுகிறவலையிலகப்பட்டுபட்சிசாதிகள்பலவாய்மடிந்ததுகளும்சாகிறோமென்றுமுனிவனிடத்திற் போய்சொல்லியிடிந்துவிழுந்ததுகளும்கணக்கில்லை-இப்படியாக வேட்டைகளாடுகிறபோது விலங்குகளில்சிலதுமொண்டியாயும் - ஒண்டியாயும்ஓடிப்போய்வீறிட்டிப்புலப்பிவிழுந்திறந்தவையனந்தம், அண்டயிடமில்லாமல்ஆட்டுக்குட்டிபோல் அகப்பட்டபுலிகளை வயிற்றிற்குற்றவும்-மணிபீரல்வெளிக்குவரவும்-மன்னவனால்மடிகிறோம் மடிகிறோமென்றுதுடிதுடித்துவிழுந்தவையனந்தம் - வேட்டையாடியவேடர்-வில்லியர்விடாய்தீரும்படியாய்விருந்துக்காகமாய்ந்த-முயல்கள்-காடை-கவுதாரிகள்-அனந்தம்-இவ்வாறுகப் போறுபோறுக்குவியவேபோதும்போதும் நில்லுங்களென்று அரிச்சந்திரமகாராஜன்சொல்ல-யாவரும்அயர்ந்தார்கள்இதனில்சிலது தப்பித்துவழி

ஓடிப்போய்திகைத்தழுது முனிவன்பால் சரணடைந்துநின்றன.

அதைப்பார்த்தகௌசிகன் அதிகசினங்கொண்டு நாம்அனுப்பினவிலங்குகள்-பறவைகளில் எட்டிலொருபங்குகூட இவ்விடம்வரவில்லையேயென்று இரக்கமுற்றுக்கேட்க ஐயா - நாங்கள்தேவரீர் சொல்லியவண்ணஞ்சென்று பயிர்களையெல்லாம் அழிக்குங்காலையில்-அரிச்சந்திரனும் அவனுடைய சேனைகளும்வந்து எங்களுடனேயிருந்தஅநேகவிலங்குகளையும் பலபட்சிகளையும்- ஒருநிமைப்பொழுதில் சூறையாடுவதுபோல்வில்லாலும்-வேலாலும்- ஈட்டியாலும்-வாளாலும்-கத்தியாலும் வாசாமகோசரமாய் சரசரவென்றுவெட்டியும்-குத்தியும்-சுட்டும் - பிணக்குவயலாக்கிவிட்டார்கள்-அவர்கள்செய்தஉயிர்வதையை நாங்களென்னசொல்வோமென்று அலறிவிழுந்து அடியினிலபயமிட்டதுகள், அதனால்கௌசிகனுக்குக்கோபமூண்டுகண்களில்தீப்பொறிபறக்கவிழித்து - நகைபுரிந்து மூக்கினில்விரலைவைத்து-அப்படிசெய்தானாஅவனைஎப்படியுங்கெடுக்கிறேன் நீங்களஞ்சவேண்டாம்போங்களென்றனுப்பிவிட்டு- அப்போதேதன்னுடையதவத்தின்வல்லமையினாலே ஒருபன்றியைச் சிருஷ்டித்தான்-அப்படியுதித்தபன்றியின் அவயவலக்ஷணமேதென்றால்-தேகம்பொன்னிறம்-நகம்வெண்மைநிறம்-கழுத்து புட்பராகநிறம்,நாலுகாலும் பவளநிறம்-கண் இரத்தநிறம் - முகம் பச்சைநிறம் - நெஞ்சின்குறவளி நீலநிறம் - வயிறு வச்சிர நிறம்-இப்பேர்ப்பட்டபன்றியின்வல்லமையோவென்றால் . வயிற்றினால்புவியை மறைக்கும் - நகத்தினால் ஆகாயத்தையும் எழ்புவியையும் எடுக்கும்-உறுமுதலினால் பாசக்கயிற்றால் உயிரைப்பிடிக்கும் இயமனையுங்கலங்கச்செய்யும்இத்தன்மையாக வமைந்தபன்றியைமுனிவன்பார்த்து வாராய்பன்றியே நீசீக்கிரம் அயோத்தியாபுரிசென்று அந்நாட்டில்வேட்டையாடிக்கொண்டிருக்கின்ற படைத்தலைவனாயுஞ்சேனைகளைங்கொன்று அரிச்சந்திரனை இவ்விடங்கொண்டுவாவென்றனுப்ப-நல்லதென்று முனிவனைவணங்கிப் புறப்பட்டுப் பதினாயிரம்யானையின்பலத்தைப்பெற்றுபர்வதங்களின்மேற்பாய்ந்தும்,எரிகுளங்களில் இறங்காமல்எகிரியும், எதிர்ப்பட்டவிலங்குகள்இடுக்கணுற்றுஇருந்தவிடத்திற்போய் பதுங்கவும்,இடிபோலிரைச்சலிட்டுக்கொண்டு அயோத்தியையாளும் அரிச்சந்திரனெங்கேஅவன்சேனைஎங்கேயென்று தேடித்தேடியோடிவந்து கண்களில்நெருப்புப் பொறிபறக்கவிழித்து மன்னவன்சேனைகளைக்கண்டு ஓ-ஓ,நீங்கள்தானோ என்னுடைய இனங்களையும், மற்றவிலங்குகளையும்,வதைசெய்தவர்களென்று ஆகாயமட்டுங்கிளம்பிக் குதித்துச்சீறிச்சாடவே அதனால்தலைகளற்றவரும்-குலைகளிற்றவரும்ஆக்க-அதனைக்கண்டு கையிலிருக்கிறசிலைவிட்டவரும்-நிலைகெட்டவருமாகி

யோடவும்-சிலர்களுடைய காலையும் - குடற்களையும், தலைமூளையையும் தகற்றினற்குற்றிப்பிடுக்கிற்று சினம்பின்னுங்கொண்டு- கன்னத்திலும், கழுத்திலும் மார்பிலும்-சில்லாயடைகவே - இத்ரதக்கடலைப்போ,ற்பெருகியோடிற்று-அப்படியோடிய உதிரவெள்ளத்திற்சிலர்களுடைய சிரமும்-கரமும் -டொங்குவிழுந்த தலையுமாக மிதக்கும்படிசெய்தது-சிலர்களுடைய - தோள்களையும் - துடைகளையும்-தாள்களையும்-தடங்கைகளையும் - தயிர்போன்ற மூளைகளையும், வாள்பிடித்தகைகளையும், எழும்பிச்சாடித்துண்டுதுண்டாக இற்றுவிழச்செய்து எங்கேபார்த்தாலும், பிணமலையாகக்குவித்து மதம்பொருந்தியுலாவியிருந்தது-அப்போதுபார்த்திபனுடைய படைக்கூட்டங்கலைந்தது அதைப்பார்த்த அரிச்சந்திரமகாராஜன மிகவுங்கோபங்கொண்டு-ஆ-ஆ, இதுயேதுவிந்தையானபன்றியா யிருக்கின்றது இவ்வளவுசேனையைக்கொன்றுவிட்டதே இவர்களுயிராவிட நம்முயிர்பெரிதாநல்லதென்று ஆரோகணித்து அன்றுஅகோரவீர்கொடுத்தசிலையைக் கரத்திலெடுத்து என்னுடையபடைகள் மாளவும், இந்தப்பன்றியானது என்னெதிர் அச்சமில்லாமல்மீளவும்-இதுகடவுளின் திருவுளச்செயலோவென்று முடியையசைத்து-தொடையணிந்ததோளைக்கிலுக்கி-நறநறவென்று பற்களைக்கடித்து -நகைத்து-வராகத்தின்செவிவழியாய் மன்னவன்சரந் தொடுத்துவிடவே அப்பாணத்தினடியைச் சகிக்கமாட்டாது மலைபோல்மண்மேல்விழுந்து மாயமாயெழுந்து மன்னவனையதித்து மனதிற்கோபங்கொதித்துமாதவனைத்துதித்து அபயம்அபயமென்று அலறிக்கொண்டுபோயிற்று-அப்படிசென்றபன்றியைமன்னவன்-காடு-மலை-வனம்-வனாந்திரமெங்குந் தேடிக்காணாமையால் களைத்து திரேகமெல்லாம் புழுதிகள்படியவும் - வெய்யிலினால் வேர்வைகள்வடியவும் வந்துஇரதயேறிச்சேனைகள்தாழவும்-மந்திரிகள்சூழவும்- வனத்தைக்கடந்து அங்கேசிலமுனிவர்களைக்கண்டுதெரிசித்து அவர்களுடைய ஆசீர்வாதமும் விடையும்பெற்றுக்கொண்டுஅயோத்தியாபுரிக்கருகாமையில்வரவே பொழுதுபோனமையால் அவ்விடத்தில் அழகியஒர்சோலையினிடத்தில் யாவரும்வந்திறங்கிக் காய்கனிகளருந்தி அவ்விடந்தங்கினர்கள் அரசனும் சந்திரவதியும் அக்காவிலிருக்குந் திருக்குளத்திலிறங்கிஸ்நானஞ்செய்துஉண்டி முதலியவுணவுகளருந்திநல்லமலரணையில் இருவரும்அயர்ந்து நித்திரைசெய்தார்கள்.

பின்பு குவலயத்தைமூடிய இருளானது நீங்கும்படியாகப் பட்சிகள் சப்திக்கவும்-கோழிகள்கூவவும்- சூரியனுனவனுதிக்கவும், சேனைகளியாவரும் நித்திரைகலைந்தெழுந்தார்கள்-சந்திரவதியுடன்கூடநித்திரைசெய்த அரிச்சந்திரமகாராஜன் கனவுகண்டு திடுக்கிட்டெழுந்து ஒருநாளுங்காணுத சொர்ப்பனமின்றுகாணவந்ததென்

னவென்ற கருத்தினிற்கவலையுண்டாகியிருப்பதைப்பார்த்த சந்தி
ரவதியானவள்-அச்சமேட்விட்டு என்றுமில்லாதவியாகூலம் இன்றை
யத்தினம்சம்பவித்து-முகம்வாடி - கண்கள் பூமியைநாடியிருப்ப
துயாதுகாரணஞ் சொல்லுமென்று பெண்கள் சிகாமணியாகிய-சு
ந்திரவதிகேட்க-அப்போது-அரிச்சந்திரன் மந்திரிகளை அழைப்பி
க்க-மந்திரிகள்வந்து-மன்னனைப்பணிந்து - எங்களிறையேமங்கள
காம்பொருந்திய திங்கள்போன்ற முகஞ்சோர்ந்து துவண்டும்-ஆ
ழிபுரண்டாலும்-அண்டமிடிந்தாலும்-அச்சப்படாத உம்முடைய
திரேகமெலிந்தும்-வியகக்கூலத்தி லாழ்ந்திருப்பது யாதுகாரண
ஞ்சொல்லுமென்றுவினவ-மகாராஜன்-ஓ,மந்திரிகளே-பெண்ணே
சந்திரவதியே ஆர்க்குந்துயரமாகுதுஆனாலும்-அவர்களால் அதைத்
தீர்க்கப்போகாதுஎன்ற (பழமொழி)யுண்டு ஆவதும் அழிவதுந் தி
ருவுளச்செயலேயல்லாமல் நம்மாலாவதொன்று மில்லையென்றும
தியினாலறிந்தாலும்-விதியைவெல்வதரிது ஆதலால்நான்கண்டசொ
ற்பனத்தைச் சொல்லுகிறேன்கேளுங்கள் என்னைப்பெற்றபிதாவா
னவர்யாக்கையோடு தேவர்கள்நாட்டினிற்போனார் அவர்கள் அவ
ரைஅவ்விடம்விட்டுநீக்கப்பின்பு நக்ஷத்திரமண்டலம் வந்துசேர்ந்
தார். அதன்பிறகுஎன்னுடைய ஊழ்வினையோ முன்புசெய்தகர்ம
வசமோவறியேன் அப்பாசத்தியகீர்த்தி தெய்வலோகத்தரம்பைக்
கொப்பாய்திவ்யலக்ஷணமுடைய ஐந்துபெண்கள்வந்து என்னைப்
புணரக்கண்டேன் அப்படிப்புணர்ந்தஸ்திரீகள்ஐவரில் ஒருத்தியாத
வமுனிக்குக்கொடுத்தேன்மற்றொருத்திஎன்னைச்சதிசெய்து அவனு
டன்கூடச்சென்றாள்-பிறகுமற்றமூவரில் ஒருத்திசாப்பிடுஞ்சாதத்
தைவிட்டுநீக்கிவனத்திற்போய்விட்டனள்,பின்பொருத்தி இரண்டு
நேத்திரமுந்தெரியாமல் அலைந்து திகைத்துப்போனாள். இப்படி
யாகநால்வர்போகக்கண்டேன்,அதன்பின்பு ஒருத்திமாத்திரம்என்
னைவிட்டுநீங்காமல் மகாஅன்புடனிருக்கவும், தெய்வச்செயல்போ
ல்அவளால்அநேகபாக்கியமெல்லாம்பெறவுங்கனவுகண்டேன்இப்
படிமனைவியாகஐந்துமாதர்கள்வந்ததும், நால்வர்பிரிந்ததும், ஒரு
த்திமாத்திரம்,உயிர்க்குயிர்போல்நின்றதும்,எனக்குஇன்னவிதமெ
ன்றுதோன்றவில்லை ஆகையால் உன்னைவிடஎனக்குயார்சொல்லப்
போறார்இதன்பயனைச்சொல்லென்று எல்லையயானும்அரிச்சந்தி
ரமகாராஜன் மிகவும்வியசனத்தோடு கேட்டான்.

இதனைக்கேட்டசத்தியகீர்த்தியாகிய மந்திரியானவன்தனக்கு
ள்தானேசஞ்சலப்பட்டுமிகவுந் தாபந்திரியத்துடனே தன்னையடி
மையாக்கிக்காக்கும் மன்னவனுடையபொன்னடியிற் சென்னியைய
த்தாழ்த்தி ஐயாதாங்கள் கண்டகனவின்பலன்யாதென்றால்-தேவரீ
ர்தாராவார்த்தமாதும், அந்தமாதுடன் கூடப்போய்விட்டமாது

ம், நம்முடையநாடுநகர சகலபாக்கியமாகும், அதைப்பெற்றுக்
கொண்டவர் விஸ்வாமித்திரமகாரிஷிதான்.—யோஜனத்தைவிட்டு
ப்போனவளும், இராஜ்யேந்திரமுந்தெரியாமல் தவித்தவளுமா
கியஇவ்விருவர்களும், இனிவெவ்வேறாகப் பிரியப்போகிற தேவரீ
ருடையபெண்சாதிபிள்ளையாகும்.—தங்களைவிட்டு நீங்காமலிருந்
தவொருமாதோஉம்முடையசத்தியமாகும்-இதுதான் தேவரீர்கண்
டகனவின்பலனென்றும், இப்படியெல்லாம், வெவ்வேறாய்ப்பிரிய
லாகிறது கபடவஞ்சக விஸ்வாமித்திரனாலென்று கண்ணீர்ததும்ப
வாட்டமுற்றுநம்மைக்காப்பாற்றும். மகாராஜனுக்கும், மகாராஜன்
மனைவிக்கும், பாலகப்பிரமண்ணியனைப்போன்ற தேவதாசனுக்கு
ம், இந்தக்காட்சிவாய்க்கலாகுமாவென்றுகடவுளைநொந்து மனந்த
ளர்ந்துநின்றான். இதனைக்கண்ட சந்திரவதியானவள் மகாராஜனைப்
பார்த்து எனதுநாயகரே-நான்வேறுமைந்தன்வேறு - தேவரீரும்
வேறுபட்டு மெத்தசங்கடத்தையடைந்தாலும், விஸ்வாமித்திரரா
லேஉயிர்போனாலும், சத்தியத்தைமாத்திரங் கைவிடாமலிருந்தால்
அதனால்நல்லகீர்த்தியும், புகழும்உண்டாகுமென்று சொல்லினாள்,
இதுகளைக்கேட்ட அரிச்சந்திரமகாராஜன்சோர்வுற்று இந்தவிதிகா
ணுதற்கோ வேட்டைக்குவந்தோமென்று மெத்தவுமாயாசங்கொ
ண்டுசந்திரவதி-பிள்ளை-மந்திரி-வேடக்கூட்டங்களுஞ்சூழ, அவ்வன
த்தைவிட்டு அரண்மனைவந்து சேர்ந்தார்கள்.

இப்படிவந்திருக்கையில்-முன்னம் - அரிச்சந்திரன் கைப்பா
ணத்தால் அடிபட்டுமறைந்த பன்றியானதுவாயினில் - இரத்தம்
வடியவும்-உடல்துடிதுடிக்கவும் - அநேகம்பாடுபட்டு- காடுமலைக
ளைவிட்டு-கௌசிகன்பார்சென்று என்னை யாட்கொள்ளும்படியா
யெழுந்த முனிவரேசரணம்-தாங்கள்சொல்லியபிரகாரம் நான்செ
ன்று-மன்னர்களையும்-சேனைகளையும்- யானைகளையும் - மாளும்படி
யாய்ச்செய்தேன்-பிறகு- அரிச்சந்திரன் கைப்பாணத்திலகப்பட்டு
படாதபாடுபட்டு பாரினில் இரத்தஞ்சிந்தவும்-அவன்விடும் பாண
வேகத்தினால்குந்தவும் ஆகாரங்கொள்ளவும் - ஆயாசந்தீரவும் புன
லருந்துதற்குங்கூட சாவகாசமில்லாமல் அவனுடைய படைகள்து
ரத்தவும்-பயப்பட்டு பதுங்கயிடமில்லாமலும் - பார்த்தவிடங்குக
ளுடனேசொல்லவும் வாய்திறவாமல் ஆவிதப்பி வந்தேனென்றுப
ன்றிசொன்னதை முனிவன்கேட்டுபயப்படாதே-பயப்படாதேஇ
துவரைக்கும்லேசாகயிருந்தேன் இனிமேல்விடுகிறதில்லை-அவனையு
ம்அவன்பட்டணத்தையும் - பெண்சாதிபிள்ளையையும் காற்றிலி
லவம்பஞ்சுபறப்பதுபோல் பறக்கடிக்கிறேன் அவ்வளவுபடையாஅ
வனுக்குநல்லது குடையுங்கொடியும் கூச்சுபிடுங்கிக் கொண்டு குய்
யோமுறையோவென்றுகூவிக்கூவிகூண்டோடே ஊரைவிட்டுக்கை

யில் ஓட்டைக்கொடுத்து ஓட்டிவிடாமற் போவேனேயானால் என்
பேர்கௌசிகனுவென்றுகறுவி காலகாலருத்திரனைப்போற்கண்களி
ல்தீப்பொறியறக்கக்கெற்சித்து நெடுமூச்செறியவே-அம்மூச்சினி
ல் பேச்சினிற்கிளிபோலும்-நடையினில்அன்னம்போலும்-கைவீ
ச்சினில்மின்னலைப்போலும்-நிறத்தினில் மாந்துளிரைப்போலும்-
லக்ஷணத்தினில்-இரம்பையைப்போலும் - இரண்டுநீச்சப்பெண்க
ள்உற்பத்தியானார்கள்-இப்படியுதித்த பெண்களுக்கோவென்றால்-
காமனுங்கைவசமாவான்-இந்திரன்-சந்திரன் இயக்கரும்- ஏவல்புரி
வார்கள்-தண்டு-கமண்டலங்கையிற்றாங்கிய தவமுனிவர்களுஞ்சரண
மடைவார்கள்-இத்தன்மையமைந்த பெண்களைமுனிவன் உய்த்து
நோக்கி உளமகிழ்ந்து அருகிலழைத்து-நானாவிதஉபாயமும்-நவ
ரசமுள்ள நாதகீதமும்-எட்டெழுத்தும் இனியசொல்லும்-யாழும்
கின்னரமும்-ஆடல்-பாடல் - அனைத்தும்-அப்போதே அவர்களுக்
குக்கற்பித்து-அவர்களைப்பாடச்செய்தும் ஆடச்செய்தும்-பார்த்
தாச்சரியப்பட்ட பராக்கிரமசௌரியசாமார்த்திய விஸ்வாமித்திர
ன்பரிந்து அருகிலழைத்து.ஆ-ஆ,பாணற்பெண்களே - நீங்கள் ப
யப்படாமல்-படையிலும்-நடையிலும்-கொடையிலுமுயர்ந்த அ
யோத்தியாபுரியை அரசாளப்பட்ட அரிச்சந்திரன்சமூகம்போய்
உங்கள் பாடல்-ஆடல் பலுக்கு குலுக்கு-நொடிபாவனை-நடைபா
வனை-அமட்டல்-கண்சிமிட்டல்-நயம்-அபிநயம்-இன்னம் ஆகியவி
தங்களையெல்லாஞ்செய்யுங்கள்-அவன் என்னவேண்டுமென்று கே
ட்பான்-எங்களை நீர்மணம்புரியவேண்டுமென்றுசொல்லுங்கள் அ
தைமறுத்தால் அவனுடைய பூச்சக்கிரக்கொடையைக்கேட்டு வா
ங்கிக்கொண்டுவாருங்களென்று-கௌசிகனனுப்ப - அப்பெண்கள்
கையினில்-மகரயாழையெடுத்து முனிவனாற்கொடுத்த ஒப்பில்லாத
ஆடையாபரண முதலியதையுடுத்தி-பதத்திற் றண்டைகொலுசு-ப
ளபளவென்றிலங்க-பார்த்தவருள்ளங்கலங்க-ஆகாயத்திலுள்ள நக்ஷ
த்திரங்களெல்லாம் ஒன்றாயமைத்து இரண்டுருவானதைப்போலச்
சமைந்து-திரண்டுநிமிர்ந்து-குலுங்கும்-இருஸ்தனங்களுக்கு விண்
ணும்-மண்ணும்-துதிபண்ணும்படியாய்-செறிந்து - நகைபுரிந்து-
செப்பொற்சிலையென்றுசெப்ப அன்னங்கள்போல அரியவனங்க
டந்து-அரிச்சந்திரன்சமூகம்வந்து-ஆடல்புரிந்து,அநேகதுதிசொ
ரிந்து மாரனைநிகர்த்தசொரூபா-மன்னவர்போற்றும்நிரூபா- வச்
சிரமுடிபூண்ட-சீலா-மங்கையர்க்கனுகூலா-வாகுவலயம்பூண்டதோ
ளா - மலர்ந்ததாமரைத்தாளா அலையைப்போன்றவுரத்தா - அன்
பாய்த்தந்திடுங்கரத்தா-அடையலர்பணியும்போஜா-அரிச்சந்திரம
காராஜா-என்றுகண்ணயம்-கரநயம்-ஆகியதைக்காட்டி-கருத்தைய
வன்மீதிலோட்டி - நிற்பவர்களை அரிச்சந்திரமகாராஜன்பார்த்து-

கா

புளகம்பூர்த்து-ஆ-ஆ-மாதர்களே-உங்களுடைய ஆடல்பாடலுக்கு
அந்த-அரம்பை-மேனகை-யூர்வசி-திலோர்த்தமை என்னும் நால்வ
ருமிணையல்ல - உங்களுடையவசீகரத்திற்கு - வையகமேழும் - வா
னுலகமேழும்-துணையல்ல-ஆ-ஆ-மெத்தசந்தோஷம்-சந்தோஷம்-
நீங்கள்வந்தகாரியமென்ன-உங்களுக்கு என்னவேண்டியது சொல்
லுங்களென்றுமகாராஜன்கேட்க அதற்கு(மாதர்கள்)தாங்கள்கேட்
டதைத்தருந்தயாநிதியென்றுகேள்விப்பட்டுஓட்டமுந்நடையுமா
ய்வந்தோம்-பரதநாட்டியமாடும் பாணற்பெண்கள்நாங்கள்-எங்க
ளுக்குத்தங்களுடைய திருவுளச்செயலினால்எல்லாப்பாக்கியமுமு
ண்டுஇப்போதுபூச்சக்கிரக்குடையின்பேரில் ஆவலாய்வந்தோம்த
ந்தாலும்மைஇக்காசினியுள்ளவரையில் புகழ்வோமென்றார்கள்அத
ற்கொவ்வாமல்-மன்னன்-அடாததைக்கேட்டால்கொடார்கள்யாரு
மென்றான் அதைக்கொடுக்காவிட்டால் அதற்குப்பெரிதாகிய ஆவ
லொன்றுண்டு அதென்னவெனில்-அடியார்களைத்தழுவி-தனத்தினை
யிருகப்புல்லி தவழ்ந்துவிளையாடி-சர்க்கரைப்பந்தலில்தேன்மாரி
பொழிந்தாற்போலஎங்கள் இன்பத்துக்குகந்தகுந்தகணவர் நீரே
யல்லதுவேறேயொருவரையுங்காணகிலோம் ஆகையால்நாடிவந்த
வரையோடிப்போகச்சொல்லாமல்வாடியென்றழைத்து -கூடிக்கு
லாவிபஞ்சணையிற்கொஞ்சிசரசமிஞ்சிவஞ்சியர்நெஞ்சிமகிழச்செ
ய்தனுப்பினால்உம்மை இறையென்றுமறையுந்துதிசெய்யும்-ஆபத்
தைத்தீர்ப்பதுவேஅலங்காரம் அவ்வளவுபகாரஞ்செய்வது தங்க
ளுக்குஅருமையல்ல அதனாற் பெருமையுண்டாகுமென்று மாதர்
கள்சொல்ல (மகாராஜன்)அரிகரி சிவசிவாவென்று கையைச்செவி
யில்வைத்து ஓதென்னைகண்காட்சி காளகட்கபாணி - கபாலி - திரி
நேத்திரசடாதரா - திரியம்பகா - இதுவுமுந்தன் திருவுளச்செயல்
தானோ-என்தேவி சந்திரவதிதவிர - மற்றவரைத்தாய்தமக்கையாக
அல்லும்பகலும் அறுபதுநாழிகையும் ஸ்தவுத்தியஞ்செய்கின்ற
என்செவியில் இப்பேர்ப்பட்ட தகாதவார்த்தை நுழையச்செய்
தீரோ இதுவு முன்செய்தபழிதானோ - அல்லது விதிவழிதானோ-
வினைவழிதானோவென்று மன்னன்வெகுண்டு மாதர்கள்பேரிற்சீறி
னான்-அதற்குமாதர்கள்-ஓ-மகாராஜனே - நாங்கள்முன்னங்கேட்ட
பூச்சக்கிரக்குடையுந் தரமாட்டேனென்றீர் பின்புமருகவழைத்த
தையுந்தடுத்துவிட்டீர் ஆகையால் நாங்கள்கொண்டுவந்த அன்பு
ஆற்றினிற்கரைத்த புளியாய்ப்போச்சுதே-அதுவாநீதி - மகாஅநீதி
யாயிருக்குதே மகாராஜனேயென்று மாதர்கள்சொல்ல - சத்திய
கீர்த்தி சினங்கொண்டு - சாமார்த்தியவித்தைகற்றுவந்த ஜகஜாலப்
பிரட்டுள்ள மாதர்களே-உங்களுக்குத் தகுமானதைக்கேட்டால் த
டையில்லாமற்றருவோம்-குடையைக்கேட்டாற்கொடுப்பார்களா

ஒருக்காலுங்கொடார்கள் அதைவிட்டுத்தழுவவழைப்பதுதருமமா
போபோ பயித்தியக்காரமாதர்களேயென்று மந்திரியியம்ப-அத
ற்கு(மாதர்கள்)கேட்டதைத்தருங் கீர்த்தியாளனென்று கடல்சூழ்ந்
தநாட்டிலுள்ளோர்கள்சொன்னார்கள்ஆகையால்வந்தோம் இப்பே
ர்ப்பட்டகள்ளமனதுடையவள்ளலென்றால் எங்கள்உள்ளந்தானுடு
மா எங்கள்ஆவலாகிய-தீ-உம்மைத்தான் விட்டோடுமா - இவ்வளவு
தானா உம்முடையகீர்த்தியென்று மாதர்கள்வையவே-மன்னவனுக்
குமனதினிற்கோபமூண்டு ஓமந்திரிகளே இந்த நீச்சப்பெண்களை
வெளியிலேதள்ளிவிடுங்களென்றுசொல்லவே சேவகர்கள்வெகுண்
டுவெவ்வியபுலிபோற்பற்றியிழுத்துவெளியினிற்றள்ளிவிடவேமா
தர்கள்கையில்வைத்திருந்தவீணையுமொடிய-கட்டிய ஆடையுங்கிழி
ய-வரும்வழியில்உதிரமுஞ்சிந்தக்-கூந்தலுங்கலைய - வாய்திறந்தழு
து-மன்னவன் வசனித்ததெல்லாம் பழுது என்று மாமுனியைத்
தொழுது-அபயமபயமென்று முறையமிட்டலறவே மாமுனிகண்
டு-மாதர்களே என்னதீது-எவரடித்தாரிப்போது-சொல்லுங்கள் அ
வனைக்கொல்லுகிறேனென்றுகேட்க-ஓமுனிநாதா-தாங்களிட்டகட்
டளைப்படிஅரிச்சந்திரனிடம்போய்-ஏழிசைகளும்பாடியாடி தே
வரீர்சொன்னவண்ணங்கேட்டோம்,அதற்கவன்வெகுண்டு எங்களை
த்துறத்தியடித்து இம்சைசெய்ததைச் சொல்லவென்றால் முடியா
தென்றார்கள்.

கௌசிகன்-அச்சொல்லைக்கேட்கவே - திரோகத்தினில் வெயர்
வைசிந்த கார்காலஇடியிடித்ததுபோல இருகண்ணிலும் அக்கினி
ப்பொறியெழுந்து திக்கனைத்து மூடும்படியாகச் சினமிகுந்து மு
ன்னம் பன்றியைப்பாணத்தாலடித்தான்-இப்போது உங்களையும
டித்தானல்லவா-அப்படியடித்ததைக்குகிட்டிக்கோலும்-காலுக்கு
ங்கழுத்துக்கும் அண்ணாந்தாளும்போட்டு அந்த துஷ்டனுக்குத்த
குந்தசிக்ஷைசெய்கிறேன் என்னிஷ்டபுத்திரிகளே-அஞ்சாதீர்கள்-
ஒருவர்மீதுநாம் வஞ்சம்வைப்பதேயில்லை - வைத்தால்கொஞ்சத்தி
ல்விடுவேனா-ஆ-ஆ, திரிமூர்த்திகள்வந்துதடுத்தாலும்-தேவர்கக்க
ளெல்லாம்போர்கொடுத்தாலும் திரணமாவது நெஞ்சிதக்கங்கொ
ள்வேனா-உங்களையவன்தொட்டதே அவன்சத்தியங்கெட்டுவிட்ட
தென்றறியானா-நல்லநெறியோனானால் என்வல்லமையைப் பகுத்த
றியானா-இதோஅவனுடைய பாரியதீரத்தைப்போயறிவதேகாரிய
மென்றவீரியஞ்செய்து - அழகியசடாபாரமசையவும் - அகண்ட
தோள்கள்குலுங்கவும்-அம்புவியெங்குநடுங்கவும் அதட்டிவீசிவ
ருவதைக்கண்ட அரிச்சந்திரமகாராஜனும்-சத்தியகீர்த்தியும் மற்று
முள்ளோரும்-அறண்டுபுரண்டுயாவரும்வந்து அரகராவென்றிடம
ன்னவனானவன்பணிந்து முனிவனுடையபாதத்தைப்பற்றிட-அப்

போதமுனிவன் அடா அரிச்சந்திரா-நீதானோ சத்தியசந்தனல் உன்
னுடையபெரும்பிரதாபமும் - பெண்கள்பேரிலேயா காட்டுவது-
தேகிபென்றுவந்தவர்களையார் அடித்தோட்டுவது உன்னுடையநெ
ஞ்சின் துணிவேதுணி-ஆ-ஆ, மகாயோக்கியன்-நல்லசற்குணனென்
றல்லவோநினைந்திருந்தேன் இதுவல்லாமல் முன்பு அநேகஞ்சேனை
களைவதைத்தாய்-விலங்குகள்-பறவைகளைச்சிதைத்தாய் - அலர்ந்து
குவிந்துசெழித்திருக்கும்-நந்தவனங்களையழித்தாய் - நானுப்பி
யபன்றியையும்அம்பாலெய்தாய்- அற்புதஅலங்காரசித்திரவிசித்தி
ரமான என்புத்திரிகளையும் இப்போது உதிரம்பெருகும்படியாய
டித்தாய் பின்பு திருட்டுவேஷம்போட்டுக்கொண்டு திட்டென்றெ
ழுந்துவந்து காலைப்பிடித்தாய் - விடுவிடாவென்று காலிலை
கொண்டிழுத்துதைக்கவே-மகாராஜன் அதற்கஞ்சாமல்தன்னுடை
யமணிக்கிரீடம் மாதவன்கால்களிற்பட்டதோ வென்னமோவென்
றுமறுபடியும் மலரடியைக்கரத்தினாற்பிடித்து-ஓசுவாமி(சிறியோ
ர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராகிப் பொறுப்பதுகட
னே) யென்றிருக்கின்றதே-ஆதலால்அடியேனுக்குத் தங்கள் புத்தி
ரிகள்தங்கைகளாச்சுதே-அவர்களிஷ்டத்துக்கு அடியேன்பாத்திய
ப்படுவேனோ-பாதகமல்லவா-எல்லாக்காரியத்திலும்இதுபொல்லா
தகாரியமாச்சுதே-பூமியில்வாழவேண்டுமே-இதுதானென்னுடை
யயெண்ணம் (தெய்வஞ்சீறிற் கைதவமாகுமே) என்றதைநினைத்
துநீக்கினேன்-ஆதலாற் சிறியேனைக்காக்கவேண்டும்-சினத்தைநீக்க
வேண்டும்-செஞ்சடாதரா-தீனதயாபரா - என்றுதியானிக்கையில்-
பின்னுமுனிவன்சொல்லுகிறான்- இப்போதும்நீஎன்னுடையகுமா
ரத்திகளை மணஞ்செய்துக்கொண்டால் நீசெய்தகுற்றங்களெல்லா
ம்மன்னிப்பேனென்று சொல்லவே - மகாராஜன் சுவாமி தங்கள்
கோபத்தால் எழும்புந்தீயில்-அடியேனைச்சுட்டாலும் - உயிர்விட்
டாலும்-புலைச்சியரோடு புணராகுமா-உலகம்நகைக்காதா இதை
மறந்துவிடுமென்னவே-முனிவனுக்குக்கோபம்பிறந்து - முன்னா
லேவசிஷ்டன்சாபத்தால் உன்பிதாபுலையனானான் அவனுடையபுத்
திரனாகிய நீயும்புலையனல்லவா சொல்லென்னவே- மகாராஜனவ
ன்சுவாமிஅந்தச்சாபத்தைத்தீர்த்தவரும்நீர்தானே அப்படியிருக்க
இப்போதுஎன்னையும்புலையனாக்க-தேவரீர்நினைத்தது நியாயமல்ல
வென்றுமவரடியைவணங்கிச் சுவாமிதேவரீர் அடியேனுடைய இ
ருகண்ணைக்கேட்கினுந்தருவேன் - இந்தப்பூமியைப் பொன்னைக்
கேட்கினுந்தருவேன் - அந்தப்பெண்ணை மணஞ்செய்யமாட்டே
னென்றுமறுபடியுஞ்சொல்ல-விஸ்வாமித்திரன்-ஆ-ஆ, ஓய்அரிச்ச
ந்திரமகாராஜனே-இப்போதுஇந்தப்பூமியைக்கேட்டாலுந் தருகி
றேனென்றுசொன்னாய்-அதைமறுக்கப்போகிறாய்- இந்திரசந்திர

சூரியர்சாட்சி ஆகாயப்பூமிசாட்சி-ஓய் அரிச்சந்திரமகாராஜனே அ
ப்படியே தாருமென்னவே-அரிச்சந்திரனுமவன் - சுவாமிதங்கள்
மொழிப்படியே-இதோ என்னுடையநாடும், ஆஸ்திபாஸ்திகளும்
தேவர்மூவர்சாட்சியாக இதோதந்தேன் இதோதந்தேன் கையைப்
பிடியும் ஜலம்விடுகிறேன் மாநிதியும், மாநகரும், யானைகளும், சே
னைகளும், இரதமும், குதிரைகளும்-எல்லாம்உம்முதேஎன்று முனிவ
ன்கையிற்றாரைவார்க்கக் கௌசிகன்பெற்றுக்கொள்ளவே தன்னுட
ன்கூடவந்தமுனிவர்கள் யாவருமெழுந்து எல்லாம்கௌசிகருடை
யகைவசமாயிற்றென்று எழுந்தாடினார் - வாய்மலர்ந்துபாடினார்-
தெருக்கள்தோறும்தோரணமிட்டார் காவிக்கொடிபோட்டார்-பி
ன்னும்விஸ்வாமித்திரர்நானிவ்வூரையாளும்படியாய் உன்னுடைய
செங்கோலைத்தாவென்றான்-மகாராஜனும் மனங்களித்து அப்படி
யேஇதோதந்தேன் அடியேங்களுக்குச் செல்வுகொடுஞ்சுவாமியெ
ன்று அரிச்சந்திரனும்-சந்திரவதியும்-சத்தியகீர்த்தியும் - தேவதாச
னும்பணிந்துநிற்க, விஸ்வாமித்திரன்- இவ்வளவுதானா நீயும் உன்னு
டையமனைவியும்-தேவதாசனும்-மேலேயணிந்திருக்கும் மணியும்
பணியும்-வளையும்-வலயங்களும் வாளும் - கிரீடமுங்கொடுத்துப்
போய்வாரீர்களென்றுகேட்க-இதோ தடையில்லாமல் எல்லாங்கழ
ட்டித்தந்தோம் தேவரீர்சித்தமகிழ்ந்து சீக்கிரம்விடைகொடுஞ் சு
வாமியென்றுமெல்லடிபணிந்தஅரிச்சந்திரனைப்பார்த்து-ஆ-ஆ, நல்
லநியாயம்-நல்லநியாயம்-ஓய் அரிச்சந்திரமகாராஜனே - நாட்டை
விட்டுக்காட்டிற்போகிறவர்களுக்குக் கனகமயமான ஆடையென்
னத்திற்குஎல்லாம் அவிழ்த்துக்கொடுத்துவிட்டுப்போங்களென்று
கேட்டவிஸ்வாமித்திரனைமன்னவன்பார்த்து-ஓய் ஸ்வாமிஉண்ணாதி
ருந்தாலும் உடமையில்லாமற்போனாலும் நல்லஉடுபாவனைவேண்
டாமா-நாங்கள்ஊரைக்கொடுத்தோம் உற்றதெல்லாங்கொடுத்தோ
ம்-உடுக்கும்ஆடையைக்கொடுத்து ஆளாப்போய்க்கேட்போம்-ஆர்
பாலிரப்போம் ஆபத்திற்குயார்கொடுப்பார்கள் ஐயனேயென்ற
மன்னவனைப்பார்த்து நான்தருகிறேனென்று தன்மேலிருந்தஒ
ருகாவிவஸ்திரத்தை மூன்றுதுண்டமாகக்கிழித்து - மன்னவனுக்கு
ஞ்சந்திரவதிக்குந்-தேவதாசனுக்குங்கொடுக்க-அதனைவாங்கிக்கொ
ண்டுஅவர்களுடுத்தியிருக்கும்ஆடைகளை அவிழ்த்துக்கொடுத்துஆ
ண்டியைப்போலானோமே-ஐயையோ தெய்வமேயென்ற-அருகி
னிலவர்கள்வந்து (அரனைப்போலவதரித்த) ஐயனேசரணஞ் சர
ணம் அடியார்களுக்குச் சிலவுகொடுமென்றுதாழ்ந்துகேட்டமகா
ராஜனுக்குவிடைகொடுக்கப்பெற்று, நால்வரும்மதியினில் விதியை
நினைத்து-மாமுனிசெய்தமாயத்தையும்-மாறிமாறிக்கேட்டஞாயத்
தையும்-ஒருவரோடும்வழுத்தநாவெழாமல்மகாதுக்கத்தோடுவெட்

நால்வர்மனமும் உட்கிநடுத்தெருவில்வந்துதெய்வமேசிலைக்கெடுத்தாயோ-எங்களைத்தெருவில்விடுத்தாயோ- என்றுதேம்பியழுது மூவரும்எவ்வழிசெல்வோம் எவ்வூரிற்போயண்டுவோம் என்றுதேவதாசனைப்பார்த்து தேம்பியழுது திகைத்துவாடும்போது-மறுபடியும்மாமுனியானவன்-ஓ-ஓ, மறந்தோம்மறந்தோம் சீக்கிரம் ஓடிவாருங்கள்-ஓடிவாருங்களென்றுகூப்பிட மறுமொழிசொல்லாமல்வந்துவரய்ப்புதைத்துக் கைகட்டிநிற்கின்றமன்னவனை மாமுனிபார்த்து நான்முன்மறந்தாலும் நீருமறந்தீரோ - ஆ - ஆ, நன்றாயிருந்தது-முன்னம்நான்வேள்விக்காக உம்மிடத்தில் ரொக்கமாய்க்கட்டிவைத்தபணமெங்கே அதனை கொடுத்துவிட்டுச் சுகசீவியாய்ப்போய்வருவீர்களென்றுகௌசிகன்சொல்ல- மன்னவன்மயங்கித்தியங்கி இதுவுமெங்கள்விதியா-ஈஸ்வரா-நீசெய்தசதியா - நல்லது-சுவாமிமாதவரே-தாங்கள்முன்பு என்னிடத்தில்வைத்த திரவியத்துடனேதானே இதுகளெல்லாஞ் சேர்த்துக்கொடுத்தேன் இன்னம் வேறேபொன்னுக்கு நானெங்கேபோவேன்-ஆகையால் அடியேனையிறட்டாமலும்-உருட்டாமலும் கிலவுதந்தருள வேண்டுமென்றுதேம்பியழுது திருவடியில்வீழ்ந்தான்.

எதுகாணும் ஓய்அரிச்சந்திரமகாராஜனே - நீ, அடிக்கடி காலில்விழுந்து பசப்புவார்த்தை சும்மாய்படிக்கிறாய் ஆருக்குஇந்த மோசவித்தைகாட்டுகிறாய்-இந்தஊருடனே யெல்லா மூன்றுதென்றமூவர்தேவர்சாட்சியாய்ஜலமெடுத்து முன்னந்தாரைவார்த்துக்கொடுத்துவிட்டு இப்போதுகண்ணீர்ஜலம்விடுத்துக் கதறியழுகிறாயென்னகாணும் இப்போதாவது நான்பணங்கொடுக்கவில்லையென்றுசொல்லிவிடும் - எல்லாங்கொடுத்துவிடுகிறேன்என்று விஸ்வாமித்திரர்சொல்ல- அரிச்சந்திரன் ஐயா அடியேன் அப்படிசொல்வேனா-எப்படியாகிலும் இவ்வூரிலாவது இறந்துதருகிறேன் எனக்குஒருகெடுவுகொடு மகாரிஷியே-என்றுகேட்க - விஸ்வாமித்திரர் ஆ-ஆ,இவ்வூரிற்பிக்ஷையெடுப்பது என்னுதேயொழிய உனக்காகாது மற்றெங்கேயாவதுபோய் இரந்துகொடுவென்றுசொல்ல அப்படியேமகாராஜன்சம்மதிக்க(நாற்பதுநாள்)தவணைகொடுத்தனுப்பநால்வரும் வெளியேபுறப்பட்டார்கள் அப்போதயோத்தியாபுரியிலுள்ளபிரஜைகளெல்லாம் அரசனையும்சந்திரவதியையும் மைந்தனாகியதேவதாசனையுப்பார்த்துக்கண்களில்நீர்ததும்ப மண்ணிற்கடடவென்றுபுறண்டு எங்களைக்காப்பாற்றும் மகாராஜனுக்குஇப்பேர்ப்பட்டகாரணம்கௌசிகனால்விளைந்ததோ கடவுளேயென்றுகசிந்துநசிந்து-காலினில்விழுந்துகதறியழுது கலங்கியிருப்பவர்களைஅரிச்சந்திரமகாராஜன்பார்த்து நீங்கள்சிந்தனைப்படவேண்டாம்எல்லாம்சிவன்செயற்படிநடக்கும்-ஆகையால்நீங்கள் இனிமுதற்

கொண்டுஎன்னைப்போலஇந்தமகாரிஷியைப்பாவித்து எனக்குக்க ட்டிவந்த பகுதியைப்போல இவருக்குக் கட்டிவரவேண்டியது, மேலும்அண்ணுடம்இவரைக்கண்டுஇவர்சொல்லுகிறபிரகாரம்நட க்கவேண்டியது என்றாக்கியாபிக்க,அவ்வாறே நடக்கிறோமென்று சொல்லவேஉடனேமுனிவர் கூட்டங்கள்சூழவும் மன்னவர்கள்தா ழவும்,சிம்மாசனத்திலேறி விஸ்வாமித்திரமகாரிஷியானவர் இவ்வு லகமெல்லாம்இன்பமுடனே யாண்டுக்கொண்டிருந்தார்.

இப்பால்-பூமியாதியந்தமும்,முனிவனுக்குக் கொடுத்துவிட் டோம் இனிநாமிங்கிருப்பதுதகுதியல்லவென்று இராஜராஜர்களு ம்மந்திரிமார்களும், சேனைகளுஞ்சூழ்ந்துவர-சந்திரவதியும்- தேவ தாசனும்முன்செல்ல-அரிச்சந்திரமகாராஜனும், சத்தியகீர்த்தியும் பின்னடந்தார்கள்- அப்போது அங்கிருப்பவர்கள் - ஐயோகுடை கொடி-யானை-சேனை-குதிரை-நாடுநகரம்- ரொக்கரோசனம்-பணி- மணி-பதி-நிதி-எறும்இரதம்-ஆகிய இவையெல்லாம்விடவும்-இவ்வ ளவுபாடுபடவும் (ஈஸ்வரனிவர்களுக்கு) இட்டகட்டளையோவென் றுஇரைச்சலிட்டழுபவர்கள்சிலர் சிறகிழந்தபட்சிபோலும்-வேலி யில்லாதபயிர்போலும்-கையிலிருந்தகோல்துறந்த பிறவிக்குருட னைப்போலும்-ஆக்கி-ஊனைவிட்டு நீக்கிவிட்டாரோ-ஆண்டவனெ ன்று அடிவயிற்றிலடித்துக்கொண்டு-ஐயையோவென்று அழுபவர் சிலர்-தேர்மீதும்-யானைமீதும் குதிரைமீதும்-சிவிகைமீதும்-ஏறி இறைவர்கள்மணிமுடியிலைழ்யும்பாதம் - இப்போது-புல்லும் -கல் லும்-புழுதியும்படியபொன்போன்றமேனியில்-வேர்வைநீர்வடிய பொல்லாதகாலம் பொருந்தியதோ எங்கள்புரவலனுக்கென்று புர ண்டு புரண்டழுபவர்கள்சிலர்-அன்னநடை போன்ற அயிராணிக் கொப்பாக-ஆருங்காணுதம் கரிதாகி அந்தப்புரத்திலிருந்து-சுகத் தையடைந்தசுந்தரமுள்ள சந்திரவதியம்மாள் துக்கப்படவும்துவ ண்டழவும் கந்தைத்துண்டு இடையிலே பூணவும், காசினியிலுள் ளோர்காணவும்,காலம்வந்ததோகடவுளேயென்று கையொடுகையி சைந்துகண்களில்நீர்சொரிந்து-கதறியழுபவர்கள்சிலர் - ஆடையா பரணமெல்லாம்வாங்கவும் - அழகானது நீங்கவும்-ஆண்டிச்சிவேஷ ம்ஆகவும்-அருமைபெருமைபோகவும்-அல்லோல கல்லோலமாய் அவஸ்தைப்படவும் ஆக்கிவிட்டானே கௌசிகனென்று வாயொடு வாய்வைத்துமுகத்திலறைந்து வாடியழுபவர்கள்சிலர், மகதயிஸ்வ ரியம்பொருந்தி-வாழும்படியாய்வந்துதித்த (குமாரசுவாமிக்கொ ப்பாகிய) குழந்தையான தேவதாசனைப்பார்த்தாவது விஸ்வாமித் திரனுடையசித்தமிரங்காமல் சிறுவன்பூண்டிருந்தபணி - மணி-து ணியைக்கழட்டச்சொன்னானே அப்போது பெற்றவர்களுடைய சித்தம்எப்படிநொந்ததோ என்னமாய்நைந்ததோ-அரிகரிஇந்த

வயதில்இவ்வளவுபாடுபடும்படியாய் தெய்வத்திற்குஞ்சம்மதியாச்
சுதோஎன்றுநினைத்தழுபவர்கள்சிலர்-மணிமுடிபூண்டு - மாணிக்க
ச்சிம்மாதனமேறி - வாகுவலயந்தாங்கிகையினிற் செங்கோலேந்தி
வையகத்தையாளாமல்வாலவயதிற்றனே - ஆரணியத்திற்கேகவும்-
அதிகவருத்தமாகவும்-அமைந்ததே துயரமுந்துக்கமுஞ் சமைந்த
தே-சுதனுக்கென்றுசொல்லி-அவர்கள்வழிவிட இவர்கள் செல்லுங்
காலையில்மறுபடியும் விஸ்வாமித்திரன அவ்விடம்வந்து - ஓய்மகா
ராஜனே-நீஇப்படிசெய்கிறது நன்றாயிருக்கவில்லை- என்சொல்லைக்
கேளும்அதென்னவென்றால் நலத்தைத்தரும் நாடுநகரைவிட்டு து
க்கத்தைத்தருங் காடுபோவது காரியமல்ல-ஆகையால்என்பெண்க
ளைவிவாகஞ்செய்துக்கொள் எல்லாந்தந்துவிடுகிறேன் வாருமென்
றுகையைப்பிடித்திழுக்க-அப்போது மகாராஜன் முனிவருடைய
காலைப்பிடித்துவணங்கி சுவாமிஎனக்குச்சந்திரவதியென்றஒருபெ
ண்போதும்மற்றவரைக்கருதுவது - தருமத்துக்கும் நீதிக்கும்நெ
றிக்கும்முறைமையல்லவென்னவே விஸ்வாமித்திரன் - வெகுநன்று
நல்லது அப்படியானால் நீநாற்பதுநாளையில் நம்முடையபொன்
னைத்தருகிறேனென்றாய்-அதைநான் நம்பமாட்டேன் - ஆகை
யால்அதற்குவழிசொல்லென்றுகேட்க-சுவாமி,அப்படிஅடியேனை
நம்பமாட்டாமற்போனால் என்னுடனேகூட ஒரு ஆளையனுப்பி
வைத்தால் அவரிடத்தில் தங்களுக்குச்சேரவேண்டிய- பொன்னைச்
செலுத்தியனுப்புகிறேனென்று மன்னவன்சொல்ல ஆம் அப்படி
செய்யென்று-விஸ்வாமித்திரன் சுக்கிரனைநினைக்க அப்போது-சுக்
கிரபகவான்-தன்சுரூபத்தைமாற்றிப்-பிராமணனாகிவரவே-விஸ்வா
மித்திரர்சுக்கிரபகவானைப்பார்த்து- வாரும்வாரும்நக்ஷத்திரத்தாக
ரேயென்றுதனியேயழைத்துப்போய் இந்திரன்சபையில் தனக்கு
ம்-வசிஷ்டருக்கும்நடந்தசம்வாதத்தையும் - மேலும் தாங்களிருவ
ருஞ்செய்த சபதத்தையுமெடுத்துக்கூறி அரிச்சந்திரனை இதுவரை
யில் தான்படுத்தியகஸ்திகளில் - அனுவளவும் அவன் பிசகாதிருப்
பதையுஞ்-சாங்கோபசாங்கமாசச்சொல்லி இப்பால்நீர்தான் அவனு
வில் யாதாமொருபொய்யைப்பிறப்பித்து-என்னை இந்திரன்சபை
யில்மெய்யனாக்கிவைக்கவேண்டுமென்றுமிகவும் இரக்கத்தோடுவே
ண்டிக்கொண்டதுமல்லாமல் தன்னுடையதந்திரஇந்திரமந்திரசா
மார்த்தியங்களையும் சுக்கிரபகவானுக்குச்சொல்லி-இவ்வாறுமன்ன
வனையும்-அவன்மனைவியையும் - பிள்ளையையும் - வருத்தஞ்செய்து
நம்முடையவலையி லகப்படச்செய்யென்று அநேகவகைகளையுஞ்
சொல்லிபின்புஇருவரும்-மன்னவனிடம்வந்து (ஓய்நக்ஷத்திரத்தா
கரே) இந்தஅரிச்சந்திரன்பலவந்தனான ஒருஆள் கரியின்மீதிலேறி
கொண்டுகல்எறிந்தால் அந்தக்கல் எவ்வளவுதூரம்போகுமோ அவ்வ

ளவுபோன்நமக்குநாற்பதுநாளையிற் கொடுக்கும்படியாய்கெடுவு-
ஆதலால்நீர்கூடவேசென்று நாற்பதுநாளையில்அதைநீ ரிவரிடத்தி
ல்வாங்கிவந்துநமக்குச்செலுத்தவேண்டியது-மேலும் நீர்போகிற
தாருக்கூலியும்இவரிடத்தில்பெற்றுக்கொள்வதன்றி அந்தப்பணம்
எப்படிவாங்கவேண்டியதோ அதற்குத்தகுந்தவயணத்தைநீர்செய்
துக்கொள்ளவேண்டியது-இப்போதே நீர்கேட்கவேண்டிய தெல்
லாம் என்முன்பாகக் கேட்டுக்கொள்ளுமென்று விஸ்வாமித்திரர்
சொல்ல-நக்ஷத்திரத்தாரகர் ஓய் அரிச்சந்திரமகாராஜனே மெய்தா
னு-நாற்பதுநாளையில் பணத்தைக்கொடுப்பீரா-ஐயையோ பாவம்
ஏதேது உன்கையில்ஒருகாசளவுங்காணோமே - எங்கேயிருந்துகொ
டுக்கப்போறீர்கொஞ்சநஞ்சமல்லவேகொடுக்கிறதற்குவேண்டாம்
வேண்டாம்விஸ்வாமித்திர மகாரிஷிசொல்லுகிறபிரகாரம்நடந்துக்
கொள்ளுவீரேயாமானால் நீர்கொடுத்த-நாடு-நகரம்-ரொக்கரொச
ணம்-சேனை-யானை-தேர்-செங்கோல்முதலாகிய உன்னுடைய பொ
ருள்கள்ஒருதுரும்பளவும்போகாமல்நான்வாங்கித்தருகிறேன் நீரு
ம்சீர்பட்டுசெழிப்பையடைவீரென்று நக்ஷத்திரத்தாரகர் சொல்ல
வே-அப்படியாகாது அடியேன் (நாற்பதுநாளையில்தருகிறேன்)
வாருஞ்சுவாமியென்ன (ஆ-ஆ-ஏதுவானும்) அரசமரத்தைப்பிடித்
தசனி பிள்ளையாரையும்-பிடித்ததென்று பெரியோர்சொல்லுவது
போலஉங்களைப்பிடித்தசனி ஏழைப்பிராமணனாகிய என்னையும்பி
டித்ததோ ஆனாற்சரிதான் நாற்பதுநாளையில் தருவீராவென்று-தர
கனாகியசுக்கிரன்கேட்க அப்படியேதருகிறேனென்று மகாராஜன்
சொல்லபின்னையும் விஸ்வாமித்திரன் ஓய்தாரகரேகேளீர்நீர்மூன்று
வேளையும்நல்லமுக்கனிசர்க்கரைப்பால்கேட்டுச்சாப்பிடும்-அவர்க
ள்பட்டினியிருந்தால்அதற்காக நீர்பயப்படாமல்உமக்குவேண்டி
யபணிவிடைகளுஞ்செய்யச்சொல்லும் திரேகசவுக்கியமாக ஸ்நா
னமுதலியதுஞ்செய்யும் தயிர்மோர்நெய்பால் தளர்வில்லாமற்கே
ட்டுச்சாப்பிடும் - நாற்பதுநாளையில் கொடுக்காமற்போனால் அங்
கேயிருக்கப்பட்டவர்களைச் சாட்சிவைத்துவிட்டுச் சரேலென நீர்
வந்துவிடும்என்று விஸ்வாமித்திரர்சொல்ல(நக்ஷத்திரத்தாரகன்)(ஆ
ஆ) அப்படிவாங்காமல்வருவேனோ-நருக்கிப்பிழிந்து- நாசியிலும்
கண்ணிலும் மூளகாயைத்துறுத்து நமதுபணத்தை வாங்காவிட்
டால் நக்ஷத்திரத்தாரகன் நானாகுவேனா நீர்நடவுமென்று சொல்ல
வே, விஸ்வாமித்திரன் அரசுக்குப்போய்விட்டான்.

பின்புஅரிச்சந்திரமகாராஜன் சத்தியகீர்த்தியைப்பார்த்துஅ
ப்பாசத்தியகீர்த்தி- நீ யென்னுடன்கூட வந்துவிட்டால்- மாமுனி
வர்க்கு அரசிலிருந்து நீதிநியாயங்களை ஆர்சொல்லுவார் - அவர்க்
குவேண்டிய ஏவலைஎவர்செய்வார்-உன்னைப்போலஅறிவுடையமந்

திரியாரிருக்கிறார்-ஆகையால்நீஅவரிடம்போய்ச் சேரென்றுசொல்
லவே-மந்திரிகளுக்குத் தலைவனாகியசத்தியகீர்த்தி சொல்லுகிறான்-
சுவாமி இந்நாளாக அடியேன் தங்களுக்கு ஊழியஞ் செய்தேன்
இப்போதுஅனைத்தும் மகாரிஷிக்குக்கொடுத்துவிட்டு பாரியாய்
ஆரணியம்போகவிட்டு அடியேன் இருப்பேனா-உயிர்தான் தரிப்
பேனா-உத்தமனே உங்களைவிடதாய்தந்தை அடியேனுக்குயாரிருக்
கிறார்கள்-தாங்கள்சஞ்சலப்பட்டு-ஊருஞ்சீரும் எல்லாம்விட்டு ஊ
தாரியாய்ப்போகும்போது அடியேன்மாத்திரம்நலத்தையடைந்
திருப்பதுநியாயமா, அதுநன்மையல்ல நானுங்கூடவருகிறேனெ
ன்றுசொல்லிஓவென்றழவேமந்திரியைத்தேற்றி-கண்ணீரைமாற்றி-
வாழ்வினில் என்னுடன்கூடிவாழ்ந்தாய்-தாழ்வுவரும்போது -என்
னைப்போல்நீயுந்தாழ்ந்தாய்-எங்களைச்சூழ்ந்தஊழ்வினைக்குநீயும்உ
டன்பட்டாய்என்று மந்திரியின்பேரில் மெத்தவுமகிழ்வுகொள்ளு
கையில்தாகனாகியசுக்கிரன்-ஓய்,அரிச்சந்திரமகாராஜனே-உங்கள்ச
ஞ்சலமேபெரிதாயிருக்கிறதேயொழிய நாம்வந்ததற்கு யாதொரு
வழியுங்காணேம்-ரொக்கத்திற்குவழிப்படுத்துங்கள்சீக்கிரம்வாருங்
களென்றுநக்ஷத்திரத்தாகர்முன்னடக்கவும் இவர்கள்பின்னடக்கவு
ம் சந்திரவதியானவள்-மைந்தனையும்-மன்னனையும் - சத்தியகீர்த்தி
யையும்பார்த்து-ஐயையோதெய்வமே-அருமையாக அநேகதான
தருமங்கள்பெருமையாகச் செய்ததனால்வந்துதித்த-என்மைந்தன்
சுடும்படியானஇந்தப்பொடிமணலில் அடிவைத்துநடக்கவுமாச்சு
தா-ஆஸ்திபாஸ்தி-அரசு - அலங்காரமெல்லாம்போச்சுதா, ஐயா
வென்றுஅழுவாளொருபக்கம்பின்னும் ஐம்பத்தாறுதேசத்தரசர்க
ள்அணியுமுடியானதுபடியும் அற்புதஅலங்காரபாதத்தையுடைய
என்னுடையஆசைநாயகர்மேனியில் அகோரவெய்யிற்சுடவும்அல
ர்ந்தமுகம்வேறுபடவும்-அநாதைபோல நிற்கவும் அமைந்ததோ
(ஆனாருனுஞ்)சமைந்ததோயென்று அயர்வாளொருபக்கம்,பி
ன்னும்உச்சிதநவரத்தினகச்சிதசிம்மாசனத்தில்ஒப்பற்றஒருகுடை
க்கீழ்அண்ணலுடன்உட்கார்ந்து ஒருசிந்தனையுமில்லாமல் வாழ்ந்த
மந்திரியும் எங்கள்துக்கத்திற்கு உடன்படவந்ததோ - தெய்வம்எல்
லார்க்கும்ஒருமிக்கச்சங்கடந்தந்ததோ என்றுஓவியம்போல்அழுது
(ஓம்அரகரசிவசிவாவென்று-தொழுது)மைந்தனையெடுத்து யார்மீ
திற்சாத்திஅயோத்தியாபுரியைவிட்டுநடக்கையில் அவ்வனத்தில்வா
ழும்பட்சிகள்-விலங்குகளிவர்களுக்குவந்தவருத்தத்திற்காகவும்-நா
ட்டைவிட்டுக்காட்டில்வருவதற்காகவும்-வாட்டமுற்றுவாய்விட்டுக்
கூவாமலும்-குருவிக்கூடிமேவாமலும் வண்டினம் இசைபண்ணாம
லும் மதுவையுண்ணாமலும்-உறங்கிக்கிடந்தன - வானரங்களானது
வாடிவருகிறார்களென்று ஓடிமாங்கனி-பலாக்கனி-வாழை-செவ்வா

ழை-இளநீர்முதலியதை மரங்களிலேறிக்கொண்டுவந்து தருவதுமா
கவிருந்தன-மிருகஜாதிகள் மன்னவனுக்குவழிவிடுதல்போல கூட்டு
கூட்டமாய்க்கூடி கூச்சலிடாமலும்-ஒன்றோடொன்றுமூச்சுவிடாம
லும்-யாதொருபேச்சிடாமலும் - முன்னுக்குச்சென்றதுகள்- விரு
க்ஷங்களானது ஆயாசப்பட்டு-அண்ணனும் பெண்பிள்ளையும்வரு
கிறார்களென்றுஅசைந்துகாற்றைவீசினது அலர்ந்தமலர்களானது
அரசன் வருவதைக்கண்டு ஐயையோ ஆரும்படாத்கடன்பட்டா
ரோ-ஆஸ்திபாஸ்தியைதுறந்துவிட்டாரோ- அரிகரிநாராயணவெ
ன்று-பலபலவென்றுதிர்ந்துவாடிவதங்கிற்று-இப்படியாக வருகையி
ல்தேவதாசனென்பவன் பசியினால்தேம்பியழும்போது சந்திரவதியா
னவள்மைந்தனைப்பார்த்து-மகனேதேவதாசா - வழியினில்அன்ன
மிடுவாராரிருக்கிறார்-என்றுவாரியெடுத்து-மாங்கனி - விளாங்கனி-
முதலியதைமகன்கையிற்கொடுத்து-வாடியமுகத்தைத் துடைத்து
மலர்போன்றகண்களில் முத்துமுத்தாகநீரைவிடுத்து-வந்தவிதியை
நினைத்து தலையைக்குனிந்து வாட்டங்கொள்ளும்படியாய்-ஐவரும்
அந்தக்காட்டினில் ஓர்நந்தவனத்திற்போய்த்தங்கினார்கள்.

அப்போது-சத்தியகீர்த்தி மிகவுந் துக்கத்துடன் வனமுழுது
ந்துந்திரிந்து-நல்லகாய்கனிகளைக்கொய்துக்கொண்டுவந்து மன்ன
வன்முன்வைக்க-அதனில்மதுரமும்-வாசனையும் இனிப்புமுள்ளதா
யிருப்பதையெடுத்து மறையவர்க்குக் கொடுத்து வழிமுறைவந்த
னையோடுவணங்கி சுவாமிஇதைத்தாங்கள் அருந்தவேண்டுமென்று
அடிபணிந்தான்-அக்காலையில்தரகன்வெகுண்டு கடுஞ்சினங்கொண்
டுமகாராஜனே- நீ எனக்குச்சொல்லியழைத்துவந்ததென்னவென்
றால்-தயிர்-நெய்-பால்-சோறு-இத்துடன்தளராமல் உண்டிரென்று
எனக்குச்சொல்லிமுதலிலேயே,காயும்-கனியும்-கிழங்கும்-இலையும்
தின்னும்படியாயும் வாயும் - வயிறும் - மாடுபோல பெருக்கும்ப
டியாயும்வைத்தாயோ என்றுதரகன்கேட்க-மகாராஜன்மதிமருண்
டு-வாதையிற்சுருண்டு.சுவாமி - நாடுநகரமுதலானதெல்லா முனிவ
ருக்குக்கொடுத்து-காடு-மலை-வனம் - வனாந்திரமுள்ளவிடத்தில் வந்
ததைக்கண்டிருந்தும்-இவ்விடத்தில்நீர்கேட்டது-அகப்படுமா அடி
யேன்மீதிற்கிருபைசெய்து அருந்துமென்றான்-அத்தருணத்தில் ச
ந்திரவதியானவள்-சுவாமிஎங்கள்வாழ்வைக்கலைத்து தாழ்வைக்கொ
டுத்தகன்னெஞ்சமுடையகௌசிகரைப்போல தேவரீரும்வன்னெ
ஞ்சமாகினால் எப்படிஎன்னசெய்வோம் - தங்களுடைய கிருபாக
டாக்ஷம்எங்கள்மீதுவைத்து-இப்போதிதைஅருந்தவேணுமென்று
வருந்திவாடிகேட்க-தரகன்இன்னம்பார்ப்போமென்று சற்றேதய
வுகூர்ந்துஅதையுட்கொண்டு ஜலமருந்தி ஓய்மகாராஜனே நானுங்
களுடன்இந்தக்காட்டினில்கானலில் அவஸ்தைப்பட்டுவந்தலையா

ல்மெத்தவுங்களையாயிற்று-அதன்மேல் காய்கனிகளை யுண்டதினால்
ஆயாசமுண்டாகிநித்திரைவருகின்றது-ஆகையால் நீங்களிருவரும்-
சற்றுநேரம்நம்முடையகால்பிடிக்கவேண்டுமென்றான் அதற்கிசை
ந்து அரிச்சந்திரனும்-சந்திரவதியும் - இருபக்கமிருந்து சுக்கிரபக
வானுக்கு-இனிமையான துதிகளையுந்தங்களுக்குவந்து சம்பவித்த
கதிகளையுஞ் சொல்லிக்கொண்டே-தங்களுக்கொருவர் வேலைசெய்
துபோகவும்-தாங்களிப்போதுகாலைப்பிடிக்கலாகவுஞ் சம்பவித்த
தோவென்று பிள்ளைக்குத்தாலாட்டுவதுபோல் - தரகராகியபிராம
ணருக்குக்கால்பிடித்திருந்து அவனைநித்திரைசெய்துவைத்து- அத
ன்பின்புஅக்கனிகளில்மீந்ததைத்தாங்களருந்திப்புனலையுமுட்கொ
ண்டுமைந்தனைப்பார்த்துவாடியழுது-வாரியெடுத்துமாதாவானவ
ள்நித்திரைசெய்துவைத்துமன்னவனும்-மங்கையும்-மந்திரியும்வா
ட்டமுற்று அவ்வனத்தில்சற்றேநித்திரைசெய்தார்கள்-அப்போது
விஸ்வாமித்திரன் வருணபகவானால்அமோகமான இடியும் மின்ன
லும்-காற்றுமழையுங் கலந்தடிக்கச்செய்து-எங்குஞ் ஜலப்பிரளய
மாகச்செய்தான்-அந்தமழையினால்-மன்னவனும்-மாதும் - மகனு
ம்மந்திரியும்நனைந்துவேறுவஸ்திரங்கூடபோர்த்தவும்அதையவிழ்
த்துடுக்கவும் வழியில்லாமல் துன்பக்கடலிலாழ்ந்தி ஆதிபராஞ்சுட
ரேஆலகாலமூர்த்தியே அநாதைகளுக்கு ஆதரவாகச்செய்யலாகா
தா-அருட்கண்பார்க்கப்போகாதா-அரகராவென் றுலைவாய்க்கரும்
புபோலும்-அரவின்வாய்த்தேரைபோலும்-ஆழ்கடலிலுடைந்தமா
க்கலம்போலும்-ஆக்கிவிட்டீரோஎன்று அகமெலிந்து முகநலிந்து
சுவாமிநக்ஷத்திரத்தரகரே- மழையோவிடுவதில்லை காற்றுவதுவரவ
ரவிசையாகவீசுகிறது-இடியுமின்னலும் - அதிககெற்சனையாய்கெ
ற்சிக்கிறதுபொழுதும்போகிறதுவெள்ளமும் ஜாஸ்தியாய்ப்பெரு
குகின்றது-ஆகையால் சீக்கிரமாக ஒருஊரைப்பார்த்து அவ்விட
ம்போய்த்தங்கலாம்வாருமென்றுதரகனையழைக்கத்தரகன் விடவி
டவென்றுநடுநடுங்கிஓமகாராஜனே உம்மாலேநமக்குஇனியில்லாத
அவஸ்தைகளெல்லாஞ்சம்பவித்தது-வேஷ்டிகளெல்லாம் நனைந்து
விட்டது-தேகமோகுளிரெடுக்கிறது-நம்முடைய ரொக்கத்தை
மாத்திரம்கொடுத்துவிட்டால்நானிப்படியேஇப்பவே ஓடிப்போ
கிறேன் அவ்வளவு சகாயமாத்திரம் செய்யுங்காணும் ஓய்அரிச்சந்
திரமகாராஜனேயென்றுதரகன்கேட்க-அரிச்சந்திரமகாராஜனானவ
ன்சுவாமிஅப்படியேநான்சொல்லிய கெடுவுபிரகாரம்தருகிறேன்
வருவீரென்றுமன்னவனும்-மந்திரியும் - சந்திரவதியும்வணங்கி ய
ழைத்துக்கொண்டு தேவதாசனை மந்திரியெடுத்துக்கொள்ளவும்-ச
ந்திரவதிகரத்தை மகாராஜன்பிடித்துக்கொள்ளவுங்காலினால்வழி
யைத்தடவிக்கொண்டுபாம்புகள்தலையைமிதித்தும் - இனியில்லாத

அவஸ்தைகளைப்பட்டும்ஈஸ்வரா யென்னமாய்ப்போவோம் இனியேது
செய்வோம்எங்களுக்கெல்லாம் தலையெழுத்து ஒன்றாச்சுதோ-உம
து திருவருட்கண்பார்வையும் எங்களைவிட்டுப் பொய்த்துப்போ
ச்சுதோ-இந்தயிடியிலும்மின்னலிலும்காற்றுமழையிலும்இதுவழி
இதுமலை-இதுஏரி-இதுஆறுஎன்றுதெரியவில்லையே - வழியும்புரிய
வில்லையேசங்கராஇப்பேர்ப்பட்டசங்கடத்தில்விடலாமா-தாயுந்த
ந்தையும்நீர்தானென்றுதவம்புரிந்தோமே-தானதருமங் கேட்டவர்
களுக்குஇல்லையென்னாதுசொரிந்தோமே-அதனாலோஇந்தயிருட்
டினில்ஒருவர்முகம்ஒருவருக்குத்தோன்றாமற்போனதென்று தனி
த்தனியாய்த்தவித்தழவும்-சந்திரவதியானவள் (சந்திரசேகரனே)இ
துவும்-எங்கள்தலைவிதிதானோ- அறியோமேஎன்றுதன்பிள்ளையைத்
தானொருபக்கம்பிடிக்கவும்-அப்போதுவிஸ்வாமித்திரன் மாய்கை
யாலிருவரையும்பின்னுமுன்னுமிழுத்துப்போய் மரத்தினிலிடிக்க
வும்-தட்டுக்கெட்டுத்தடமாடிப் பரதவித்துப்போகிற தருவாயில்நர
கன்ஓய் அரிச்சந்திரமகாராஜனே-உனக்கென்ன கொஞ்சமாவதுஅ
றிவில்லையா-தெளிவில்லையா-அயோத்தியாபுரிபோய் மாமுனிவனு
டையமகளையணைப்புரிந்து - நல்லவாழ்வுவாழ்வதைவிட்டு - மழையி
லும்-காற்றிலும்-மின்னலிடியிலும்-வெள்ளத்திலும்- நள்ளிருளிலு
ம்-நடுக்காட்டிலுமகப்பட்டுநலியவிதியா-இதுவுமதியா - உன்னைந
ம்பிவருகிறார்களேஇந்தச்சந்திரவதியும்மந்திரியும் இவர்கள்உன்னை
விடத்தேர்ந்தவர்கள்தான்-வீணாகஅறியாதகுழந்தைக்குக்கூட அவ
ஸ்தைகொடுத்துக்கொல்லுகிறாயே-வேண்டாம் வேண்டாம் வாரும்
நான்சொன்னபடியேகேளும்-எல்லாம்வாங்கித் தருகிறேனென்ற
ழைக்கஅதற்குமன்னவன்(சுவாமி) என்னபோனாலும்எதுவந்தாலு
ம்எங்களுக்கு எவ்விதத்துன்பமானாலும்-வேறொருமாதை இச்சிக்க
மாட்டேனென்றுசொல்லத்தரகன் ஓய் அரிச்சந்திரமகாராஜனேநீ
இச்சிக்காமற் போனாற்போகின்றது இந்தவெள்ளத்தில் நானிறங்க
வேமாட்டேனென்ன (அடியேன்எடுத்துக்கொள்ளுகிறேன் வாரு
மென்றழைக்க)வாண்டாம்வாண்டாம்நம்முடைய கையைமாத்திர
ம்கெட்டியாய்ப்பிடித்துக்கொள்ளு மெதுவாய் வருகிறேனென்று
சொல்லஅப்படியேமகாராஜன் நக்ஷத்திரத்தரகன்கையைப்பிடித்
துக்கொண்டுவெள்ளத்திலிறங்கிவெள்ளமொருபக்கமிழுக்கவும்- வி
ஸ்வாமித்திரன்கள்ளமொருபக்கமிழுக்கவும் - தரகனுடையவுள்ளம்
ஒருபக்கமிழுக்கவும் மெதுவாகயிரங்கியாவரும்ஓரிடந்தங்கிகந்தை
யைப்பிழிந்து மேனி முழுதுந்துடைத்துக் காதலனைப்பார்த்துக
ண்ணீர்சொரிந்து-கருத்தும்நெஞ்சுமயர்ந்து கதறியழுதிருந்தார்க
ள்-அந்தச்சமையத்தில் இன்னம் நம்முடைய வலையிலகப்பட வில்
லையல்லவாஇதுதான்தருணமென்று விஸ்வாமித்திரமாமுனிவன்பி

ன்னும் வெகுண்டு அனுப்பியபூதமானது அகோரவுக்ரபசியை யு டைத்தாய் ஆவென்றுவாயைத்திறந்து அடித்துக்கொன்று வாயிற் போட்டுக்கொள்ளுகிறேனென்று ஆகாயமட்டுங் கையைக்கிளப்பி அதிககோபமாகக்கண்ணையுருட்டி காளிமுறையுமைவர்கலங்கும்ப டியாய்மிரட்டிவந்து வளைத்துக்கொண்டு ஊட்டியைக்கடித்துஉதி ரத்தைக்குடித்துஉலாவுவேனென்றும்,வயிற்றைக்கிழித்து மணிக்கு டலைப்பிடுங்கிமாலையாகப் போட்டுக்கொள்ளுவேனென்றும், பா ர்ப்பானையும்,மன்னனையும்-மங்கையையும்-மைந்தனையும்ஒரேயமு க்காயமுக்கி-உண்டையாக்கி - ஒரேமுழுங்காய் முழுங்கிவிடுகிறே னென்றுஉறுமி-கடுகடுத்துஉய்த்துநோக்கிஅருகினில்வரவேதாகன் கண்டுஒப்அரிச்சந்திரமகாராஜனே நமக்குப்பணமும்வேண்டாம் பட்டினியாயிருந்ததும்போதும்-பட்டதுபட்டதும்போதும் இந்தாபார்த்தையா பருத்தபூதமானது நம்மைப்பார்க்குது நமக் காளுல்மெத்தபயமாயிருக்குது இதன்கையினின்றையத்தினம் தப் பிலேமேயானுல் தாய்வயிற்றிலிருந்து பிறந்தாற்போற்றான், சற் றேதயவுசெய்யுமென்றுதாகன்மகாராஜனைத்தழுவவே அரிச்சந்திர மகாராஜன் ஒன்றுக்குமஞ்சவேண்டாமென்று பின்னுலிருத்தி ஓ-பூ தபிசாசமே-என்கையில்வில்லும் வாளும் ஒன்றுமில்லை தருமமான சத்தியவசனவாளொன்று என்மெய்யினிலிருக்கின்றது ஆதலால் நீ வரலாம்மிருகங்களைப் பக்ஷிக்கலாம்-என்றுமன்னவன் சொல்லவே யாமுனிவர்சொல்லியவண்ணம் இவர்கள்பயப்படாமற் போனப டியால்அப்பூதமானது அயர்ந்துபோய்விட்டது மழையும்காற்று ம்நின்றது சூரியனுமுதயமாளுன். அப்போததனைக்கண்ட தாக னுஞ்சுக்கிரபகவான் மெத்தவும் பயந்தவன்போல் விடவிடென்று நடுநடுங்கி ஒய்அரிச்சந்திரமகாராஜனே பூதமென்றால் யாருங்காத மோடுவார்கள் அப்படியிருக்க இப்போது நீபயப்படாமல் அத ன்முன்புபோய்நின்று அதனை எவ்விதமாகவோ துறத்திவிட்டாய் அடாஅப்பாஉன்னைப்பார்த்தால்எனக்குமெத்தவும்பயமாயிருக்கி ன்றது இனி நான் உன்னுடன்கூடவரவேமாட்டேன், நம்முடைய ரொக்கத்தை இவ்விடத்திலேயே கொடுத்துவிட்டு அப்பால்நடவு மென்றுதடுக்கவேஅரிச்சந்திரமகாராஜன்சுவாமி அப்படியொன்று மிராது தங்களுக்கொரு துன்பம்வந்தால் அடியேனுயிரைத் தக்ஷ ணங்கொடுக்கிறேன் சஞ்சலப்படாதிருமென்று தேறுதலைசொல்லி அவ்விடத்தில் நல்லகாய்கனிக்கிழங்குகளருந்தி வாசனையுள்ள மலர் களும்-திவ்வியவாவியுமுடையஒருசோலையில் வந்திறங்கினூர்கள்.

அந்தவேளையில் அரிச்சந்திரமகாராஜன் அவ்விடத்திலுள்ள வேடிக்கைவிநோதங்களையும்-ஆடுகின்றமயிலையும்-கூவுங்கொஞ்சுங் குயிலையும்-கிளிகளையும்-அசையும்அன்னங்களையும் அலர்ந்திருக்கும்

வாசனையுள்ளமலர்களின் அலங்காரத்தையும் சந்திரவதிக்குச்சொல்
லிக்கொண்டும்,தங்கள்துயரத்தைஒருவாருக தள்ளிக்கொண்டும்தள
ர்ச்சியுற்றமைந்தன்முகத்தைத்தாயுந்தந்தையும் தடவிமுத்தமிட்டு
க்கொண்டும்தவமுனிவனுல்விளைந்தசங்கடத்தைக்காட்டிற்றெலைத்
துக்கொண்டுமிருக்கிறதருணத்தில்நக்ஷத்திரத்தரகன் ஓய் அரிச்சந்
திரமகாராஜனேஎன்னகாணும்,சட்டதிட்டமாய்மைந்தனையெடுத்
துஉச்சிமோந்து உடம்பைத்தடவி முகத்தினில்முத்தமிட்டு-நீயும்
உன்னுடையபெண்சாதியும்-கொஞ்சிக்குலாவிகுந்தியிருக்கிறீர்கள்
ஏதுகாணும்,தாம், பெண்சாதி-பிள்ளை-வீடு-வாசலைவிட்டு-வேண்டி
ய அவஸ்தைப்பட்டுவெய்யலிலுங்-காற்றிலும்விடாய்ப்பட்டுவெறு
ம்பட்டினியாய் விழலப்பருபிருக்கிறதா ரொக்கத்துக்குவழிப்ப
டுத்துமென்றுகொஞ்சங்கடுகடுக்கவே (அப்படியேசெய்கிறேன்ஐ
ரேயென்று)அரியகாய்கனிகளைத்தின்ற அன்றையப்பொழுதை அ
வ்விடத்திலொழிக்கையில் அப்போதுகௌசிகனுனவன் நாம்இந்தி
ரனிடத்தில்கூறிவந்த சபதமும்தவறிப்போகுதே- வசிஷ்டன்சபத
மேமேலாகுதே-அரிச்சந்திரனுங்காசிப்பட்டணம் அருகாமையிற்
போய்விட்டானே- வழியினிற்சம்பவிக்கப்பட்ட இடறுகளையெல்
லாந் தலைகாட்டாமல் தருமமாகிய வாளினுல் சிதறவடிக்கிருனே-
தரகனுகியசுக்கிரனுந் தன்னுலான சாமார்த்தியமெல்லாங் காட்டி
யும் வசப்படாமற் போனபடியால் அவனும் இப்பிரமைகொண்
டுமுழிக்கிருனென்றுசிந்தையில்நினைத்து தீராதகோபமூண்டு - இ
னிதிரணமாவது விடப்போகாதென்று-திக்கெட்டையுந் தாங்கும்
படியானதிடகாத்திரமுள்ள அளவிறந்த வெள்ளையானைகளையும்-பு
லிக்கூட்டங்களையும்- பன்றித்திரள்களையும் படைத்து-ஓ-யானை-பு
லி-கரடி-பன்றிகளே-கேளுங்கள் அரிச்சந்திரனும்-அவனுடையம
னைவி-மகன்-மந்திரியும்-நமதுதரகன் சுக்கிரபகவானும் காசிப்பட்
டணத்துக்கருகாமையிற்போகின்ருர்கள் நீங்கள்சீக்கிரம் அவர்களி
டஞ்சென்றுஉங்களுடையபராக்கிரமத்தையும்(புலி)யென்கிறகிலி
யையுங்காட்டிப் பரோகிதனைமாத்திரம் பயமுறுத்தாமல்அரிச்சந்
திரனையும்-அவன்மனைவியையும் பயமுண்டாகும்விதஞ்செய்து அ
வர்கள்வாயில் ஏதாவது ஒருபொய்வார்த்தையைப் பிறக்கும்படி
செய்துவாருங்களென்று மெத்தப்பிரியமாகச் சொல்லியனுப்ப
வே அப்படியேசெய்துவருகிருமென்று விஸ்வாமித்திரனுக்குச்
சொல்லி-அவைகள்வீறிட்டுக்கொண்டுவேந்தனெங்கே-வேதியனெ
ங்கே-மைந்தனெங்கே-மாதாயெங்கேயென்று- துதிக்கையைநீட்டி
சுவளையாட்டித்தொடர்ந்துதொடர்ந்துவருகவும்-புலிகளானது-ஆ
காயத்திலெழும்பியும்-அம்புலியிற்குதித்தும் - அரசனையும்-அவன்
மனைவியையும்-அவனிட்டுவந்தபிராமணனையும் - அழிக்கிருேம்-கூ

றுகூறுய்க்கிழிக்கிறோம் - ஆளுக்குக்கொஞ்சமாய்த் தின்கிறோமெ
ன்று-ஆரவாரஞ்செய்து அருகினில்வரவே அதனைக்கண்ட நக்ஷத்தி
ரத்தரகன்-அண்ணலே நானென்ன செய்வேன் - அரியகாட்டிலே
கொண்டுவந்துவிட்டுவிட்டாய்-ஆளி-கரடி-புலி-சிங்கம் - யானைகள்
தின்னஎன்னைஇரையாக்கிவிட்டாய்-ஐயையோ-போதும் - போது
ம்-புண்ணியம்பார்க்கவந்ததற்குப்பொல்லாதஇடறுகளெல்லாஞ்ச
ம்பவிக்குதேயென்று புரோகிதன் பொய்ப்புலம்பல் புலம்பவே-
மகாராஜன்-ஓய்சுவாமிதங்களுக்கு வாட்டம்வேண்டியதில்லை- புலி
க்கும்-யானைக்கும்-மற்றபொல்லாத மிருகங்களுக்கும் - நானேஇ
ரையாகப்போகிறேனென்று இறையவன்தருமத்தையும் - சதாசிவ
னையும்-இருதயத்திலெண்ணி எதிரினிற்போய்நிற்கவே மாயமாய்வ
ந்ததாகையால்-காயத்துடன்எல்லாம் அயர்ந்தோடிப்போய் விட்
டது-அதன்பிறகுநக்ஷத்திரத்தரகன் ஓய் அரசனேஇன்னம்-அநே
க அவஸ்தைப்படவேண்டியதாய்வரும் - சும்மாய்திரும்பிவந்துவி
டும்ராகத்தேசத்தையாளுவீர்-நானொன்றும் கொடுக்கவேண்டிய
தில்லையென்று ஒருபொய்மாத்திரஞ்சொல்லும்-நானும் உமக்காக
வேசாட்சிசொல்லுகிறேனென்று வேதியனுரைக்கவே மகாராஜன்
வேதியனைப்பார்த்துசுவாமி-என் உயிர்போனாலும்என்னை இருகூறு
க்கினாலும்கனவிலும் பொய்சொல்லுவேனா சொல்லமாட்டேன்
கெடுவுபிரகாரம்உம்முடையபொன்னைத்தருகிறேன் வாருமென்று
யாவருஞ்சென்று யமுனைக்கரையைச்சேர்ந்தார்கள்.

பின்புவிஸ்வாமித்திரமகாரிஷி-நாம்-என்னசூது செய்தாலும்
என்னஉபாயஞ்செய்தாலும்- அரிச்சந்திரன் அசைகிறதாயில்லையே
யென்று-அதுகசினங்கொண்டு அகோரவுக்கிராகாரத்துடன் கண்க
ளில்அக்கினிப்பொறியெழும்பவும்-விரைவாய்வருவதைக்கண்ட அ
ரிச்சந்திரன்-ஓ ஓ-இராஜர்களாவது-மந்திரிகளாவது - இவர்பணிவி
டையைமறுத்தார்களோ - குடிகளில்எதாவது குறைவுண்டாயிற்
றோ-என்னமோவென்று இதயத்தில்நினைந்து எத்திப்போற்றி - இ
ணையடியில்விழுந்து சுவாமிதாங்கள் இவ்விடம்வந்த காரணமியா
தோ-அதனைத்திருவுளம்பற்றுவீரென்றுகேட்க-விஸ்வாமித்திரர் அ
ரிச்சந்திரனைப்பார்த்து நீ இந்தக்காட்டிற்படுகிற அவஸ்தையைப்
பார்த்தால்எனக்கு மிகவும்வருத்தமாயிருக்கின்றது-ஆகையால்நீ
கொடுத்தநாடுநகரத்தை இப்போதுகொடுக்கவில்லையென்று ஒரு
வார்த்தைசொல்லுவாயேயானால்-எல்லாவற்றையுங் கொடுத்துவிடு
கிறேனென்றுவிஸ்வாமித்திரர்சொல்ல-சுவாமி- அதுவாபெரிது-அ
டியேனைநறுக்கிசாறுசாறுய்ப்பிழிந்தாலும் - இரத்தமானதுவழிந்
தாலும்-சத்தசாகரமழிந்தாலும்-இந்தத்தலமெல்லாமொழிந்தாலு
ம்-தங்களுக்குக்கொடுத்ததை-மறுபடியும் இல்லையென்று சொல்லு

வேறுசொல்லமாட்டேன்சுவாமியென்ன - அதனைக்கேட்டவிஸ்வா மித்திரர் மறுமொழியொன்றுஞ் சொல்லாமல்-மாயமாக வெழுந் து ஓர்சோலையிற்போயிருந்து மகாராஜனிடத்திலிருக்கும் நக்ஷத் திரத்தாகனைவரும்படியாய்நினைக்க - அதனைக்கண்டறிந்ததாகனந் க்ஷணம்விஸ்வாமித்திரரிடம்வருகவே-தாகனைப்பார்த்து -அரிச்சந் திரன் நமதுவலையிலகப்படுகிறதாயில்லை - என்னவுபாயஞ் செய்தா லும் வாயிற்பொய்வருகிறதாயில்லை-மேலும் அவனிட்டதவனைநா ளில்பாதியுங்கழிந்தது-ஆகையால் இனிசும்மாயிராமல் அவனுடை யவாயிற்பொய்வரும்படியானவழியைநீர்தான்தேடவேண்டும்- உ ம்மாற்றான் இந்திரலோகம் நான்நாடவேண்டும்- கெலித்துவந்தே னென்றபெருமையை அங்கேபாடவேண்டும்-இல்லாமற்போனால் பழிப்புக்கும்நகைப்புக்கும்- நமக்குஇடமாகின்றது - அதற்குஎவ்வி தவஞ்சனைபோயினுஞ்சரிதோ - அதைநீர்செய்யவேண்டும்-என்றுநா னாவிதமானயுத்திகளையும் புத்திகளையும்போதித்து நீர்போய்வாரு மென்றனுப்ப-அந்தத்தாகனும் - நல்லதென்றுநகைத்துக் கறுவி- மார்பிற்றுவளும்-பூணூலையுருவி - கடுகடுத்து-வெடுவெடுத்து-இ னிவிடுவேனோ-ஆகட்டுமென்று அரசனிடத்தில்வந்தான் வருகவே யாவரும்காய்கனிகளையருந்தி ஜலத்தையுண்டு அவ்விடத்தைவிட்டு ப் புறப்பட்டார்கள்.

அக்காலையில்-விஸ்வாமித்திரர்- அக்கினிதேவனைமனதில்நினைக் கவே-அந்த அக்கினிதேவனானவன் - தக்ஷணம் - ஓர்பிராமணனாகி- சோலையிலிருக்கும்-விஸ்வாமித்திரரிடம்வந்து - ஓப்மாதவ சிகாம ணியே - என்னைநீரழைத்தகாரியமென்ன சொல்லுமென்றுகேட்க வாரும்வாரும் அக்கினிபகவானே-நீர்நமக்கு ஒருசகாயம்பண்ண வேண்டியது-அதென்னவெனில்-அரிச்சந்திரமகாராஜன் - காசிப்ப ட்டணம்-தன்குடும்பத்துடனேபோகிறான் - ஆகையால்அவர்களை ப்போகவொட்டாமல் ஆகாயமண்டலம் அளாவும்படியாய்-நான் குதிக்குந்திலையவளர்த்தி-நடுவேயவர்களகப்படும்படியாயும் - தண லிலகப்பட்டபுழுப்போல்தவியும்படியாயும்-நான்சொன்ன பேச் சைக்கேட்கும்படியாயும்- அதற்குவேண்டியகிரிகைகளைச்செய்ய வேண்டுமென்று விஸ்வாமித்திரர்சொல்ல அக்கினிபகவான்-ஓய்வி ஸ்வாமித்திரமகாரிஷியே-அந்தஅரிச்சந்திரனோ - சத்தியசந்தனன்- அவன்மனைவியோ-கற்பினால்அருந்ததிக்குமிஞ்சினவள்- ஆகையால் அவர்கள்கிட்ட நான்நெருங்கக்கூடாது - தூலதூரமாயிருந்து நீர் சொன்னபிரகாரஞ் செய்கிறேனென்றுவிஸ்வாமித்திரனிடத்தில்அ க்கினிபகவான்விடைபெற்று வினாவில்வந்து - அவர்களுக்கு-அண் டநிழலுமில்லாமல்-அருந்தப்புனலுமில்லாமல்-ஜலவாயு மடக்கிக் கொண்டுபொறியும்புகையும் சடருமாகிநான்குதிக்குஞ் சுந்திச்சுந்

றிச்சுடமெரிக்கவே-சுந்தரமிகுந்தசந்திரவதியானவள் மகனைப்பார்
த்துக்கண்களில்நீர்பெருகவும்-கருத்துருகவும் நான்கண்கண்டகோ
வில்களுக்கெல்லாம்-கற்பூரமும்-காணிக்கையும் - கட்டிக்கொடுத்து
பெற்றஎந்தன்காதலனைக்கூடகௌசிகன்சொல்லைக்கேட்டுகாட்டில்
மடக்கிச்சுடவந்தாயல்லவோஅக்கினிபகவானே உமக்கு எங்கள்மே
ரிற்கோபமா-இதுவொருபிரதாபமா-ஊரைவிட்டு நாட்டைவிட்டு-
ஊதாரியாய்ப்போகிறோமே-ஐயையோ-இப்போது ஒத்தாசைய
ல்லவோபண்ணவேண்டியது-அதைவிட்டு எக்களை உருக்கிக்கருக்கி
ச்சாம்பலாக்கவுடன்பட்டீரோ இதுவுமக்குத்தர்மமோஅன்றிஎங்கள்
வினையின்கர்மமோஎன்று சந்திரவதிவருந்துவதைப்பார்த் தக்கினி
பகவான்கொஞ்சங்கொதிப்பையடக்கினான் அப்போதுதாரகன்அரி
ச்சந்திரனைப்பார்த்துஒய்மகாராஜனேபார்த்தீரா இன்னம்ஒவ்வொ
ருமுழந்தானிருக்கின்றது நம்மைநான்குபுறமும் அக்கினிவளைந்து
க்கொள்ள அதற்குள்ளாக நான்முன்புசொன்னபடியேசெய்தால்பி
ழைக்கலாகும்இல்லாவிட்டால்உன்பெண்சாதிபிள்ளையுடனே நீஉயி
ரிழக்கலாகும்என்னவே-அரிச்சந்திரன்தாரகனைப்பார்த்து ஒய்சுவா
மிஇந்தத்தணல் எங்களைத்தகித்தாலும்சரிதான் காப்பாற்றினாலுஞ்
சரிதான் இந்தஅக்கினியே சாட்சியாகச்சொல்லுகிறேன் கொடுத்த
தைஇல்லையென்றுசொல்லமாட்டேன்சந்திரவதிதவிரவேறோர்தை
யலைக்கருத்தினில்நினைக்கமாட்டேன் இந்தஅக்கினியைத்தாண்டி
னால்காசிபட்டணந்தான் (அவ்விடத்தில்) தங்கள்பணத்தைத்தருகி
றேன் வாருஞ்சுவாமியென்றுசொல்லவே தாரகன்பின்னால்வரசந்தி
ரவதிமுன்னாகச்சென்று நாங்கள்சாஸ்திரவழியைத்தவறினவரானாலு
ம்-வந்தவிருந்தாளிகளுக்குஅன்னமிடாதிருந்தாலும் பெரியோர்க
ளை இகழ்ந்திட்டாலும்-பிறர்மனையாளை எனதுநாயகர்இச்சித்தாலு
ம்-நல்லோரைவைதவரானாலும்-இன்னம்ஏதாவது குறைசெய்தவர்
களானாலும்-எங்களைக்கொல்லென்று கனலிற்பாயவே அதனைக்கே
ட்ட-அக்கினிபகவானனவர் அவர்கள்சத்தியத்துக்கும்நீதிக்கும்நெ
றிக்கும்நெருங்காமல் பின்னிடைந்துபோயினான்-பின்பு ஐவரும்-
அதிகவிரைவில் வாரணவாசிசேர்ந்து-அங்கிருக்கும் புண்ணியதீர்த்
தத்தில்-ஸ்நானஞ்செய்து-பூசைமுதலாகியது முடித்து-கடவுளைத்
துதித்துக் - சந்தமூலவர்க்கங்களைப் பொசித்து காதுவிடாய்தீரத்
தக்கதாகத்தண்ணீரருந்தி சற்றுநேரம்அவ்விடத்திலிருந்து பின்பு
காசிப்பட்டணம் போய்ச்சேர்ந்தார்கள்.

அப்போது அரிச்சந்திரமகாராஜன்காசிப்பட்டணத்தைக்கண்
டவுடனே(கயிலாயத்தைக்)கண்டதாகக்கருத்திலெண்ணி-தனதுகா
தலியாகியசந்திரவதிக்கும்-மந்திரிக்கும்-சிந்தையில்மகிழ்வாகவும்வி
ஸ்வாமித்திரன்செய்த தீவினையெல்லாம் போகவும்-காசியிலுள்ள

காட்சியையும்-அங்கங்கேயுள்ள சூட்சியையும்-கற்புற்ற மாதர்களின்
பெருமையையும்-கருணீகர்வீதியையும்-காசிராஜன் - நீதியையும்-
அவனுடையசௌரியத்தையும் - செய்யும்படியான தானதருமங்க
ளையும்-ஆரியர்பெருமைகளையும்- அவரவர்க்குரிய அருமைகளையும்
வேளாளர்களின் பேழிச்செல்வங்களையும் - விஸ்வக்கம்மாளர் மரு
மங்களையும்-வைசியர்வியாபாரங்களையும் - அவரவர் வர்ணாசிரமங்க
ளையும்-அரண்மனை ஆஸ்தானங்களையும் - அவரவர் பொருள்களிருக்
கும்-எதாஸ்தானங்களையும்- ஆடல்பாடல்மேடைகளையும்-அகழி-ஏ
ரிகள்-ஓடைகளையும்-அன்னங்-குயில்-கிள்ளை-அமருஞ் சோலைகளையு
ம்-அணியணியாயுள்ளதென்னஞ்சாலைகளையும் அல்லிதாமரைநிறை
ந்தவாவிகளையும்-அசோகு-சண்பகம்-மல்லிகை - முல்லைகள்மணம்
வீசும் காவுகளையும் - அரசனுக்குரியபிரபுக்கள்வாழும் மெத்தைக
ளையும்-அவ்வூரிலுள்ளவித்துவான்கள் வித்தைகளையும்-அங்கங்கேயி
ன்னமுள்ளவிநோதங்களையும்-வீதிகளின்சிங்காரங்களையுமெடுத்து
க்கூறிகாசிவிஸ்வநாதசுவாமியின் பொன்போன்றதிருமதிலையும்-பூ
ரித்துக்காட்டி-புகழ்பெற்ற திருக்குளத்தில்நால்வருமிறங்கிஸ்நா
னஞ்செய்துபூசைமுடித்து - விதிப்படியாகப் பிரதக்ஷணம்வந்து
முறைமைப்படி சந்நிதியிற்சுற்றிலுமுள்ள-ஆலயங்களினுட்சென்
றுதோத்திரஞ்செய்து தொழுதுபின்பு - காசிவிஸ்வநாதர் சந்நிதியி
ன்முன்வந்து கனகமயமானபாதத்தில்விழுந்து கடவுளேயெங்களை
இப்பேர்ப்பட்டகாரணங்களுக்குள்ளாக்கிவிட்டீரோவென்றுதங்க
ளுக்குவிஸ்வாமித்திரனால் விளைந்தவருத்தங்களையும் அதனால் தாங்
கள்நாட்டைவிட்டுகோட்டினிற்பட்டபிரயாசைகளையுஞ்சொல்லி ஐ
யனே எங்களைக்காப்பாற்றிக்கரைசேர்க்காயோ காசிவிஸ்வநாதகட
வுளேயென்றுகண்ணீர்விட்டு-கலக்கப்பட்டு-இதுகளெல்லாந் தேவ
ரீருடைய திருவுளச்செயலேயல்லாமல் ஏழைகளாகிய நாயினுங்க
டையர்களானஎங்களால்ஆவதொன்றுண்டோ-இருக்கும் நாடுநகர
த்தையும்எல்லாப்பொருளையும் விஸ்வாமித்திரருக்குக்கொடுத்தோ
ம்-தங்களுடைய காசிபுரியைவந்தடுத்தோம் - இவ்விடத்தில் கடன்
கொடுப்பாரொருவரையுங்காணேமே கௌசிகருக்குச்சொன்ன நா
ற்பதுநாள்தவணையுமாச்சுதே கர்த்தனேயென்றுபலவாறுதோத்தி
ரஞ்செய்துபக்தியாகவலம்வந்து சந்நிதியைவிட்டு நால்வரும்நக்ஷ
த்திரத்தரகனும் லோகமாதாவாகியவிசாலாக்ஷியம்மன்திவ்வியசன்
னிதானத்தின்முன்வந்தவுடனே-சந்திரவதியானவள் அம்மனைப்பா
ர்த்துஎன்தாயேமுப்பத்திரண்டுஅறம்வளர்க்குமுத்தமியேஉன்னு
டையதிவ்யபாதாரவிந்தத்தைதினமுந் திரிகாலமுந் தியானஞ்செ
ய்யும்படியாகியஉன்னுடையதொண்டனாகியஎன்பிராண நாயகரு
க்குவந்தஇக்கட்டையும்உன்னுடையதிருவருளின்கிருபாகடாக்ஷத்

தினாலருமையாகப்பெற்ற அழகியசெல்வனும் அன்னாகாரமில்லாமல்-காற்றிலும்- மழையிலும்- கடுங்கானலிலும்- களைத்துவிழுந்துகதறியழுதகோலாகலத்தையும்-கழறவென்றால் கருத்தயருதுகண்களிருளுது-காதடைக்குது-ஆகையால்-என்அன்னையேஊர் - ஆஸ்திபாஸ்தி-உள்ளதெல்லாம் விஸவாமித்திரருக்குக்கொடுத்தோம்-உன்னுடையதிருநகைவந்தடுத்தோம்- இன்னமும்கொடுக்கவேண்டியபணத்திற்காகஇதோவந்திருக்கிறார் தாகர்அதற்குபாதொருவழியுமில்லை கொடுப்பாருமில்லை-என்னசெய்வோம்தாயேயென்று எக்கமிட்டுவாடியழுகையில் மகாராஜன்சந்திரவதியைத்தேற்றி ஐவரும்காசிப்பட்டனம் நடுத்தெருவில்வந்தார்கள்.

வந்தவுடனேநட்டசத்திரத்தாகன் இனிமேல் இவர்களைச்சும்மாவிடக்கூடாதுஇப்போதுதான்இல்லாதபாடுகளெல்லாம் இந்தப்பட்பணத்திற்றானேபடுத்தவேணும்விஸ்வாமித்திருங்கேட்டு மெச்சவேணுமென் றுவெகுண்டு-ஓய்-ஓய்-அரிச்சந்திரமகாராஜனே நானினிமேல்உம்முடனேகூடத்திரியமாட்டேன் நமக்கானால்மெத்தவருத்தமாயிருக்கின்றதுவிஸ்வாமித்திருடைய பணத்தைக்கொடுக்கிறையாஇல்லையாசொல்லு- அல்லதுநில்லு என்றுவெய்யலில்நால்வரையுமடக்கிவிட்டான் அப்போதுமகாராஜன் மனவருத்தமுற்றஒன்றுஞ்சொல்லாமல் அசைவற்றமரம்போலநிற்கையில் (சந்திரவதியானவள்)என்பிராணநாயகரே-நாம்இவர்கையில்சிக்கி வெய்யலில்புழுவைப்போலபிள்ளையும் அயர்ந்துவிடாய்பட விஸ்வநாதர்செய்தகாரணந்தான்இவருடையகடனுக்குஒருவிதவழிசொல்லிவிடுமென்றுசொன்னசந்திரவதியைமகாராஜன்பார்த்து-என்பிராணநாயகியே - உன்னையறியாமல்என்கையில் என்னயிருக்கின்றது சுவாமிகாசிவிஸ்வநாதரே - உமதுகாசிபட்டணம்வந்துசந் நிதியுட்புகுந்துஉம்மைக்கண்டுதரிசனஞ்செய்ததற்குக்கடும்வெய்யலில் நின்றுஎன்மைந்தனழவும்-மனைவிபுலம்பவும் - மந்திரிவாடவும்அடியேன்மயங்கித்தியங்கவும்-தந்தகாக்ஷியிதுதானோவென்றுள்ளமுருகிச்சருகைப்போலவாடியழுகையில்,அதனைக்கண்ட ரந்திரவதியானவள்மெத்தவுமயர்ந்துகண்களில் முத்துமுத்தாய்நீர்பெருகவும்ஐயையோதெய்வமே-ஆரும்படாதகடன்பட்டோமே அநாதிகளாய்வந்துவிட்டோமே(அரகரா)பரமசிவமே என்னையாளும்அண்ணலுக்குஇவ்வளவுதுக்கஞ் சம்பவிக்கலாமோ-இனியில்லா இக்கட்டுகளெல்லாம்பட்டோமே-இப்போதாவது எங்களைப்பாதுகாக்கவொண்ணா-பாலித்தருள் புரியலாகாதா-பரமதயாளா-பார்வதிசமேதா-பக்ஷிகளுக்காவது-அண்டநிழலும்-உண்ணக்காய்கனியும்-அருந்தநீரும்ஆதாரமாயிருக்கின்றது-அதற்குங்கூடவழியில்லாமல் அவஸ்தைப்பட்டுவந்தபாவிகளாகிய எங்கள்பிராணனையாவது வாங்கிக்கொ

ண்டால்மெத்தவு மூத்தமமாயிருக்குமேயென்று சித்தநொந்து ச
ற்றேமனதைத்தேற்றிதன்னுடைய பிராணநாயகனைப்பார்த்துமஹா
மகாராஜனே அடியாளிருக்கத்தங்களுடையசிந்தையில் ஆயாசப்பட
லாமா-படக்கூடாது - ஆகையால்நல்லோர்பெரியோர் வசிக்கும்ப
டியானபுண்ணியக்ஷேத்திரமாகியஇந்தக்காசிமாநகரில்- அடியாளை
யும்-சுதனையும் விலைகூறிவிற்று விஸ்வாமித்திரர்கடனை யொழித்துவி
டுஞ்சுவாமியென்றுசொன்னசந்திரவதிசொல்லானது மகாராஜனு
க்குஉருக்கியசெம்பைஎடுத்துகாதிலூற்றினாற்போலாகி-அரகரா-ம
காதேவா-காசிவிஸ்வநாதா பெண்சாதியைவிற்கவும் நானும்பிள்ளை
யும்மந்திரியும்தடுத்தெருவில்நிற்கவும்-பிரமதேவன் தலையிலெழுதி
னானே,நல்லதுஎன்னமாய்மன நீதுணிந்துவிலைகூறுவேன்-அப்பா
லெவ்விதமாய்த் தயராறுவேன்-எவரிடத்தில் என்னுடையமானமி
னத்தைவிட்டுவிலைகூறுவேன் ஆனாஇவ்வூரிலறிவேன்-வாய்ந்தவாழ்
வைக்கேட்பார்களேவாய்திறந் தெவ்வாறுசொல்வேன்-அல்லவென்
றுவிற்றாலும்வாங்கினவர்கள்-மதிப்பார்களா-மதிதய மகாராஜன்பு
த்திரியாச்சுதேயென்றுநினையார்களா-என்னவேலை யிடுவார்களோ
எவ்விதகஸ்திபடுத்துவார்களோ-அரிகரிஇதுவும் நான்செய்த
தீவினையோ இக்கோலமாக்கிவிடவோ வேணபாடுபட்டு விவாகஞ்
செய்தேன்பிள்ளையையும்பெற்றேன் காசிவிஸ்வநாதாவென்று வா
டியிருக்கையில்-அப்போதுநக்ஷத்திரத்தாகன்அரிச்சந்திரனைப்பா
ர்த்துஎன்னகாணும்அரிச்சந்திரமகாராஜனேசும்மாயிருந்தால்இனி
விடேன்உம்முடையகழுத்துக்கும்காலுக்கும் இதோஅண்ணைநீதா
ள்போட்டுவிட்டேன்-நமக்காலுல்வெய்யல்பொறுக்கக்கூடவில்லை
ரொக்கத்துக்குவயணஞ்சொல்லியபிறகுதான்விடுவேன் என்றுஉரு
க்கிமுருக்கிமுதுகினில்கல்லைவைக்கவே அதனைப்பார்த்த சத்தியகீர்
த்தி அரகராகாசிவிஸ்வநாதாஇன்னம்கௌசிகர்கெடுவாகவில்லையே
எங்களைக்காத்துரக்ஷித்த மகாராஜன்கழுத்திற்கயிறுபோடவும் தலை
கவிழ்ந்துகண்களிரண்டும் பூமியைநாடவும்கனத்தக்கறுங்கல்லைமு
துகின்மீதிலேற்றவும்-மைந்தன்மாதுவாடவும் -கடையேறுகிய நா
யேன்காணவும்காலஞ்சம்பவித்ததோகடவுளேஎன்றுகதறியழுகை
யில்-ஓய் அரிச்சந்திரமகாராஜனே நீராகவும் மந்திரியொழுகவும்-
உன்மைந்தன்கழுசவும் அதனில்உன்மனையாள் முழுகவும்இவ்வளவு
ஆடல்பாடலுடன் கேளிவிலாசமாயிருந்தால் நாம்போறவயண
மென்னநாமேபெண்சாதிபிள்ளையை விட்டுவிட்டுவந்தோம்அவர்
கள் என்னபாடுபடுகிறார்களோதெரியாது ஆகையால்நம்முடைய
ரொக்கத்தை நீர்கொடுக்கமாட்டீர் நமக்கும்கேட்டுகேட்டுவெட்க
மாயிருக்கின்றது-கொட்டுவானே-திட்டுவானே-அதெல்லாம்வீண
ககாரியம்இப்போது ஒன்றுதோன்றுகின்றது அப்படிசெய்தால்

நம்முடையரொக்கம்நமக்குவந்துசேரும்-அதாவதென்னெனில் ஓ
ய் அரிச்சந்திரமகாராஜனேகேளும் நான்பொய்சொல்லாதவன்சத்
தியசந்தனென்கிறீரோ ஆகையால் உம்முடையகுருவின்பேரிலா
ணை-நம்முடையரொக்கத்தைக்கொடுக்கிறவனாயில் - இந்தக்கோட்
டைவிட்டுத்தாண்டக்கூடாதென்றுகோடுகிழித்துவிட்டானப்போ
து அரிச்சந்திரமகாராஜனனவன் மெத்தவுஞ்சித்தநொந்து சுவாமி
என்னையென்ன ஆக்கினைசெய்தாலும் தேவரீர்செய்யலாம் என்னு
டையகுருவாணையைமாத்திரம் நீக்கிவிடவேண்டுமென்றுதீர்க்கதெ
ண்டஞ்செய்துகண்களில்தாரைதாரையாகநீர்விட்டழுதுசுவாமிநா
ளைபதினம்உம்முடைய ரொக்கத்தைத்தருகிறேன் ஆணையைவிடுத
லைசெய்யுமென்றுசொல்லவே அப்படியேவிடுதலைசெய்தான்-அப்
போதுசந்திரவதியானவள்என்னையாளும்நாயகரே-இப்படிநீர்பா
டுபடுவதைப்பாவியாகியநான்பார்க்கவா - ஆகில்நமதுஆழ்நம்மை
விட்டுநீங்காதாகையால்அடியாளையும்மைந்தனையும் ஆலசியமில்லா
மல்விற்று அவர்கடனைத்தீருமென்றுசொல்லவே நக்ஷத்திரத்தாக
ன்கேட்டு ஆம்-ஆம்-அதுசரிதானப்படித்தானேசெய்-என்றுகயிற்
றைவாங்க-மகாராஜன்மைந்தனைத்தோளிலெடுத்தும் சந்திரவதியை
க்கையிற்பிடித்தும்-அச்சம்-நாணம்-என்பதைவிடுத்துப் ஊழ்வினை
யினுல்நீலக்கயல்போன்றஎன்னுடைய அவசரநிமித்தியமாகப்பெ
ண்சாதியையும், வாலப்பருவத்தையுடையபிள்ளையையும், அறுதிக்
கிரயமாகவிற்றுப்போடுகிறேன் ஆராவதுதிரவியமுள்ளவர்கள்வா
ங்கிக்கொள்வீர்களென்றும்- அடியேன்பட்டகடனைத்தாங்கிக்கொ
ள்வீர்களென்றும்-அரசர்வீதி-ஆரியர்வீதி-வேளாளர்வீதி- வைசிய
ர்வீதி-வடுகர்வீதி-வன்னியர்வீதி-மற்றுமுள்ள வீதிகளெல்லாம் வி
லைகூறிவரும்போது (நக்ஷத்திரத்தாகன்) ஓய் அரிச்சந்திரமகாராஜ
னே இந்தப்பெண்ணுக்கும் - இந்தப்பையனுக்கும் யானைமேல்)ப
லவத்தனனவன் ஒருவன்ஏறி கவுண்டுகல்லெறிந்தால் அது எவ்வள
வுயரம்போகுமோ அவ்வளவுயரமுள்ளபொன்னையார்கொடுப்பா
ர்கள்-அவ்வளவுதிரவியமுள்ளவர்கள் இவ்விடத்தில் யாரிருக்கிறார்க
ள்பெண்சாதிபிள்ளையைவிற்கலாமா அதுயேளிதமல்லவா இப்பவு
ம்நான்சொன்னபடியேகேட்டீராலுல் எல்லாச்சங்கடமும்தீருமெ
ன்றுசொன்னநக்ஷத்திரத்தாகனை அரிச்சந்திரன்பார்த்து ஐயாஎப்
படியாவதுநாளையதினத்திற்குள்ளே உம்முடையபணத்தைத்தருகி
றேன்சற்றே பொறுத்துக்கொள்ளும் என்றுதயிரியஞ் சொல்லிவி
லை கூறிவருவதைக் காசிபட்டணத்திலுள்ளவர்கள் கேள்விப்பட்டு
அவரவர்கள் தெருக்களிலும்-திண்ணைகளிலும்-வீடுகளிலும்-உயர்ந்
தமேடுகளிலும்கூடிக்கூடி-ஐயையோ - இவர்களுக்குவந்ததுனபம்
யாதோ என்னகுறோ அந்தஅம்மாளைப்பார்த்தால்இலட்சுமியைப்

போலும்-பிள்ளையைப்பார்த்தால் வாலமன்மதனைப்போலுமிருக்
கின்றதேயார்கொள்ளப்போகிறார்கள் அப்படிகொண்டாலுமிவ
ர்களென்ன வேலைசெய்யப்போகிறார்கள் என்றுசொல்லுவர்சிலரு
ம்மேலும்விஸ்வாமித்திரனால்விளைந்த விதிவசமென்றுமெலிபவர்சி
லரும்-ஆகிலும்பெண்சாதிபிள்ளையை விற்கும்படியாய்ச் செய்தா
னேவிஸ்வாமித்திரப்பாவியென்று பேசுவார்பலரும் - ஒருபொய்
சொல்லாமல்-ஊரு-நாடு-உள்ளதெல்லாந் தோற்று பெண்சாதிபிள்
ளையையும்விற்று-ஒண்டியாகப்போகிறாரேயென்று உரைப்பவர்ப
லரும்-இப்படியாககாசிப்பட்டணவீதியில் அரிச்சந்திரமகாராஜன்
தன்பெண்சாதியுடன்பிள்ளையையும்-விலைகூறியும்- ஒருவருமேனெ
ன்றுகேட்பாருமில்லையே-ஏறெடுத்துப்பார்ப்பாருமில்லையே-என்
செய்வேன்தெய்வமே-விஸ்வாமித்திரர்க்குஇட்டகெடுவு மாய்விட்
டதேயென்றுயேங்கி இடிவிழுந்தபனைபோல நிற்கையில்-விஸ்வா
மித்திரனவன் மீண்டும்-அக்கினிதேவனிடஞ்சென்று - ஓய்-அக்கி
னிதேவனே-உமக்குவந்தனம்வந்தனம்-எனக்காக நீரின்றொருசகா
யஞ்செய்யவேண்டியது-அஃதென்னவெனில் - முன்னம் நீர் அக்கி
னியாகிச்சென்றீர்-அதையுந்தடுத்தான்-மேலுஞ் சுக்கிரபகவானலா
ன அநேகதந்திரங்களைச்செய்தும் அதற்குமவனசற்றும்பிசகவில்லை
இப்போது என்னுடையபணத்திற்காகக் காசிபுரிவீதியில் தன்பெ
ண்டுபிள்ளையைவிலைகூறித்திரிகிறான் ஆகையால்நீரிப்போதும்போ
ய்ச்சுக்கிரபகவானைக்கண்டுபணத்தைக்கொடுத்துவிட்டேனென்று
சைகையாய்ப்பேசிக்கொண்டு அவர்களிருவரையும் அடிமையாக்கி
எப்படியாவது- அவன்வாயில்ஒருபொய்யுண்டாக்கிஎன்சபதத்தை
மெய்யாக்கி-என்னைச்சீர் தூக்கி நிலைநிறுத்துவது உம்முடைய பெ
ருமையென்று விஸ்வாமித்திரன் வேண்டிக்கொள்ள ' அப்போது
அக்கினிபகவான்-அப்படியா-ஆனால் இதோ - அவனிடஞ்செல்லு
கிறேன்-அரிச்சந்திரன் பொய் சொல்லும்படியாய்க் கொல்லுகி
றேன்-மகாகஸ்திகளுண்டாக்கி வாட்டுகிறேன் - என்பெருமையை
க்காட்டுகிறேன் அப்பால் உமதுபுகழை இந்திரலோகத்தில்நாட்டுகி
றேன் நீர்வாட்டங்கொள்ளவேண்டாம் உமதுதவவனம்போமென்
றனுப்பிவிட்டுஅக்கினிதேவனானவன்(௬௰)வயதுள்ள விருதப்பிரா
மணனாகி- கக்கத்திற்குடையும்-கையிற்பஞ்சாங்கமும்மற்றொருகை
யிற்றடியுமூணிக்கொண்டு குத்திருமலுடன் முன்னும்பின்னும்தத்
தித்தள்ளாட காசிபுரியில் அரிச்சந்திரமகாராஜனிடம் வந்தான்.

அப்படிவந்தபிராமணன்-ஆரப்பாபெண்சாதிபிள்ளையைவிற்
கிறவன்விலையென்ன சொல்லென்றுகேட்கஅரிச்சந்திரமகாராஜன்
சுவாமிபலவந்தனை ஒருபுருஷன்யானையின்மீதிலேறி கவுண்டுகல்
லெறிந்தால் அதுஎவ்வளவுஉயரம்போகுமோ அவ்வளவுஉயரந்திர

ளியங்கொடுத்தால் பெண்சாதியையும்-பிள்ளையையுங்கொடுத்து வி
டுகிறேனென்று அரிச்சந்திரன்சொல்ல (வந்தவேதியன்) அவ்வளவு
திரவியம்யாருக்குக்கொடுக்கவேண்டியது சொல்லுமென்ன-இறை
யவன்இதோநிற்கிறார் இவருக்குக்கொடுக்கவேண்டுஞ் சுவாமியெ
ன்றுசொல்ல - அந்தநக்ஷத்திரத்தாகருக்கு வந்தபிராமணர்நான்த
ருகிறேனென்று ஒருவருக்கொருவர்கைபோட்டுஉளவாய்ப்பேசிக்
கொண்டுஅரிச்சந்திரனுக்குச்சொல்ல அரிச்சந்திரன்நக்ஷத்திரத்தா
கனைப்பணஞ்சேர்ந்ததாவென்றுகேட்கசேர்ந்ததென்றுநட்சத்திர
த்தாகன் சொல்லிநிற்க-இப்பால்காலகண்டவேதியர் ஓய்அரிச்சந்தி
ரனேமனைவியையும் மகனையும் -அனுப்புமென்றுசொல்ல சத்திய
கீர்த்தியானவன்மனந்தாளாமல் மன்னவனைவிட்டுத் தாயுஞ்சேயுந்
தனித்துப்போகவும்-சதுர்முகப்பிரம்மாசபித்ததோ - ஐயையோ
இப்படியென்று விதியும்வபித்ததோ ஒருவர்வீட்டிற்போய் உலக
மாதாவாகியஉத்தமியான என்தாய்ஊழியஞ் செய்யவனுப்பநானு
ம்உடன்படலாச்சேகாலங்காசிபுரிவாசா-காலகண்டமான்மழுசூல
பாணீசா-இதுயென்னகோலம்காசினியாளக் காளைபிறந்தானென்
றுகருத்தினில் வியப்படைந்ததெல்லாம் அவலமாச்சேவிஸ்வாமித்
திரரெண்ணப்படியாச்சேயென்று பாம்பின்வாய்ப்பட்ட தேரை
போலும்-பாய்மரம்அற்றமரக்கலம்போலும்-பாதவித்தழவும், பி
ன்னுஞ்சந்திரவதியானவள்-எனக்காகபடாதபாடுபட்டுபலவித து
துகள்விட்டுநானேபெண்சாதி தானேபுருஷனாக வேண்டுமென்று
பலதவங்கள்புரிந்துஎன்னைவிவாகஞ்செய்துமகிழ்ந்த என்பத்தாவி
னுடையதிருமுகத்தையு- என்பத்தாவுக்குவந்ததுன்பம் தனக்குவ
ந்ததைப்போலெண்ணும்பாரியபுத்தியையுடையசத்தியசந்தனான
மந்திரியாகியசத்தியகீர்த்தியையும், எப்போதுகாண்பேன்-என்று
நான்மனமகிழ்வுபூண்பேன்எனச் - சிறகிழந்தபட்சிபோலும்-செ
ன்றற்காற்றிற்பட்டபஞ்சிபோலும்-ஸ்ரீராமரைப்பிரிந்த தேவியை
ப்போலும்-அப்போதுதேவதாசன்என்னையும்-என்தாயையும்- தா
ங்கியசுமையைத்தொலைத்திரோ-சுகப்பட்டீரோஎன்றழுதான், சந்
திரவதியானவள்இன்னம்என்னசங்கடம்வந்தாலும் - சத்தியத்தைநி
லைநிறுத்துமென்றழுதாள் அப்போதுகாலகண்டவேதியர் அரிச்ச
ந்திரனைப்பார்த்து ஓமன்னவனே இவர்களைநமக்குவிற்றோமென்று
அடிமைச்சாதனம்எழுதிக்கொடுமென்றுகேட்க அவ்வாறேஅரிச்ச
ந்திரமகாராஜன் எழுதிக்கொடுத்தான் உடனேசந்திரவதியானவள்
மைந்தனையழைத்துக்கொண்டு காலகண்டவேதியருடனே செல்ல
(மகாராஜன்)மாறாததுக்கசாகரத்திலழுந்தி மனைவிமகனும், வேதி
யர்வீட்டில்இனியென்னபாடுபடுவார்களோதெரியாதே அவர்களை
ள்ளிக்கொடுத்தாற்போனே மகனருந்துவான் அவர்கள் கொடாவிட்

டால்மகன் அலையலாகுமே அந்தமுங்குலையலாகுமே பெற்றதகப்ப
னிருக்கும்போதே இத்தனைபாடு பிள்ளைக்குவரலாச்சே பிரியமாய்
வாழ்ந்த பிராணநாயகியும்-என்னைவிட்டுப்பிரிந்தாளே காசிவிஸ்வ
நாதக்கடவுளே இனிஎன் னுயிரிருந்தென்ன போயென்னமனைவிமக
ன்ஒருவர்வீட்டிற்போயிருந்து ஊழியஞ்செய்துண்டு உடலைவளர்
க்கவொப்பிவிட்டு நான்ஒண்டியாய்வாழ்ந்தென்ன-வாழாமற் போய்
தானென்னவென்றுசிந்தையிலெண்ணிதிரோகங்குண்ணி சிலைதவுற்றி
ருக்கையில்நக்ஷத்திரத்தாகன்பார்த்து ஓய் அரிச்சந்திரமகாராஜனே
உம்முடையபெண்சாதிபிள்ளைக்கு விசனப்படுகிறாயே தவிர நமக்
காகக் கொஞ்சமாவது விசனப்படவில்லையே நம்மை யனுப்ப
உமக்கு மனதுவல்லையே நாம்வந்து எத்தனைநாளாச்சுதுசொல்லு
மென்றுகேட்க அதற்கு(அரிச்சந்திரன்) சரணஞ் சரணம் போய்
வாருமென்றான்.

அப்போது-நக்ஷத்திரத்தாகன்என்னகாணும்விஸ்வாமித்திர
னுடைய ரொக்கத்தைக்கொடுத்தீர் அத்துடனேதீர்ந்துப்போச்சு
தாநம்முடையதாரெங்கே மறந்துவிட்டீரோ-ஆ-ஆ, நன்றாயிருக்
கின்றது எதுகாணும்சபாஸ்(ஓடங்கடந்தா லோடக்காரனுக்குஒரு
சொட்டென்றதுபோல) அப்போதேமறந்துவிட்டீராபெண்சாதி
பிள்ளையைவிற்றவன்-எனக்குத்தரவில்லையென்று சொல்லத்தடையு
ண்டா (ஒருசொல்) இல்லையென்றால்போய்விடுகிறேன் - சொல்லி
விடும் இல்லாமற்போனால்-நமதுகூலியைஎடும் - கொடும் - நாம்
சாகிறதாயிருக்கிறது-மெத்தநாளாயிற்று போகிறோமென்றுசொ
ல்லவே(சுவாமி)இப்போதுபட்டபாடெல்லாம் பார்த்துக்கொண்
டுதானேயிருக்கிறீர்-வழியினிற்கொடிமுடிந்தாற்போலமடக்குகிறீ
ர்-இன்னங்கொஞ்சம்பொறும் - உம்முடையதாரகையுங் கொடுக்கி
றேனென்று தாழ்மையாகச்சொல்லி மந்திரியைப்பார்த்து-ஓமந்
திரிஇவர்க்குத்தரகுகூலிகொடுக்கவேண்டுமாம்- ஆகையால்என்னையு
ம்விலைகூறிவிற்று இவருடையதாரகையுங் கொடுத்துவிடென்றுசொ
ல்லவே-மந்திரி-சுவாமி-உம்மையும்விற்று நான்ஒண்டியாய்உலாவி
த்திரியவா அரகரா(காசிவிஸ்வநாதரே) இந்தக்காரணமானசொல்லையு
ங்காதிலேகேட்கவைத்தாயா இதுவுங்கர்மவிதிவசந்தானென்றுமுத்
துப்போல்கண்ணீரை - முகத்தில்வடியவிட்டு(சுவாமி) அடியேன்
தங்களைவிற்பதுதகுதியல்ல நாயேனைவிற்றுநக்ஷத்திரவையருக்குக்
கொடுக்கவேண்டிய பொன்னைக் கொடுமென்றழுத மந்திரியைப்
பார்த்துமகாராஜன் உன்னைநான்விற்பது-உலகத்திற்கடாது-நீதிமு
றைமைக்குஞ் சரிப்படாது-இனியாதொரு தடையுமில்லாமல்-தடு
த்தொன்றுஞ்சொல்லாமல்-சந்தியிலென்னை வில்லுமென்றுஅரிச்
சந்திரமகாராஜன்-சாற்றவே-மந்திரியானவன் சஞ்சலக்கடலிலாழ்

ந்து-அப்படியேசெய்கிறேனென்றுதாழ்ந்து - அடியில்வீழ்ந்து-எந்தஜாதியாராநாலும்-எவ்வலகப்பட்டவர்களானாலும் - சரிதான் பொன்னுள்ளவர்களேபெரியவர்கள் - என்றுபொருமிப்பொருமி யழுதுஎங்கள்புரவலராகிய அரிச்சந்திரமகாராஜனைவிலையாகவிற்கிறேன்-வாங்கிக்கொள்ளப்பட்டபுண்ணியவான்களுண்டா - புரோகிதர்தாகைத் தீர்ப்பவருண்டாவென்றுவீதிகள்தோறுஞ்சொல்லிக் கொண்டுவருகையில் (எமதருமராஜனாகிய) வீரவாகுவென்னும்புலையன்கேள்விப்பட்டுகறுப்புக்கம்பிளி அரையிலுடுத்தி-கந்தைத்துண்டத்தைத்தலையிற்சுத்தி அப்போதுரித்தமாட்டின்றோலைத்தண்டுகோலிற்றூக்கித் தோளினிற்றூக்கி வேடிக்கைப்பாட்டும், விநோதமானதென்பாங்கும் பாடிக்கொண்டு (வீரசாம்பனென்ற) மேளானபேனைக்கொண்டாடிவீதியினில் ஆளைவிலைகூறப்பட்டவராவென்றுபறையைத்தட்டி எதிரினில்வந்தான். அப்போது மந்திரியானவன் நான்தானையா எங்கள்மகாராஜனை விற்கப்பட்டவன் வாங்கிக் கொள்வீராவென்றான் வீரவாகுவானவன் என்னவிலை சொல்லு மென்றான் மந்திரிபதினாயிரம்பொன்னென்றான்-ஆ-ஆ, தருகிறேன் இவன்பேரென்னவென்றான்-மந்திரி அரிச்சந்திரமகாராஜனென்றான் (அப்படியா-ஓய்-அனிச்சா) நீமகாராஜனாகவெள்ளையுஞ் சள்ளையுமாகஉடுத்திக்கொண்டு மேடையுப்பரிகையிலிருந்தவனாச்சுதே என்னிடத்திலடிமைப்பட்டால் மசானங்காக்கவேண்டும்-மாடுரிக்கவேண்டும்-அத்தோலை உலரவைக்கவேண்டும் - மாட்டிறைச்சியைத் துண்டுதுண்டாயாக்கவேண்டும்-இரத்தத்தைக் கையில்வழிக்கவேண்டும்-எலும்புவேறுசதைவேறாக்கவேண்டும் பிணஞ்சுடவேண்டும் என்பெண்சாதிக்கும்-எனக்குங்கால்பிடிக்கவேண்டும் வீட்டிலிருக்கும் வேலைகளைச்செய்யவேண்டும் - குடியானவர்கள்வீட்டில்மாடுகள்-கன்றுகள்-செத்தால் போயெடுத்துவரவேண்டும் - இதுகளெல்லாஞ்செய்வாயாவென்றான் அதற்குஅரிச்சந்திரன் ஐயா வீரவாகுவேஅப்படியேசெய்கிறேன் இந்தநக்ஷத்திரத்தாகருக்குக் கொடுக்கவேண்டியபதினாயிரப்பொன்னைமாத்திரங்கொடுத்துவிட்டால்நீர்காலாலேயிட்டவேலைகளையெல்லாங்கையாலுந்-தலையாலுஞ்செய்கிறேனென்றான்வீரவாகுவானவன்அப்படியேதருகிறேன் அடிமைச்சாதனம்எழுதித்தாவென்றுவீரவாகுகேட்க- மகாராஜன் எழுதிக்கொடுக்க அதைவாங்கிக்கொண்டுநக்ஷத்திரத்தாகனும்தானுங்கூடிக்கலந்துபேசித் தாகன் ஓய் அரிச்சந்திரமகாராஜனேபணம் பற்றிக்கொண்டேன்தமக்குச்செலவுகொடும்நாம்போய்வருகிறோமென்றான் சரணஞ் சரணம்எங்கள்பேரில் தயவுவைக்கவேண்டும், போய்வருவீராயா நட்சத்திரத்தாகரேயென்றுமகாராஜனும்-மந்திரியும்சொல்ல நட்சத்திரத்தாகன் போய்விட்டான்.

இப்பால்வீரவாகுவானவன்தன்தோளிலிருந்த தோற்காவடியை அரிச்சந்திரனையெடுத்துக்கொள்ளச்சொல்லி அழைத்துக்கொண்டுபோகமந்திரியானவன் - ஓமகாராஜனே ஊரிலுள்ளபேரவரும் உமக்குஏவற்செய்ததுபோகவும்-நீயொருவற்கு ஏவற்செய்யலாகவும்-சமைந்ததோதோற்காவடி தோளிலமைந்ததோசுவாமியென்று துயரம்பெருகவும்-கண்களில்ஜலமானதுவருகவும் - துடிதுடித்து பின்றொடரவும்-இட்டுக்கொண்டுபோய்மாடுகன்றை யுரிக்கும்படியாகச்செய்தும்-அதற்குத்தகுந்த கத்தி சூரியைக் கையிற் கொடுக்கவும்-மாமிசம்-எலும்பு-குடல் - நரம்பு - இதுகளை வேறுவேறுயெடுக்கவும்-இப்படியாக வீட்டிலுள்ள வேலைகளைச் செய்யும்படியாயும்-பின்புசுடலைக்கழைத்துப்போய் அப்பா அரிச்சா இந்தசுடலையிலிருந்துவருகிற பிணமொன்றுக்குமுழச்சீலையும் காற்பணமுமுண்டு அதையெனக்குக்கொடுத்து வாய்க்கரிசியும் - தோம்புச்சோறுமுண்டு அதை நீயெடுத்துக்கொள்ளென்று வீரவாகு ஆக்கியாபிக்க அப்படியேநல்லதென்று அரிச்சந்திரமகாராஜனும் சத்தியகீர்த்தியும்அவ்விடத்திற் பிணஞ்சுட்டுவெந்தெரிந்த கட்டைகளையும் - கொள்ளிசுள்ளிகளையும் - பாடைகட்டிவந்த பெரியகொம்புகளையும்-எடுத்துவெய்யலும்-மழையும் - மேற்படாமலிருக்க ஒருபறணைக்கட்டிக்கொண்டுசிம்மாசனத்திலிருந்தநாமும்இப்போது இந்தப்பறணைமீது ஏறலாச்சே மேலும் அநேகஞ் சீவராசிகளைக் காக்கின்றதுபோய் இப்போதுசெத்தசவத்தைக் காக்கலாச்சே அநேகந்துராதுரைகளும்-அமைச்சர்களும் - படைத்தலைவர்-அணித்தலைவர்-சூழ்ந்ததுநீங்கி-பேயும்-பூதமும் - நாயும்-நரியும்-சூழலாச்சே-மத்தாப்பு-வால்செட்டில் - குளோப்செட்டிலினுள்ளே திருவிளக்குச்சூழ்ந்திருந்ததுமாறவும்-இப்போது பிணங்கள்சுட்டவெளிச்சங்காணவுமாச்சுதேமல்லிகைமுல்லை கந்தகதம்பம்கமழும்படியாகவிருந்ததுபோய்பிணநாற்றம்நாரலாச்சுதேவிதியேயென்று வெட்கியுட்கிவெருவாய்க் கிலேசித்துகடலிலகப்பட்ட துரும்பைப்போலும்-கன்னியிலகப்பட்டபட்சியைப்போலும்,காட்டிற்றிரியுங்குருடனைப்போலும் வரப்பட்ட காற்பணத்தையும்-முழத்துண்டையும் வீரவாகுவுக்குவைத்துவிட்டுவாய்க்கரிசியைபசுவின்வாயிற்கொடுத்து கோமயத்துடனேவரப்பட்டஅரிசியையெடுத்துக் குத்திச் சமையற்செய்து மந்திரியுந்தானும் உண்டுக்கொண்டு வாடிமெலிந்து சுருபங்குலைந்து சுடலைக்காத்திருந்தார்கள்.

மூன்னாள் காலகண்டையர்வீட்டிற்போய்ச்சேர்ந்த சந்திரவதியும்-தேவதாசனும்அவர்கள்சொல்லியவேலைகளையெல்லாஞ்சோர்வுறுமற்செய்துக்கொண்டு சூரியனுதிக்க ஒருசாமத்திற்குமுன்பாகயெழுந்திருந்து சாணியெடுக்கவும்-தெருவு-வீடு - முதலியதைப்

பெருக்கவும்-முட்டைதட்டவும் - நெல்லுகுத்தவும் - வேஷ்டிபுட
வைதுவைக்கவும் - தேவதாசனைக்காலகண்டஐயனும் அவர்மனைவி
யும்அடிக்கும் ஆக்கினைக்கும் - மிரட்டுக்குபயப்பட்டுதாயினுடன்
சொல்லாமலும்-தனக்குத்தானே காலையிலெழுந்து புஷ்பங்களைப்
பறித்துவந்தும்-கொடிதாகியகானகஞ்சென்று காணா-முன்னை-மு
ஷ்டி-தருப்பைமுதலாகியதும் பறித்துக்கட்டி தலையெழுத்தோ
வென்று தூக்கித் தலையில்வைத்துவரவும்-ஆகி-பகல் - பன்னிரண்டு
சாமத்திற்குமேல் காலகண்டையர் மனைவியாகியகொடும்பாவியா
கிப்பாத்திகையினால் அள்ளிக்கொடுக்கும் காந்தலாகியகூழைக்கண்
ணீர்ஜலத்தைவிடுப்பதுபோல கிணற்றுத்தண்ணீரைவிடுத்துக்கரை
த்துக்காதலனாகியதேவதாசனுக்குக்குடிப்பாட்டி காசிவிஸ்வநாதா
வென்றுமீந்ததைத்தான்குடித்து கணவனை எப்போதுபார்ப்போ
ம் கலியையென்றைக்குத்தீர்ப்போம் என்றும் கட்டியகந்தையை
அவிழ்க்காமலு-சாணம் - தவிடுபடிந்ததேகத்தைக் கழுவாமலும்
உமி-ஊக்கு-ஊத்தைசேர்ந்தகூந்தலை உதறிமுடியாமலும்-ஓய்ந்த
காலையில்உட்கார்ந்து தானும்-மகனும் - மன்னவனும் படும்வருத்
தத்தையெண்ணித் திரேகங்குன்னி ஓலமிட்டழவும்-வாலப்பருவ
முள்ளபாலகனிலைகமறிந்துகண்ணீர்துடைக்கவும்-மடியிலுட்கார்
ந்த மைந்தன்மேல் முத்துமுத்தாய்நீர்சிந்தவும் வாய்விட்டழுதுக்
கொண்டிருப்பாள்-இப்பால்சந்திரவதியானவள்மைந்தனைக் கான
கத்திற்குத்தனித்தனுப்புகிறதுசரியல்லவென்று அவ்வீதியிலிருக்க
ப்பட்டபிராமண வாயற்படிகார்த்திருக்கையில்அப்போதாகாதச
குணங்களநேகங்கண்டு அச்சங்கொண்டு அயர்வுற்றிருக்கையில்அப்
பிள்ளைகளன்றையவுதயத்திற் கும்பலாகக்கூடிப்புறப்பட்டார்கள்
அவர்களைக்கண்டு அப்பா அசலாத்துமைந்தர்களே என்பிள்ளையோ
அறியாதவன் காட்டிற்சஞ்சரியாதவனாகையாலவனை உங்களுடனே
கூடவனுப்புகிறேன் அழைத்துக்கொண்டுபோய் அவனுக்குவேண்
டியசாமக்கிரிகைகளைக் கொஞ்சம்ஒத்தாசைசெய்து அழைத்துவா
ருங்களென்று மைந்தனுக்கநேகம் புத்திகளைச்சொல்லி அவர்களை
விட்டு அப்புறம்போகாதேயென்றும் அவர்கள்பறிக்குமிடத்திலே
யேநீயும் பறித்துக்கொள்ளென்று சொல்லியனுப்பிவிட்டுத்தான்
வேதியர்வீட்டில்வந்து தன்னுடையவேலைகளையாதொரு குறைவி
ல்லாமற்செய்துவந்தாள் பார்ப்பாத்தி சந்திரவதியினுடையவேலை
களையும் சுறுசுறுப்பையுங்கண்டு உள்ளுக்குள்ளே மகிழ்வடைந்து
வெளிக்குக்கடுகடுப்பாய் வேலைசெய்கிறதில்லையென்றும் விருதாவி
ற்பணம்போச்சுதென்றும் வேளைக்கு ஒருபடி அழுதுசெலவென்
றும் வீண்பிரசங்கஞ் செய்துக்கொண்டிருப்பாள்.

இப்படியிருக்கையில்பிள்ளைகள்காட்டிற்குப்போகும்போது

தேவதாசனைப்பார்த்து அப்பா உன்னைப்பார்த்தால் இராஜகுமாரனாயிருக்கின்றதே நீயும்உன்தாயும் காலகண்டையர்வீட்டிலிருந்து வேலைசெய்யவேண்டியகாரணமென்ன உன்தகப்பனெங்கேயென்றுஅசலாத்துப்பிள்ளைகள்கேட்க-தேவதாசன் ஐயமாரேஎங்கள்பட்டணம்அயோத்தியாபுரி-தகப்பன்பேர் அரிச்சந்திரமகாராஜன்-தாய்பேர்சந்திரவதி-என்பேர்தேவதாசன்-நாங்கள் வஞ்சகநெஞ்சமுடைய விஸ்வாமித்திரர்செய்தசூதினால்-நாடு- நகரம்ஆனை-சேனை ஆஸ்தி-பாஸ்தி-ஆடை-ஆபரணம்-அணி-மணி அனைத்தும் அவர்க்குத்தோற்றும்-பின்புஆனைமேல்பலவானெறிகவுண்டுகல் லெறிந்ததூரம் பொன்கொடுக்கவேண்டுமே அதைக்கொடுவென்று அடாவழக்கெடுக்கஅதற்காகக்காசிப்பட்டணம்வந்துகாலகண்டருக்குஎன்னையும்என்தாயையும் விற்றார் அந்தக்கர்மவசத்தினால்நாங்களிந்தப்பாடுபடுகிறோம் என்தந்தையானவர் என்னவாதையும் எவ்விதவேதையும்படுகிறாரோ எனக்குத்தெரியவராது சுவாமிகளேயென்று தேவதாசன்தேம்பியழுதுசொல்லக்கேட்ட அசலாத்துமைந்தர்கள் ஐயையோபாவம் இப்பேர்ப்பட்ட வஞ்சனையும்விஸ்வாமித்திரன் பண்ணலாமா இவர்கள்படுந்துயரக் கண்ணீரானது அவனைவிட்டுப்போமாவிடாதுஅப்பாதேவதாசாஅழாதேகூடவா ஆனாவிட்டது சனி எல்லாம்ஆண்டவன்செயல்தான் என்று அழைத்துக்கொண்டுபோய் தருப்பைப்புல்லிருக்குமிடத்திற்போய் அவரவர்பறித்துக்கொண்டிருக்கையில் தேவதாசனும்செழித்து அடர்ந்திருக்கும் ஒருயிடத்திற்போய்ப்பறித்தான் அப்போது விஸ்வாமித்திரர் இதுதான்தருணம்இவனுயிரை மரணமாக்கவேணுமென்றுமனதிலெண்ணிமாயமாயவ்விடத்தில் ஒருபுற்றுண்டாக்கி கொடிதான சர்ப்பமொன்றையனுப்பஅதுஅப்புற்றினுள்ளே அகஸ்மாத்தாய்வந்திருக்கஅதனையறியாததேவதாசன் புற்றின்மேல்காலைவைத்து எட்டிமறுபடியும்பறித்தான் பறிக்கவே பாம்பானது படமெடுத்துசீறிப்பாலகன்காலைப்பற்றிக்கௌவிக்கடித்து மாயமாய்ப்போய்விட்டதுஉடனே அரகராசிவசிவாவென் றலறியோடிவந்துஐயமார்களே என்னைப்பாம்புபாதத்திற்கடித்தது பாருமென்றுவிழுந்தான்விழுந்ததை அவர்கள்கண்டுஐயையோ இந்தப்பாம்புக் கிரையாகத்தானோ எங்களுடன்கூடிவந்தாய்பாலகனேயென்று அவர்கள்பரதவித்தழும்போது வாயில்நுரைப்பும்நுரையுந்தள்ளி நீலம்போல்திரேகமாகி அந்தக்க்ஷணமே தேவதாசனிறந்தான்.

பின்புதேவதாசனைப்பார்த்து ஊழ்வினையினாலே உயிர்போய்விட்டதென்றுஒருவருக்கொருவர்பேசிக்கொண்டு தாங்கள்பறித்ததருப்பை சமித்துக்களைஅவரவர்கள்எடுத்துக்கட்டித லையில்வைத்துக்கொண்டு வழியில் அடையாளமாகதழையை யொடித்துப்போ

ட்டுவருகையில் சந்திரவதியானவள் அதிகாலமே போனமகன் இ
ன்னம்வரக்காணோமேபொழுது அஸ்தமிருக்கிறவேளையாச்சே அ
சலாத்துமைந்தர்களையுங்காணோமே என்னசெய்வேன் இனியெப்
படியுய்வேன் அண்ணலைக்காணாதிருந்தாலும்என்னைப்பணாகியபால
கன்முகத்தைப் பார்த்தாவது பசியாறுவேன் ஐயோ அரைநாழி
கைகாணாதிருந்தால் அம்மாஅம்மாவென்று மகன் அலையுவானே எ
ன்றுஇருவிழியையேறெடுத்துநோக்கி வழியைப்பார்த்துவாடிதே
டியிருக்கையில் அசலாத்துப்பிள்ளைகள்மாத்திரம்வந்தார்கள்-ஓ-ஐ
யமார்களே உங்களுடனே கூடவந்த என்மைந்தனெங்கேயென்று
கன்றிழந்தபசுப்போல் கனிவாய்திறந்து கையைவிரித்துக் கன்னி
களுக்கு அரசியாகிய சந்திரவதிகதறிக்கேட்க (அசலாத்துமைந்தர்
கள்) அம்மாஉன்மகனை அரவங்கடித்து அலறிவிழுந்தான்-உடனே
நாங்களும் எங்களாலான உபசாரணைகள்செய்தோம் செய்தும் பிர
யோசனமில்லாமல் அப்பிரயோசனமாகஇறந்துவிட்டானென்று
ர்கள்-அச்சொல்லைக்கேட்டவுடனே நாராசத்தைக்காய்ச்சி நடுச்செ
வியில்விட்டாற்போல்-சந்திரவதியானவள் சோர்ந்துதுவண்டுதுடி
துடித்து தொப்பென்று தரையில்விழுந்து-கடகடவென்றுபுரண்
டு-கையைநெறித்து - வயிற்றிலறைந்து - மன்னவருக்கு என்னவழி
சொல்லுவேன்-ஐயையோ பாவி விஸ்வாமித்திரன் செய்யும் - பா
தகக்கொடுமையைப் பார்த்தீர்களா-என்று பாதவித்து-ஐயா-அச
லாத்துமைந்தர்களேஎன்மைந்தனிறந்தயிடமெங்கே- சொல்லுங்க
ளென்றுகேட்கவே (அசலாத்துமைந்தர்கள்) அம்மணிநாங்கள்வந்
தவழியில்வடக்கே செடிநெருங்கியவிடத்திற்குத் தெற்கேயென்று
ர்கள்-மற்றொருவன்- அம்மம்மா அதெல்லாம் உனக்குத்தெரியாது
உன்மகன்இறந்தயிடந்துடங்கி இதுவரைக்குந் தழைகள்போட்டுவ
ந்திருக்கிறோம்இதுவேயடையாளம் இப்படியேபோவென்று அச
லாத்துப்பிள்ளைகள் அவர்களிருப்பிடம் போய்ச்சேர்ந்தார்கள் சூ
ரியனும் அஸ்தமனமானான்.

சந்திரவதியானவள் அறிவழிந்துநெஞ்சுருகிகாலகண்டருக்கு
ம் அவன்மனைவிக்கும் பயப்பட்டுவாயைத்திறந்து அழாமல் உள்
ளுக்குள்ளே கதறிப்பதறி வீட்டினில்வந்து வேலைகளையெல்லாஞ்
செய்து அவர்கள்படுக்கும்வீட்டையும் பரிஷ்காரஞ்செய்துபள்ளி
யறைசோடித்து பார்ப்பானைப்பார்த்து ஒப்சுவாமிகாணகத்தில்த
ருப்பைப்புல்லுக்காகப்போன என்பாலகன்பாம்புகடித்து இறந்
துவிட்டானும் ஐயையோஎன்னசெய்வேன் அடியாள்போய் அவ
னையெடுத்து அடக்கம்பண்ணிவருகிறேன் செலவுகொடுக்கவேணு
மென்றுகேட்டாள்-அப்போது காலகண்டையருக்குக் கண்கள்சிவ
ந்துகடுங்கோபம்பிறந்துதிடுக்கிடச்சீறி அடிவிரோரவீணிஉனக்கெ

ன்னநஷ்டியாச்சுதுஒன்றுமில்லை நான்பொருளுக்குப் பொருளு
மிழந்தேன்புதல்வனுக்குப் புதல்வனையுமிழந்தேன்போதாகுறை
க்கு உங்களுக்குப்போஜனமும்போட்டு நொந்தேனென்ற காவ
ண்டையனைப்பார்த்துமெய்தான்சுவாமிஆகிலும் பெற்றவயிறுகே
ழ்க்குமா பிள்ளையாசைபோகுமா பொழுதுவிடிகிறதற்குள்ளாகவ
ந்துவிடுகிறேன் போய்வருகச் சிலவு கொடுக்கவேண்டுமென்று பு
ரோகிதரைப்பலவாறுதோத்திரம்பண்ண கொஞ்சமும்பொருளை
யில்லாதபுரோகிதன்சந்திரவதியைப்பார்த்து ஆனால்நம்முடையம
னைவியிடத்திற்சொல்லிப்போவென்ன நல்லதென்று பார்ப்பாத்தி
யண்டைவந்துஎன்னைப்பெற்றதாயே பாலகன்பாம்புகடித்து வன
த்திலிறந்துவிட்டானாம் நான்போய்ப்பார்த்துஅடக்கம்பண்ணிவ
ருகிறேன் அடியாளுக்குச்சிலவுகொடுமம்மாவென்றாள்-அச்சொ
ல்லைக்கேட்ட பார்ப்பாத்தியானவள் அடிபோடி நீசி பிள்ளைபிறந்
தானும் இவள்போய்ப் பார்க்கப்போகிறாளாம் படுகுழிவெட்டிப்
பாலகனைப் புதைக்கப்போகிறாளாம் பாசாங்குக்காரியென்று சொ
ன்ன பார்ப்பாத்திபின்பாதம்பணிந்து (அம்மணி) சித்தமிரங்கிச்
சற்றேசிலவுகொடுத்தால்சீக்கிரம்போய்வந்து விடுகிறேனென்றாள்
ஆனால் செய்யவேண்டிய வேலைகளையெல்லாஞ் செய்துவைத்துப்
போட்டுப்போய்வாவென்றாள் பின்னுவீட்டிலுண்டானவேலைக
ளையெல்லாஞ்செய்து வெளியேவந்தாள் விஸ்வாமித்திரன்தீயதாகி
யகொடியமாய்கையினால்மின்னலும்இடியும் இருட்டுமுண்டாக்கி
வைத்தான் அப்போதுசந்திரவதியானவள் அரகாராகாசிவிஸ்வநாதா
இதுவும்உம்முடையஅனுக்கிரகந்தானா அடியாளென்னமாய் இந்
தஇருட்டினிற்போவேன்எப்படி மகனைக்காண்பேன்வழியுந்தெரி
யவில்லையே கால்வைக்குமிடமெல்லாங் கல்லுமுள்ளுமாக வுறுத்
துதே காடுமலைகளெல்லாம் ஒன்றாகக்காணுதே-கரடி-புலி-யானை-
பன்றி-முதலாகியதுகதும்புதே அரிஅரி அடியாள் ஏனோஇந்தஜெ
னனமெடுத்தேன் என்னையும்ஒருவுபாயத்தால்விஸ்வாமித்திரர் கொ
ன்றுவிடலாகாதா காசிவாழீசா காமாட்சிப்பிராணேசா என்றுவழி
தெரியாமல் மரத்திற்போயிடித்துக்கொள்ளவும் மான் கடமை
கொம்புகளைப்பிடித்துக்கொள்ளவும் நாய்நரிகூவவும்-பேய்-பூதம்
பக்கத்தில்மேவவும்- பயப்படாமல் பார்ப்பாரப்பிள்ளைகள் பறித்
துப்போட்டதலைழகளை ஒன்றுவதுகாணேமே அடடா பாதகவிஸ்
வாமித்திரன்செய்ததோதகமோபாபிஷ்டியான நான்பிறந்தஜாதக
மோஎன்றுபலவாறுநொந்துகாலானுங்கையாலும்வழியைத்தடவி
வந்துசற்றேநின்றுபாவியான என்வயிற்றில்மகனேநீஇந்தப்பாடுப
டவோபிறந்தாயென்பாள்-பின்னும் எங்கள்முகத்தைப்பார்க்கக்கூ
டாதென்றுமனதைவெறுத்துப் பாம்பின்வாயிலகப்பட்டோஇறந்

தாயென்பாள்மறுபடியும்அப்பாமகனே என்னாசைக்கண்மணியே
உன்னைவீம்புக்காகவிஸ்வாமித்திரன் விட்டபாம்புகடிக்கையில்என்
னமாய்ப்பதைத்தாயோயாரைநினைத்தாயோ தரையில்எப்படிப்ப
டுத்தாயோ உயிரைஎன்னமாய் விடுத்தாயோ ஒன்றுஞ்சொல்லாம
லும்உனக்குத்துணையில்லாமலும் ஒண்டியாய்காட்டிலிருக்க உன்
னைப்படைத்தபாபிஷ்டிப்பிர்மன்நினைப்பும் விஸ்வாமித்திரன்கனை
த்தகனைப்பும்மெய்யாச்சுதேநாங்கள்பண்ணினபுண்ணியமெல்லா
ம்பொய்யாச்சுதே ஐயையோ பெற்றவயிறெரியுதே இப்போதுஎ
ன்னுடன்கூடஇந்தயிடுகாட்டில் உலாவும்மிருகங்களே உங்களுக்கு
ம்உங்கள்சந்ததிக்கும் புண்ணியமாகும் என்புத்திரன்இறந்துகிடக்
கும்இடத்தைக்காட்டிடீர்களாஎன்னைஅவ்விடத்திற்கூட்டிடீர்களா
தெய்வசகாயமுமில்லாமல் ஜெனசகாயமுமில்லாமல்தியங்கி மய
ங்கியழும்எனக்குஇவ்வளவுசகாயம் நீங்கள்செய்யலாகாதாவென்று
தேம்பியழுது திகைத்துநின்றாள்.

மறுபடியும்சண்டாளவிஸ்வாமித்திரன்கொண்டசபதந்திரவி
ல்லையேயென்று காற்றுமழையுங்கலந்தடிக்கச்செய்து அண்டபிட
முமில்லாமல் ஆதாரணைக்கோர்விருட்சமுமில்லாமல் அல்லோலகல்
லோலமாக்கினான் அதனைக்கண்டசந்திரவதியானவள்திகைமிகவுங்
கொண்டுஒருபெண்ணாய்ப்பிறந்த என்பேரில் இவ்வளவு கோபமும்
கொடூரமுங்கொண்டால் எப்படிசகிப்பேன் எவ்வாறுநிர்வகிப்பே
ன்ஈஸ்வராதிரிநேத்திரஜடாதாரா இப்பேர்ப்பட்டதுன்பம்பட்டவர்
களுண்டாசுத்தமாய்நனையலாச்சேகாற்றானதுசுழன்றுசுழன்றடிக்
கலாச்சே மைந்தனிருக்கின்றானோ அல்லதுவெள்ளத்திலடித்துப்
போச்சோஎன்னமோவென்று காற்றினிற்பட்டபஞ்சுபோலும்கா
னலிற்பட்டபுழுப்போலும்கனலிலுருக்கியமெழுகுபோலும்சந்
திரவதியானவள் தன்மகனைக்காணாதபாதுவித்து ஓவென்றுகூவிய
ழுதுஅரகராஆதியில்என்பிதாவுக்கு அநுக்கிரகஞ்செய்தவரம் இது
தானோஐயனே அன்பருள்ளத்தில்மேவுமெய்யனே அடியாள்பெற்
றமைந்தனைப்போய் காணுகிறபரியந்தம் திருவருள் செய்யலாகா
தா சித்தங்கொஞ்சம்வைக்கலாகாதாவென்று சிறுவனிருக்குமிடத்
திற்போய்நின்றுபார்த்தாள்பார்த்தவுடனேகதறிவீழ்ந்துகருத்தா
ழ்ந்துதன்வயிற்றிலுமுகத்திலுமறைந்துமகனையெடுத்துமுத்தமிட்
டுமடியின்மீது வைத்துவானவரும்மயங்க தானவருந்தியங்க வாய்
திறந்தழத்தொடங்கினாள் என்காதலைத்தவிர்க்கவந்த கண்மணியே
இராத்திரிபேய்ந்தமழையிலும் காற்றிலும்மின்னலிடியிலும் என்ன
மாயிருந்தாயோ இப்போதுசொரியும்பனியிலும் வெய்யலிலும்கி
டக்கவிதியாகொடிதாகியபாம்புக்காஉன்னைக்கொடுத்துவிட்டேன்
பஞ்சணைமெத்தையிற்படுத்தவுன்னைப்பாருக்காங்கல்லுக்குமுறுத்தவு

மாலுங்கேவிடுத்துவிட்டேன் கோடிதுராதுளர்கள் சூழ்ந்துகொஞ்
சியிருந்தஉனக்கு நாய்நரிகள்சூழ்ந்துகூடவா உன்னையனுப்பிவிட்
டேன் நானையத்தினம் உன்பிதாவுக்குநானென்னசொல்வேன் நமக்
கிந்தஒருபிள்ளையே போதுமென்றுநம்பியிருந்தோமே நடுவாந்த
ரத்திலிவ்வாறாகுமென்றுநாங்களறியாமற்போனோமே அயோத்தி
யாபுரியைஅரசாளுஞ்செய்வாயென்றுஅகமகிழ்ந் திருந்தோமேஅந்
தநினைப்பை ஆற்றிற்கரைத்தபுளியாயாக்கிஅரவாலிறந்தாயே அற்
புதசிங்கார அழகைக்கண்டு அன்னையும்நானும்ஆச்சரியப்படுவோ
மே-குதலைமொழியைக்கேட்டு குஞ்சிரிப்புக் கொள்வோமே-வீதி
யிற்சென்றால்மேனியில்மண்படுமென்று வீட்டில்வளர்த்தோமே-
முப்பத்திரண்டறமும்வழுவாமற்செய்து முருகனைப்போற்பெற்
றோமே-என்றுகாலையெடுத்துக் கண்ணிலொத்தியும் கையைமுகத்
தில்வைத்து முத்தியிட்டும் குய்யோமுறையோவென்று கூவியழு
து குழந்தையையெடுத்துத் தோளின்மீதுவைத்துக்கொண்டு காசி
புரிசுடலையைத்தேடி சந்திரவதியானவள் வருகையில் பிரேதத்திற்
கு ஆசைப்பட்ட-பேயும்-நாயும் பின்வரவும் - பூதகாட்டேரி முன்
வரவும்-பருந்துங்கழுகும் பற்றிவரவும் - கூளிகோட்டான் சுற்றிவ
ரவும் - துக்கசாகரத்திலழுந்தி சுடலையில்வந்து மகனைக்கீழேவைத்
து சர்வசங்காரகாலா-திரிசூலா-கையிலொருகாசளவில்லையே கட
ன்கொடுப்பாருமில்லையே-கடவுளேயென்று கவலைபுரிந்துகண்ணீ
ர்சொரிந்து சுடுகாடெல்லாந்திரிந்து சுட்டகட்டைகளையும் துண்டு
வறட்டிகளையுமெடுத்துவந்து அடுக்கிச் சுதனைமேலேவைத்து சுற்
றிச்சுற்றியழுது சுந்தரமைந்தனே இன்றோடே துலைந்ததோ உன்
னுசையென்று துடிதுடித்தழுது கொள்ளிவைத்து அக்கினிமூண்
டெரிய அழுதுக்கொண்டிருந்தாள்.

அதனைக்கண்டசுடலைகாக்கும் அரிச்சந்திரனானவன் தன்மகன்
பாம்புகடித்து இறந்தானென்பதறியாமல் யாரோஇருளில் திருட்
டுப்பிணஞ் சுடுகிறார்களென்று திடுக்கென்றெழுந்து சீக்கிரம்வந்து
பார்த்து அடிதிருடி-நீர்மூடி-குடிகேடி-எங்களுக்குக் கொடுக்க
வேண்டிய கொள்ளிக்காசும் வெள்ளைத்துசும் வாய்க்கரிசியுங்கொ
டாமல் நள்ளிருளில் நீதனியேவந்து திருட்டுப்பிணஞ்சுடுவது தகு
தியா-தர்மமா-அதர்மத்துக்குடன்பட்ட அடிசண்டாளியென்று
தணல்மூட்டியெரியுஞ் சவத்தைத் தன்காலாலுதைத்துத் தள்ளிவி
ட்டான் தள்ளிவிடவே சந்திரவதியானவள்மகனே உனக்குவாய்த்த
விதியேவிதி ஐயையோ தணல்மூட்டியுந்தள்ளிவிட்டாரோ சுடலைக்
கார்ப்போர் அவருடைய மதியேமதியென்று இடிவிழுந்துமுறிந்
துவிழுமாம்போலச் சுடலைக்காவலாளன் பாதத்தில்விழுந்துஐயா

நான் ஆருமில்லாத அரும்பாவி அனாக்காசுக்கும் வழியற்றபெரு
ம்பாவி அநாதியிலுமநாதியானவள் கொள்ளிக்காசுக்கு வழியிருந்
தால்கும்பலாய்வாரார்களா குடமுடையார்களானவழையாள்பேரிற்
கோபம்பண்ணவேண்டாமென்று குய்யோமுறையோவெனக்கூ
க்குரலிட்டழுது பலவிதவரிசையிலும் வழியற்றபாவியாகையால்
பத்துமாதஞ்சுமந்து பெற்றபாலகனைப் பாம்புகடித்தது அதனு
லிறந்தான் ஆகையால் தோளின்மீதெடுத்துவாவும் வெந்துயெரிந்
த சுள்ளிகட்டை வறட்டிகளைப்பொறக்கவும் அடுக்கவும்மகனை அ
டக்கம்பண்ணவும் ஆயிற்று ஐயாவீரவாகுவே மைந்தனைத்தகனம்
பண்ண உத்தரவுகொடுமென்று வணங்கிக்கேட்க அப்போதுகாவ
லாளியாகிய அரிச்சந்திரன் நாமொருவர்க்கு அடிமையானவன் பு
லையனல்ல என்காலை நீபிடிப்பதும் பணிவதும் நியாயமல்ல-காற்
பணத்துக்கும் முழத்துண்டுக்கும்நானுரியனல்ல ஆகையாலதனை
க்கொடுத்துவிடு என்னுடைய சுதந்தரமானது வாய்க்கரிசி அதனை
இனுமாகக்கொடுப்பேனென்றான், அம்மொழியைக்கேட்ட சந்திர
வதியானவள் ஐயா பஞ்சுக்கொப்பாகிய பாடுபடும் அடியாளுக்
குப் பணமேது - காசேது - துட்டேது - துயரமே பெரிதாய்க்
கொண்டு சோர்ந்தழும்படியாகிய என்மீதிரக்கங்கொண்டு மைந்த
னைத் தகனம்பண்ண வாய்மொழிதரவேண்டுமென்றுவணங்கிக்கே
ட்க அரிச்சந்திரனாகிய சுடலைகார்ப்போன் நீமெத்தசமர்த்தி இந்தி
ரஜால மயேந்திரஜாலக்கள்ளி-மாரீசக்காரி-மாயக்காரி- சுத்துக்கள்
ளிகளில் எத்துக்கள்ளி-மகாசித்துக்கள்ளி-கையிலொன்றுமில்லைகட
ன்கொடுப்பாருமில்லையென்றுசொல்லுகிறாயே கழுத்திலிருக்கும்
மங்கிலியத்தை விற்றாவது அல்லது அடகாவதுவைத்துஉன்மகனை
த் தணலில்மூட்டுவதே தகுதியென்றான்.

அப்போது சந்திரவதியானவள் அச்சமுற்று அலறி விம்மிய
ழுது வெகுதுயரப்பட்டு அரகரா-காசிவிஸ்வநாதா-காமாட்சிசமே
தா-பொய் சூது-வாது-ஏதுமில்லாமல் அயோத்தியாபுரிஅரசாண்
ட அரிச்சத்திரமகாராசற்கன்றி மற்றயார்க்குந்தோற்றப்படாத எ
ன்திருமங்கிலியம் இந்தச்சுடலைக்காக்கும் நீச்சப்புலையன்கண்ணிற்
றோன்றலாச்சுதே ஆதியிற்கடவுளருளிய வாய்மையும் இந்தக்காசி
புரியில் பொய்த்துப்போச்சுதே விண்ணுலகத்தோரும் மண்ணு
லகத்தோரும் காணுததாச்சுதே கண்டவாறு புலையன் பேசலாச்சு
தேகற்புக்குப்பழிப்பாச்சுதே அப்பாஎன்கட்டிமகனேகண்ணின்
மணியேகாதலனே உன்விதிவசத்தை என்னென்றுசொல்லுவேன்
இறந்துஞ்சுகமில்லாமற்போயிற்றே அப்பாதேவதாசாவென்றுசந்
திரவதியானவள் வயிற்றிலறைந்துக்கொண்டு வாய்விட்டழவே அரி
ச்சந்திரன் சேழ்விப்பட்டு அலைகடலிற்பட்ட துரும்பைப்போலு

ம் ஆலையிலிட்ட கரும்பைப்போலும்-சிறகிழந்த பக்ஷிபோலும்-
தீயிற்பட்டமெழுகைப்போலும் திகைத்துதிப்பிரமைகொண்டு
வென்றுவாயைத்திறந்து அலறியழுதுமனையாளென்றறிந்து மான
த்துயரம்புரிந்து-மகாதேவா-மான்மழுகுலசபாலா- காசிவிஸ்வநா
தா-கற்பகவல்லிசமேதா இப்படிசெய்தாயா எந்தன்மைந்தன்பாம்
புகடித்திறக்கவும்சந்திரவதிபக்ஷிபோற்பறக்கவும்நான்மசானக்கா
த்துவந்தபிணத்தலைதச்சுடவும்புலையனுக்குஅடிமைப்படவும் அமை
த்தாயா - ஐயையோ தெய்வமேயென்று மகனையெடுத்து முத்தங்
கொடுத்துமடிமீதுவைத்து மாமுகத்தைப்பார்த்துதந்தைதாயை
விட்டுத்தனியேகாட்டிற்போய்தர்ப்பைபறிக்கையில் சர்ப்பங்கடி
த்தபோதுஎப்படிதவித்தாயோ என்ன நினைத்தாயோ எவ்வாறழுதா
யோ என்னவாதைப்பட்டாயோ எப்படிவுயிர்விட்டாயோ என்மக
னே இனியெப்படிவுயிர்வைத்திருப்பேன் உனக்கு அழகைப்படை
த்தபாவிபிரம்மதேவன் ஆயசைப்படைக்கலாகாதா படுபாவிவிஸ்
வாமித்திரன்பண்ணின கொடுமையோ பாதகன் பாம்பாக வந்தா
னோ பல்லினாற்பற்றிப்பிடுங்கினானோ அவன்பண்ணினசபதம்பலித்
ததே நான்ஒருவர்க்கு அடிமையாகவும் உன்தாய்ஒருவர்க்கடிமை
யாகவும்நீசர்ப்பத்தாற்சாகவும்சமைந்ததோகாலம் சங்கராகங்காத
ரா கொஞ்சமாவது உமக்குத்தயைதாக்ஷண்ணியம் எங்கள்மீதில்லா
மற்போச்சுதேயென்று கண்களில்நீர்சொரிந்து கவலைபுரிந்துகதறி
யழுவதைக்கண்டசத்தியகீர்த்தியாகியமந்திரியானவன் ஏக்கங்கொ
ண்டு இனியில்லாதவியசனமடைந்து வெகுவாய்ப்புலம்பி யழுது
தேவதாசனைப்பார்த்து அரசாட்சிசெய்து அமைச்சர் முதலாகியவ
ர்களைஆதரிப்பாயென்றுநினைத்திருந்தநினைப்பில் நெருப்பையிட்
டாயேமன்னர்மன்னர்வந்துபணிய மணிமுடிபூண்டு வையகமாள்
வாயென்றுமகிழ்வுற்றிருந்தோமே இப்போதுவஞ்சகநெஞ்சம் ப
டைத்த விஸ்வாமித்திரனனுப்பியமாயசர்ப்பத்தினால் மாண்டுமடி
ந்தாயேஅப்படி இறந்தும் அக்கினிதகனம்பண்ண அரைக்காசுக்கு
க்கூடவழியில்லாமலாக்கிவிட்டானேபாவி விஸ்வாமித்திரன்நாங்க
ள்செய்த தானதருமமெல்லாந் தப்பிப்போச்சுதே என்றுசரீரம்
நொந்துபூமியில்விழுந்து கடகடவென்புரண்டுகதறினான்.

அப்போது சந்திரவதியானவள் இவர்கள்மந்திரியும்மகாராஜ
னுந்தானென்று மனதிலெண்ணி அரிச்சந்திரனைப்பார்த்து என்பி
ராணவல்லபா நம்முடையவிதிவசத்தை நாமேயனுபவிக்கவேண்
டுமேதவிர மற்றோரனுபவிப்பார்கள் ஆகையால்நீர்சத்தியமென்ப
தைகைவிடாமற் காப்பாற்றுமென்று சந்திரவதியானவள் பணிந்
துநிற்கையில் அரிச்சந்திரமகாராஜன் தன்மனைவியைப்பார்த்துகே
ளாய்பெண்ணே நானேஇந்தச்சுடலைகாக்கும் வீரவாகுவுக்கு அடி

மையானேன் ஆகையால்உன்னையடிமைகொண்ட வேதியனிடத்தி
ற்போய் காற்பணமும்முழச்சீலையும் வாங்கிவந்தால்மைந்தனைத்த
ளைம்பண்ணலாமென்று மன்னவன்சொல்ல - சந்திரவதியானவள்
அந்தப்பிராமணனோ எள்ளளவாவதுகிருபாதக்ஷமில்லாத வன்னெஞ்
சமுடையவன் அவனுடையமனைவியோ அவனிலும்எண்மடங்கதி
கமானகன்னெஞ்சமுடையவள் ஆகையால் அவர்கள் கொள்ளிக்கா
சும் வெள்ளைத்துணியுங்கொடுப்பதரிதுதான் ஆகிலும் போய்கேட்கி
றேனென்று மைந்தனைமன்னவனிடம்வைத்து மாளாத்துயரமுற்
று மசானத்தைவிட்டு ஏங்கியழுது இளங்கன்றைப்பிரிந்த பசுவை
ப்போலவாடித்தவித்து இன்னமென்னசங்கடம் வருமோவென்று
எண்ணிச்சந்திரவதியோடினாள்.

அப்படியோடிவருகையில்காசிராஜன் வீட்டில்சிலதிருடர்கபு
குந்து சப்பிரகூடமஞ்சத்தில் நித்திரைசெய்யுங் காசிராஜன்பிள்ளை
யையெடுத்துவந்து பூண்டிருக்கும் நகைகளத்தனையுங் கள்ளர்கழ
ட்டிக்கொண்டுபிள்ளையைக்கொன்று வீதியிலெறிந்துவிட்டுப்போ
னார்கள் அவ்வழியாகஅழுதுவருஞ்சந்திரவதியானவள் இப்பிள்ளை
யார்பெற்றதோஎன்றுஇறங்கிப்பார்க்கையில்எல்லா லக்ஷணமும்த
ன்பிள்ளையைப்போலிருக்கவே எடுத்துசடலையிலிருந்ததே இவ்வி
டம்எப்படிவந்ததுஎன்னவிந்தையோ இடிந்தையோவிஸ்வாமித்
திரர்செய்ததிதோ ஏதுகூதோஎன்று இரக்கமுற்றழுதுக்கொண்டி
ருக்கையில் காசிராஜனானவன் மைந்தன்காணமற்போன சேதியை
க்கேழ்விப்பட்டு அந்தக்கள்ளனைப்பிடித்துவரும்படி காவலாளிக
ளையனுப்பினான் அக்காவலாளிகள்தேடிவருகையில் சந்திரவதிகை
யிலிருப்பதைக்கண்டுகைப்பிடியாகப்பிடித்துகுழந்தையைக்கொ
ன்ற கொடியபாவியென்று மடலோடுமடலிறுகக்கட்டி பிள்ளையை
த்தின்னும்பேயோ பிசாசமோ ராக்ஷதியோ பூதகியோயென்றுப
லவாறுபேசியும் ஏசியும் திட்டியும் கழுத்தைப்பிடித்து நெட்டியு
ம் கன்னங்கன்னமென்று தாடையிலடித்தும் கழுத்தையொடித்து
ம்-கூந்தலைப்பிடித்துத்தள்ளியும் சதைசதையாகக்கிள்ளியும்- உதை
த்தும் அடித்தும்-கொண்டுபோகையில் சந்திரவதியானவள் அரக
ரா காசிபுரிநாதா ஏகாம்பரிபிராணநாதா என்னையிப்படி செய்தா
யா இதுவுமென்வினைதானோ என்பிள்ளையென்றெடுத்தேனே இப்
படிவருமென்றறியாமற்போனேனே இதுபூர்வகர்ம விதிவசமோ
கட்டுப்படவும்காவலர்கையில்உதைப்படவுங்காலமாச்சுதோகௌ
சிகன்செய்தமாயமோ பிள்ளைகையிலிருக்குதே இதனால்என்னகா
ரணம்விளையுமோவென்றுகதறிக்கதறி-பதறிப்பதறி-ஒடுங்கி நடுங்கி
யழுகிறதைக்கண்டு அவர்கள் நீபெற்றவூர் உன்பேரென்ன என்னகு
லம் உனக்காருமில்லையாஇந்தக்குழந்தையை எப்படியெடுத்துவந்

னாய் என்னமாய்க்கொன்றாய் நகைகளெல்லா மெங்கே சொல்லெ
ன்றார்கள்-நான் ஆருமற்றபாவி அநாதியானராக்ஷசி - பிள்ளைய
க்கொன்றவள் நான்தானென்று சொல்ல 'வ-ஆ-ஆ'இவளை விடக்கூ
டாதென்று இருகரத்தையுங் கயிற்றினு லிறுகக்கட்டி-குத்தியும்-அ
டித்தும்-கொலைறபிள்ளையைத் தோளின்மேல்வைத்து சந்திரவதிக்
கு உதிரமானது வாயிலும் மூக்கிலும் வடியவும் இடையானதொ
டியும்படியாயும் இடித்தும் மாறிமாறியடித்தும் இழுத்துக்கொ
ண்டுவந்து காசிராஜன் முன்பாகவிட்டுக் காவலாளிகள் இராத்திரி
ம்முடைய குழந்தையை இவள் வந்தெடுத்துக்கொண்டுபோய் உ
யிரைக்கொன்று வீதியில்வைத்துக்கொண்டிருப்பதைக்கண்டு கை
ப்பிடியாகப் பிடித்துவந்தோமென்றார்கள்.

சந்திரவதியானவள் இறந்தபிள்ளையைக்கீழேவைத்து எதிரில்
நிற்கையில் காசிராஜன் மைந்தனையும் சந்திரவதியையும் பார்த்து
கடுங்கோபங்கொண்டு கண்கள்சிவந்து எங்கள்பிள்ளையை யென்ன
மாய்க்கொன்றாயென்றுகேட்கச் சந்திரவதியானவள் மன்னவனைவ
ணங்கி ஓமகாராஜனே பிள்ளையினுயிரைப்போக்கினவள்நான்தான்
கையில் பிள்ளையையும்வைத்திருந்தேன் என்திரேகத்தில் புலால்நா
ற்றமும் வீசுதுபாரும் சந்தேகமில்லை நானொரு ராக்ஷசி பிள்ளை
யைத்தின்பவளென்றாள்-என்னவே மகாராஜன்பார்த்து அடக்கம்
ஒழுக்கமுள்ளவளால் இவள்ராக்ஷதியல்ல காவலாளிகள் துன்பப்படு
ம்படியாய் இவளை வேதனைசெய்திருக்கிறார்கள் இவள் சொல்லுவ
திலேயே தெரியுதென்றும் கொலைசெய்திருந்தால் முகத்திற்றெரி
யும் திருடர்கள்செய்கை கண்ணிற்றெரியும் இவள் கொன்றவளல்ல
வென்று மந்திரிகளுடன்சொன்னான்-அதற்குக்காவலாளிகள்இவள்
பிள்ளையை யெடுத்துப்போன அடியைப் பார்த்துக்கொண்டே
போனோம் இவள் கொன்றதையும் பார்த்தோம் கையிலிருக்கும்
போதுபார்த்தோம் உள்ளதைச் சொன்னாளேயொழிய இல்லாத
தைச்சொல்லுவாளா இவளை விட்டுவிடுவீர்களேயானால் எங்களுயி
ரையுங்கொல்லுவாளென்றார்கள் அவர்களைக்கையமர்த்தி மகாராஜ
ன்பின்னுஞ்சிலரையழைத்து நீங்கள்போயவ்விடத்தில் இவளுடை
ய காலடியிருக்கின்றதா மற்ற வேறொருவர் காலடியிருக்கின்றதா
சீக்கிரம்பார்த்துவாருங்களென்ன அவர்கள்வருவதற்குள்ளாகக்கள்
ளமனதையுடைய கௌசிகனோடிவந்து சந்திரவதிகாலடியைமாத்
திரம்வைத்து மற்றஅடிகளையெல்லாங் கையினால் துடைத்துவிட்
டான் சேவகர்கள் அங்கேவந்துபார்த்து வேறோடியுங்காணமல்
சந்திரவதியடியைமாத்திரங் கண்ணிற்கண்டுகாசிராஜன்முன்வந்து
பணிந்து மகாராஜாவே அவ்விடத்தில்வேறொருவரடியைக்காணோ
ம் பிள்ளையைக்கொன்ற இத்தக்கள்ளியடியேயிருக்கின்றதென்றார்

கள்-மகாராஜன் மறுபடியும்வருத்தமுற்று ஓமாதே பயப்படாதே
இராஜாங்கத்தில்(உள்ளதைச்சொல்லவேண்டும்அரசனும் செவ்வை
யாயோசித்துக்கேட்கவேண்டு) மென்று பெரியோர்கள் சொல்லி
யிருக்கிறார்கள் ஆகையால் நீ ஒளியாமல் உற்றதைச்சொல்லென்று
இறைவன்கேட்க சந்திரவதி சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து ஐயா
காதலனைக்கொன்றபாதகிநான்தான் இன்னஞ்சற்றுநேரம்இவர்கள்
வராமலிருப்பார்களானால் இந்நேரந்தின்றுவிடுவேன் இதற்குச்சமு
சயமில்லையென்றாள், மகாராஜன்இவள்சொல்லுவதற்கு வல்லவளு
மல்ல கொலைசெய்யத்தக்க நிலைமையுமுள்ளவளல்ல அவ்விடத்தில்
வேறொருவர் அடியுமில்லையாம் இவளுக்கு ஊழ்வினையெப்படியு
ண்டாயிற்றோ நாமறியோமென்று இவளுக்காகமகாராஜன்மெத்த
வுந் தாபந்திரியப்பட்டு இவளுக்கு ஊழ்வினைசம்பவித்ததோ கர்
மவிதிவசமுங் காலமும் நேருங்கிற்றோ காசிவிஸ்வநாதா கபாலீ
சாவென்று கருத்தினிற்கொல்லநினைத்து காவலாளிகளை யழைத்து
வீரவாகுவைச் சீக்கிரமழைத்துக்கொண்டு வாருங்களென்றான்.

அவ்வாறே காவலாளிகள் சீக்கிரமாகப் புலைச்சேரிக்குட் செ
ன்று வீரவாகுவை ஓடிவாவென்றழைத்தார்கள் உடனேவீரவாகு
ம் கம்பளியைக்கட்டிக்கொண்டு கந்தைத்துணியைத் தலையிற்சுற்றி
க்கொண்டு கதிரொளிபோன்றவாளையும் கட்டியிழுக்குங்கயிற்றை
யும்கையினிலெடுத்து கடுகியோடிவந்து தூரநின்றுகாசிராஜனைப்
பணிந்து துதிசெய்து அடியேனை அழைப்பித்தவிபரம் அருளிச்
செய்யவேண்டுமென்னகாசிராஜன் அவனைநோக்கிஅடாவீரவாகு
இவள் நம்முடைய பிள்ளையைக்கொன்றவள் அநேகம் பிள்ளையை
த்தின்றவள் மகாகொலைகாரி பாதகக்காரி ஆகையால்இவளைக்கட்டி
யிருக்கும் கட்டுடனே சுடலைக்கு இழுத்துக்கொண்டுபோய் வீர
வாளால்வீசி வெட்டிப்புதைத்துப்போடென்றான்- வீரவாகானவ
ன் அப்படியேசெய்கிறேனென்று சந்திரவதியைக் கயிறுடனிழுத்
துக்கொண்டுபோகையில் சந்திரவதியானவள் தனக்குவந்த யிடை
யூறைநினைத்து காட்டினில்வேடன் வலையிகப்பட்ட மான்போலு
ம் வில்லியர்கையில் அகப்பட்டபட்சிபோலும் புலிவாயிற்சிக்கிய
ஆடுபோலும் பூனைக்குக்கிடைத்த எலிபோலும் புலம்பிப்புலம்பி
அரகரா காசிவிஸ்வநாதா கருணாகரக்கடவுளே எனதுகாதலனைத்த
கனஞ்செய்ய கற்பணத்துக்கும் வெள்ளைத்துசுக்கும் வந்தவழியி
ல் இந்தமாறுபாடாக்கிவைத்தாயோ மகனுக்கும் - எனக்கும்-ஒரே
விதியாய் வாய்த்ததோ என்று சஞ்சலமுற்று தாபந்திரியப்பட்டு
தத்தளிக்கும்படியாகத் தன்சேரியில்வந்துசேர்ந்தான்.

அப்படிவந்தவுடனே தனக்குஅடிமைப்பட்ட அரிச்சந்திரனை
யழைத்துஇவள்காசிராஜன் அழகியசெல்வனைக்கொன்ற அரும்பா

வியாம்பிள்ளையைத்தின்னும்-பெரும்பாவியாம் ஆகையால்இவளை இறுக்கிக்கட்டியகட்டுடனே நீசுடலைக்குஇழுத்துக்கொண்டுபோய் தலையானது துள்ளிபோம்படியாயும்துடிதுடித்து திரேகம்மண் மேல்விழும்படியாயும்வெட்டிப்போடென்று தன்கையிலிருக்கிற வாளையும்மாதையும் அரிச்சந்திரன்வசமொப்பித்தான் உடனேவா ளைஒருகரத்திலும் மாதையொருகரத்திலும்பற்றி வெற்றியையுடை யஅரிச்சந்திரன் மெல்லியைப்பார்த்து தன்மனையாளென்றறிந்து வந்தசங்கடமுந்தெரிந்து மலர்முகம்வாடவும்வரிபோன்றகண்களி ல்நீரோடவும்-திரேகம்பதைக்கவும் - தேவியாளாவியைச் சிதைக்க வும்-செய்தாயோ காசிபுரிகடவுளே கபாலீசரேயென்று கதறியழு துவிட்டுக்கொண்டு வீதியில்வருகையில் சந்திரவதியானவள் தன்பி ராணரக்ஷகராகிய அரிச்சந்திர மகாராஜனைப்பார்த்து என்பிராண நாதரே நீர்எனக்காகஎள்ளளவும்ஆயாசப்படவேண்டாம் அட்டியி ல்லாமற்சொல்வதே உம்முடையசத்தியத்திற்கும் நீதிக்கும்நெறிக் கும்தருமத்திற்கும் புகழுண்டாகும் அப்படிப்புகழுண்டாகவும்நீ ர்புனிதனாகவும் என்னையும்எம்மகனையும் ஓரிடத்திற்றகனம்பண்ண வேண்டுமென்றாள் அதனைக்கேட்டஅரிச்சந்திரமகாராஜன் அளவில் லாததுயரங்கொண்டு அகம்-முகம்-வாட்டமாகவும்- ஆயாசம் இளை ப்புஅதிகமுண்டாகவும்-ஐயையோஎன்னைப்போலரசாண்டமன்ன வருமிருப்பார்களா செத்தபிள்ளைக்குத் தகனஞ்செய்ய வழியற்ற பேர்களுமுண்டா போதாக்குறைக்குத் தன்பெண்சாதியைத் தா னேவெட்டினவர்களுமுண்டா இவ்வளவுசங்கடப்பட்டும் உயிர்தரி ப்பார்களாஎன்று மெலிவுற்றிடுங்காலையில் சத்தியகீர்த்தியானவன் தக்ஷணம்வந்து சந்திரவதியிருக்கின்ற கோலத்தைப்பார்த்து தாம ரையிலைமீதுள்ள ஜலம்போலத்ததத்தளித்து எனதுதாயேஉன்னைக்க யிற்றினாற்கட்டவும் இறுக்கவும் இடிக்கவும்அடிக்கவும்நீபதைபதை த்தழவும் பாரினில்உதிரம்விழவும்-பார்த்தவர்கள்பலவிதவசனங்கூ றவும்பக்கமெல்லாங்கண்ணீர்சோரவும்ஆக்கிவிட்டானே அரும்பா விவிஸ்வாமித்திரன் ஆ-தெய்வமே ஆருமற்றஅநாதிபோல என்னை யன்பெற்றஅழகியதேவதாசன் அறுஞ்சுடலையில் வயிறுப்பவும் எறும்புகள்மொய்க்கவும் நாய்நரிகள்நமக்குமக்கென்னவும் பேய் பூதங்கள்பிடுங்கித்தின்ன சமையமில்லையேயென்று தாவித்தாவிவர வும்-காகம்-பருந்து-கழுகுகள்-ஆகாயத்திற்சுற்றவும்-இன்னம் அக் கினிப்பிரவேசம்பண்ணுமலிருக்கவும்பாபிஷ்டிப்பிரமன்விதித்தது ழோவென்றுபதறிக்கதறித்துடித்தழும்படியாய் பிணஞ்சுடுங்கோ லினாற் றெருவினிற்சந்திரவதியை அரிச்சந்திரமகாராஜன் தள்ளிக் கொண்டுவந்தான்-அப்படிதள்ளிக்கொண்டுவருகையில் காசிபுரியி ல்வாசஞ் செய்யுமாதர் ஆடவர்முதலி யவர்கள்வந்துபார்த்து இவ

ளுடைய கையோகமலம்-முகமோபூரணமதி-காலோ - சிலைவரால்
திரேகமோ-தோகைமயில்-இடையோ-வஞ்சிக்கொடி - விழியோ-
கடைந்தெடுத்தவடிவேல்-சுருண்டகூந்தலோ-மேகம்-ஸ்தனமோ
தங்கக்குடம்-இப்பேர்ப்பட்டலக்ஷணமுள்ளமாதுக்கு இவ்விதத்து
ன்பம்வரலாகுமோவென்று வாடுவார்சிலரும்-மேலும்-இவள்பற்க
ளோமவெள்ளைத்தரளம்-இதழோ-கோவைக்கனி-ஆ - ஆ, பிரமதேவ
ன் பதட்டங்கொண்டுடைத்தானோவென்பார்சிலரும் - பின்னும்
காசிராஜனிவளைக்கட்டிவெட்டும்படி யுத்தரவுகொடுத்தகாரணமெ
ன்னமோவென்றுகலங்கியழுவார்சிலரும்-இவளெவ்விடம் பிறந்தா
ளோ-எவ்வாறுவளர்ந்தாளோ-யாருக்குமாலைசூட்டினவளோ - இந்
தக்காசிபுரியில்மானவந்ததல்லவா-இவளுடையகாயமென்பார் சில
ரும்-அன்றியும்-இவளைக்கட்டியிழுத்துக்கொண்டுவரும் சுடலைக்கா
வலனோஇவளினும்அழகுபதின்மடங்குஜாஸ்தியாய்த் திரண்டதோ
ளையும்விரிந்த மார்பையும்பார்க்கையில் மகாவிஷ்ணுவுக்கொப்பா
னவனோ-மயிலேறிவரும்வடிவேலவருக்கொப்பானவனோ-மதனுக்
கொப்பானவனோவென்பர்பலரும்-மற்றுஞ்சிலர் - முன்புபிராம
ணனிடத்தில் விலையாக இவளையும் புதல்வனையும் விற்றவனிவனைப்
போலத்தானிருக்கின்றது பின்னும்-பொருள் குறைவினால் இவன்
பறையனிடத்தில் அடிமைப்பட்டதுமறிவோம் நம்முடையவேந்
தன்பிள்ளையினால் இவளுக்கு இப்பேர்ப்பட்டசங்கடமும்-தத்தளி
ப்பும் - உயிருக்குச் சேதமுமுண்டாயிற்றென்று சொல்லுவாரும்
வேறுசிலர்கள் நம்முடையகாசிராஜன்சேயைக்கொலைசெய்தபாத
கியிவள்தானென்று தொடருவாரும் யானையின்காலிற்போட்டுத்
துவைத்தாலுந் துவைக்கலாமென்று சொல்லுவாரும்-கொடியரா
ட்சதிகுழந்தையைக்கொல்லுமாயக்கள்ளி இவளைக்கொல்வதே தரு
மமென்பாரும்-இவளைச்சும்மாவிட்டுவிட்டால் நம்மூரிலிருக்குஞ்
சிறுவரையொருவரையாவதுவிடமாட்டாள் ஆகையால் வெட்டுவதை
விடகட்டினகட்டுடனேகழுவிலேற்றிச் சித்திரவதைசெய்தால்சித்த
மாருமென்றுசொல்லுவாரும் - பார்த்தாற்பரிதாபமாயிருக்கின்ற
து பாலகனையார்கொன்றார்களோ இவள் தலையில்வந்து வெடிந்த
தே பாபிஷ்டிதெய்வமேயென்று பாதவிப்பாரும் கொடியகொ
லைகாரபாவியென்றுதான் இவள்தன்னூரைவிட்டு அயலூரில்வந்து
தெருத்தெருவாய்க்கூவிவிற்றுவிட்ட கொலைகார துஷ்டன்தானிவ
னென்பாரும்-பின்னுஞ்சிலர்-காசிராஜன் கொலைசெய்யக் கட்டளை
யிட்டது தகாதென்றும்-பெண்தோஷம் இதுபின்னாற்றெரியு மெ
ன்றும்பலவாறாகக்கண்டவர்கண்டபடி சொல்லிக்கொண்டு தொட
ர்ந்தார்கள்-அப்போதுசந்திரவதியானவள்வந்து பார்க்கும்பிரஜை
களைஉய்த்துநோக்கிநீங்கள்கற்புடைய ஸ்திரீகளாகையால் கொலைக

களத்திற்குக்காணியாட்சியாய்ப்போகிறஇராக்ஷதியாகிய என்னைநீங்கள்வந்துபார்ப்பதுயாவம் மேலும்பிள்ளையைத்தின்னும் பெரியகள்ளிஎனக்காகவியசனமும்வேதையுங் கொள்ளவேண்டாம்அவரவர்கள்வீட்டினிற்போய்ச்சேரலாமென்றுவேண்டியவிதங்களைச்சொல்லவும் அப்போது அரிச்சந்திரன் நாம்முன்புஎன்னபாதகஞ்செய்தோமோ எவரைமனது நோகவைத்தோமோ பக்ஷிகளின் மீதுகற்கள்எய்தோமோ அண்டினயாசகரை அடித்தோமோ ஆலயங்களையிடித்தோமோ அம்மனைத்துடன் ஆற்றிற்சென்றோமோ அன்னைவார்த்தை தந்தைவார்த்தைதடுத்தோமோ-ஆவலாய்க்கூடுவாரைக்கெடுத்தோமோ என்றுநகைத்துசந்திரவதியைக்கட்டியிருக்குங்கயிற்றைப்பிடித்து அழகியதோரண வீதிகளையெல்லாங் கடந்து காசிபுரிசுடலையில்வந்தான்.

இப்படியாகவிருக்கிறநாளையில் தெய்வலோகத்தில்வசிஷ்டமகாமுனியானவர் தேவேந்திரமகாராஜனைப்பார்த்து ஓய்இந்திரபூபதியேநான்ஆதியில்அரிச்சந்திரனுடைய சங்கதிகளைக்குறித்துச்சொல்லியபோது கடுஞ்சினம்விஸ்வாமித்திரன்சபதம்பண்ணிக்கொண்டுபோனஅந்நாள்துடங்கி இந்நாள்வரையில் அவர்களுக்கு விஸ்வாமித்திரன்செய்த இடையூறுகளனைத்தும் நீங்கிப்போகப்போறது ஆகையால்நாம்போய்ப்பார்க்கவேண்டும் வாருமென்றழைக்கவே அப்படியேநல்லதென்று இந்திரனும் கருடகாந்தருவ சித்தவித்தியாதரர்களும்-முப்பத்துமுக்கோடிதேவர்களும் - நாற்பத்தெண்ணாயிரமுனிவர்களும்-திக்குப்பாலகரும்-அஷ்டவசுக்களும்நாரதரும்-பிரகஸ்பதியும் அரம்பை-மேனகை-திலோர்த்தமை- ஊர்வசியும் ஒன்றாகக்கூடி அந்தரத்தில்வந்துநிறைந்தார்கள்.

அந்தத்தருணத்தில் விஸ்வாமித்திரன் நாம்செய்தகாரியமெல்லாம் விழலுக்கிறைத்தநீராச்சே வீணானகாரியமாச்சேவிஸ்வாமித்திரனென்றபேரும்போச்சே வசிஷ்டன்பேச்சேமெய்யாச்சே என்றுவெட்கியுட்கி வீப்புகளெல்லாமடங்கி மேனியெல்லாமொடுங்கிவிரைவிலெழுந்து காசிபுரிசுடலைக்கோடி அயோத்தியாபுரிஅரசனைநாடி ஓஅரிச்சந்திரமகாராஜனே இப்பேர்ப்பட்டகஸ்தியும்வருத்தமும் நீபடுவதுநன்மையல்ல பிள்ளையுமிறந்தான் பெண்சாதியையும்வெட்டப்போகிறாய் வேண்டாம் இப்போதுஞ் சொல்லுகிறேன்என்பேச்சைத்தள்ளாதே நீமுன்னம்எனக்குக்கொடுத்தநாடுநகரத்தை இப்போதும் நான்கொடுக்கவில்லையென்றுசொல்லிப்போடு உன்னுடையநாடுநகரம் ஆஸ்தியாஸ்தி யனைத்தையுங்கொடுக்கிறேன் மேலும்உன்பிள்ளையுயிரையும் பெண்சாதியையு மீட்டுத்தருகிறேனென்றான் அப்படியவன்சொன்னதை யாருங்கேட்கவில்லை வசிஷ்டரும் அமரருங்கேட்டார்கள் அத்தருவாயில் அரிச்சந்தி

ரனும் அவனுடையமனைவியுப்பணிந்து சுவாமிபிள்ளைபோனாலும் பெண்சாதிபோனாலும் அவர்களுடன் நானும்போனாலுஞ் சரிதா ன்ஒருவருக்குக்கொடுத்தபொருளை மறுபடியுமில்லையென்று சொல்லமாட்டேன் அப்படிசொல்வேனேயாயாகில் இவ்வளவுபாடுபடுவானேன் ஆகையால்தருமத்திற்கும்நீதிக்கும் மண்ணுக்கும்விண்ணுக்கும்அதுதகுதியல்ல மேலும்நானாண்டுக்கொண்டிருந்த பதியும்அளவற்றநிதியும் பாலனையுமிழந்துவிட்டேன் என்னுடைய கட்டைக்குவுறுதியாய்க்கூடவருவது உண்மைசத்தியம் தருமம் இதுதான் இதனைக்கெடுத்தால் வேறொருபதவியும்பெறாமல் நரகத்திற்கேஆளாகவேண்டியதாகுமென்றான் விஸ்வாமித்திரனானவன் தன்னுடையஅறிவும்வாயும்அடங்கிஒடுங்கி தக்ஷணம்போய்விட்டான்.

அப்படிமகாவிசனத்துடன்போகிறவிஸ்வாமித்திரனைதேவேந்திரனழைத்து ஒருவசனங்கேட்டுபோமென்றான் நாணமும் கீழ்நோக்கியபார்வையும் நினைப்பானதுகுறைந்தும்விஸ்வாமித்திரன் வந்துஅவர்களுடன்ஒருபக்கமிருந்தான்அப்போதுஅரிச்சந்திரன் சந்திரவதியைக் கோலினாற்றள்ளி பிள்ளையிருக்குமிடத்திற் கொண்டுபோய்நிறுத்தி நீஉன்னுடைய வழிபடுதெய்வத்தைவணங்கிக் கிழக்குமுகமாகத்திரும்பியிருவென்றான்அப்படியேநின்றுநான்இறந்துபோகிறேனென்று தேவரீருடைய நெஞ்சந்தளர்ந்து தருமத்திற்குத்தாழ்ச்சிசெய்யாமல் சத்தியமாய்மனதை யொருமைப்படுத்திஉலகவாழ்வைவெறுத்து தவத்திற்குரித்தாகிய தருமத்தையும்மெய்யையும்விடப்போறீர் நல்லமனதோடும் முகக்களிப்போடும் திடகாத்திரத்தோடும்சிரச்சேதம்பண்ணென்றுகுனிந்தாள்அப்போது அரிச்சந்திரமகாராஜன் கரநமஸ்காரம் சிரநமஸ்காரம்கருத்திநமஸ்கார முதலியதுங்கொண்டு அலைகடல்சூழ்ந்த இவ்வுலகுக்கெல்லாம்பசுபதியாகிய ஒருகடவுளுண்டுஅவருடைய திருவாய்மொழியேவேதாகமசாஸ்திரமாம் அதினிலுண்டாகியதருமம்பலவற்றினுஞ்சிறந்தது ஆகையால்அந்தத்தருமமும்உண்மையும் அடியேனிடத்திலுண்டா யிருக்குமேயாகிலும் இவளும் நல்லநெறியும் கற்பும் நிஜமும் நிறைந்தவளேயாமாகில் ஒரேவெட்டினில் இருதுண்டாக வேண்டியதென்று சந்திரவதிகழுத்தில் வாளைவீசினான் அவ்வாளானது வாசனைபொருந்தியபுட்பமாலையாய்விழுந்தது அப்போது படாதபாடுகளெல்லாம்பட்டு வாள்வெட்டிற்குந்தப்பி அக்கினிபுடத்தினின்றமெழுந்த மாற்றுயர்ந்தசெம்பொன்னைப்போலப் பிரகாசித்தாள் சந்திரவதியெனுமணங்கு விஸ்வாமித்திரனாலநேக அவஸ்தைகளடைந்து அரியகாடுகள்தோறுந் திரிந்து அரவாலிறந்த தேவதாசனும்அற்புதசூரியனைப்போலே உயிர்பெற்றெழுந்தான்.

இப்பால் அவ்விடமிருக்கப்பட்டவர்கள் அரிச்சந்திரனுடைய

திலைமையுஞ்சந்திரவதியினுடையகுணம்நலமிதுமுதலாகியதையும் பலவாறாகப்புகழ்ந்துப்பேசினார்கள் ஆகாயத்தில்வந்திருந்தவர்கள் சந்திரவதியைவெட்டவே மாலையாகவிழுந்ததைப்பார்த்துமனங்க ளித்து இன்பசாகரத்திற் குளித்து யாவரும் பூமியிலிறங்கினார்கள் அவர்களைப்பார்த்து நெடியவாளை கரத்திற்கொண்ட அரிச்சந்திர னுங்களிப்படைந்சான்.

அப்போதுவிஸ்வாமித்திரன் அரிச்சந்திரனென்றபேர் இதற் குமுன்னாலே யார்க்குத்தெரியும் ஒருவருக்குந் தெரியமாட்டாது இப்போது என்னாலே-விண்-மண்-இந்தப்பதினாலு லோகமுங்கு ப்பென்று இவன்கீர்த்திபெழும்பி யிருக்கின்றது இவ்வளவு நன்றி இந்தஅரிச்சந்திரனுக்கு யார்செய்தார்களென்று சடையவிழ்ந்தா டதோள்கள்குலுங்ககௌசிகன்சுற்றிச்சுற்றியாடிச்சந்தோஷமடை ந்தான்-பின்புவசிஷ்ட முனிவரானவர்அரிச்சந்திரன் எங்கேபொய் சொல்லுகிறானோமெய்யையெவ்வாறு விட்டுவிடுகிறானோ வென்று அந்நாள்துடங்கி இந்நாள்வரையில் நெஞ்சினுற்றவாட்டமும் மன வியாக்கூலமும்மாயவும் இன்பசாகரத்தில்மூழ்கிஇனியில்லாத களி ப்புண்டாகி இந்திரசந்திர சூரியரெல்லாம்பார்க்க முன்கூறியவிஸ் வாமித்திரன்சபதந்தோர்க்கஎழுந்துகைகொட்டியாடிஅரிச்சந்திர னைக்கொண்டாடியிருந்தார் அச்சமையத்தில்அம்புலிகொன்றைஅ ழகியசடையில்தரித்தசாம்பசிவனும் சத்தியும் விடையின்மேல் ஏ றிவந்தார்விக்கினமில்லாமல்மூக்கணியையுண்டு விநாயகரும்-சுப்பி ரமணியரும்-மகாவிஷ்ணுவும்-பிரம்மாவும் - அவரவர்கள்வாகனத் தின்மீதேறி தேவிமாருடன்வந்தார்கள் அப்போதுஆகாயத்திற்பு ஷ்பமாரிபொழிந்தார்கள் - பேரிகை - எக்காளம்-சின்னம்-காளம்- கைத்தாளம்-பூரி-பேரி - முதலாகிய வாத்தியக் கருவிகளும் ஊது கருவிகளும் முழங்கினார்கள்.

இவ்வாறாகவந்த தேவரை அரிச்சந்திரன் பலவாறாக எத்திப் போற்றித் துதிசெய்து இறைஞ்சி நான்செய்ததவமோ நங்கைபா ள்செய்ததவமோ என்மைந்தன் செய்ததவமோ எங்கள் முன்னோ ர்கள்செய்ததவமோ சந்திரவதியின் தாய்தகப்பன்மார்செய்தவிர தமோ இந்தக்காசிபுரியில் வீரவாகுவுக்கு அடிமைப்பட்டுபிணநா ற்ற மிகவுமுடையசுடலையைக்காக்கும் நாயினுங்கடையேனாகியநா யேனை ஓர்பொருளாயெண்ணி தாங்களெல்லாம்வந்தது இந்தக்கா சிநகர்செய்த மாதவந்தான் கலைமுடியில் நடனமிடுங்கடவுளேசிவ பிரானே-தேவாதிதேவனே என்றுதுதித்தான்.சந்திரவதியானவள் பார்வதியைப்பார்த்து அம்மணிஎன்னையாட்கொண்டநாயகி ஆயி மகம்மாயி-அந்தரி-சுந்தரியென்று அன்பினோடு பணிந்தாள் அப் படிபணிந்தசந்திரவதியை முப்பத்திரண்டறமும் வளர்த்த கைபி

னாலே தூக்கிமேனியைத் தடவினவுடனே சந்திரவதிக்கு மெய்கு
ளிர்ந்து தழைந்து பேரின்பசாகரத்தில் நீந்தினவள் போலாயினா
ள்-மயிலேறியசுப்பிரமணியரும் அயிலாகியவேலேந்துங் காத்தினா
ல்காசிராஜன் மகனைவருகென்றழைக்க அப்பிள்ளையானவன் நித்தி
ரைதெளிந் தெழுந்தவர்போல திடுக்கிட்டெழுந்து காசிராஜன்சே
யும் தேவதாசனும் ஓடிவந்து வடிவேல்முருகனை வணங்கினார்கள்
அவர் பலவாறாக ஆசீர்வதிக்க அவரண்டையில் நின்றார்கள் அதனை
க்கண்ட அரிச்சந்திரனும் சந்திரவதியும் காசிராஜனும்அப்பிள்ளை
கள் இருவரையும்பார்த்து அளவில்லாத சந்தோஷமடைந்தார்கள்
இப்பால்திரிமூர்த்திகளும் ஒன்றாய்ச்சேர்ந்து ஒருவுளமிரங்கிஅ
ரிச்சந்திரமகாராஜனே இவ்வுலகத்தைமுன்னம் ஆண்டிருந்தஅரசர்
களிலும்இப்போது அரசுசெய்து வரப்பட்ட ராஜாக்களிலும்; உ
ன்னைப்போல நீதியும்-நெறியும்-சத்தியமும்-உள்ளவர்கள் ஒருவரு
மில்லையென்று பலவாறு புகழ்ந்தார்கள் அரிச்சந்திரனும்சந்திரவ
தியும் தேவதாசனும் ஐயனே அருட்கண்ணாளனே அம்பிகைபாக
னேயென்று பலமுறைமுறையாகப் பணிந்துதுதித்தார்கள்.

இவ்வாறாக வணங்கியிருக்குங்காலையில் சங்கரனானவர்விஸ்வா
மித்திரனையழைத்து நீஇந்தஅரிச்சந்திரனுக்கு விளைவித்தயிடரும்.
அவர்கள் காசிப்பட்டணம் வந்தவாறும், இவ்விடத்திலுள்ள யாவ
ருமறியும்படியாய்ச் சொல்லென்றார் அப்போது நடுக்கமும் அச்
சமும்திகிலும் தியக்கமும் சிந்தையிற்கொண்டு வலம்புரி இடம்பு
ரிவந்துதேவாதிதேவா திரியம்பகனே சிவசங்கரனே என்றுதியாலி
த்துதிருவடியில்பணிந்து சுவாமியென்று கைகுவித்து யெதிரேநி
ன்றுதேவேந்திரன் முன்னாள்கேட்ட காரணமும் அதற்குவசிஷ்ட
ன்சொன்னதும் அதைமறுத்துத்தான் சொன்னதும் இருவருஞ்ச
பதம்புரிந்ததும் வசிஷ்டனை இந்திரனிடத்திலேயேயிருக்கச்செய்
ததும் தான்அயோத்தியாபுரிவந்ததும் அரிச்சந்திரனைத் திரவியங்
கேட்டதும் அவன்கொடுத்ததும் மறுபடியும் அவனிடத்திலேயே
வைத்துவிட்டு வந்ததும் பின்புகாட்டிலுள்ள மிருகங்களையும் பக்ஷி
களையும்அனுப்பி இட்டபயிர்களையெல்லாம் நஷ்டஞ் செய்யும்ப
டியாய்ச்சொன்னதும் அதனால்மன்னவன்காட்டில்வேட்டைபோ
னதும் இரண்டுநீச்சமாதரை யுண்டாக்கி அவர்களையனுப்பவும் அ
வர்கள்போய் தங்களைமணம்புரியக் கேட்டதும் மறுத்ததும் பூச்
சக்கிரக் குடையைக்கேட்டதும் புரவலன் வெகுண்டு மந்திரிகளா
ல் பிடித்துத்தள்ளவும் மறுபடியும் தான்போகவும் தனக்கு நாடு-
நகரம் - ஆனை - சேனை - ஆஸ்தி - யெல்லாங் கொடுத்ததும் பின்
பு ஆண்டிவேடமாக்கி ஊரைவிட்டு காசிக்கனுப்பவும் போகும்
போது வழியில்பல இடையூறுக ளுண்டாகச்செய்ததும் பிள்ளை

யுடன் தாயையும் பிராமணர்க்கு விற்பனையாக்கினதும் மன்னவ
னைப் புலையனுக்கு அடிமைப்படுத்தியதையும் பிள்ளையைப் பாம்
புகடித்து யிறக்கச்செய்தமையும் காசிராஜன் குழந்தையைக்கொ
ன்று சந்திரமதி வருகிறவழியில் போடவும் தன்பிள்ளை யென்று
தயங்கிவாடவும் சேவகர்வந்து பிடிக்கவும் கிட்டியடித்துக்கட்ட
வும் சுடலைக்காக்கும் அரிச்சந்திரன் கையினால் அவளை வெட்டும்
படியாகச் செய்ததையும் விஸ்வாமித்திரன் சவிஸ்தாரமாய் சொ
ல்ல - அப்போது தேவேந்திர மகாராஜன் தபோநிதியாகிய
விஸ்வாமித்திரரே நீர் அரிச்சந்திரமகாராஜனுக்குச் செய்துவை
த்த இடையூறுகள் இவ்வளவுதானோ இன்னம் அநேகமுண்டு அது
இவ்விடத்தி லிருப்பவர்களுக்கும் மற்றவர்களுக்கும் உள்ளங்கை
நெல்லிக்கனிபோலத் தெரிந்தேயிருக்கின்றது மேலும்அவ்விடை
யூறுகளுக்கெல்லாம் அரிச்சந்திரமகாராஜனும் அவர் தேவியாகிய
சந்திரமதியாளும் சத்தியகீர்த்தியும் தளராமல் தங்கள்சத்தியத்தை
யும் உண்மையும் நீதிநெறியையும் விடாமலும் வழுவாமலும் இரு
ந்ததுந் தெரிந்திருக்கின்றதென்றான் அப்போது சிவனானவர் ஆதி
யில் இந்திரன்சபையில் நீரும் வசிஷ்டருங்கூறிய சபதத்தில் கெலி
த்தார் தோற்றார் சொல்லுமென்றார் அப்போது விஸ்வாமித்
திரன் திகிலடைந்து தேகம்வாடி முகம்வேறுபட்டு சுவாமி கை
லாசவாசரே கங்கைசூடியயீசரே இந்தஅரிச்சந்திரனுடைய குண
மும் நீதியும் நெறியும் குறியும் அறியாமல் இகழ்ந்தேன் வசிஷ்ட
னேகெலித்தான் அடியேனேதோற்றேன் என்றுவணங்கி ஆதலா
ல் நான்சொன்னபிரகாரம் முன்னால் ஆசையுடன் செய்ததவத்தி
ற் பாதிகொடுத்ததுமல்லாமல் அவன்கொடுத்த நாடு-நகரம்-ரொக்
க-ரோசனை - முதலாகியதும் ஒருதுரும்பளவில் குறையாமல் இ
தோகொடுத்தேன் கொடுத்தேனென்றான்.

அதற்கு அரிச்சந்திரமகாராஜன் ஒருவருக்குக் கொடுத்தபொ
ருளை மறுபடியும் வாங்கிக்கொள்வது இம்மைக்குப் பழிப்பும் ம
றுமைக்கு நரகமுமாகும் மேலும் நல்லோர் பெரியோரும்நகை
ப்பார்கள் இப்போதே படாதபாடுபட்டேன் இனியிறக்கும்போ
தும் இந்தப்பாவமும் பழியும் என்னைச்சுற்றுமென்ற அரிச்சந்திர
னைப்பார்த்து விஸ்வாமித்திரன் ஓய்மகாராஜனே - வீடு-வாசல்-ம
னைவி மக்கள்-முதலாகியவைகளைவிட்டுக் காடு-மலை-நதி - வனமுதலாகி
யவிடங்கள்தோறுந்திரிந்து தவத்தைச்செய்யப்பட்ட நான் அரச
னாக வல்லவனோ வசிஷ்டனும் நானும் பண்ணின சபதத்திற்காகஉ
ன்னுடையமனதை யறிவதற்கு முறைமையைச் சோதித்தேன் அ
துபோதும் உன்னுடைய நாடுநகரத்தை நீயேயாளக்கடவாயென்
றான் அப்போது அரிச்சந்திரன் சுவாமி விஸ்வாமித்திரமகாரிஷி

பெ வேதியர்க்கு அடிமையாகி வேலைசெய்யும்படியாய்பெண்சா
திபிள்ளையும்விற்றேன் பிறகு தான்போய் சாதியிற்கீழாகிய புலைய
னுக்கு அடிமைப்பட்டு சுடலையைக்காத்திருந்து வந்தபிணத்தலைச்
சுட்டு வாய்க்கரிசியை வாங்கிச் சமைத்துதின்றிருந்தேன் இப்போ
து இதுகளையெல்லாம்விட்டு சிரசில் மணிமுடிசூடி சிம்மாசனத்
திலேறி அரசுசெய்தால் ஆர்தான்மதிப்பார் அயோத்தியாபுரியிலு
ள்ளோர் யார்தான்துதிப்பார் ஆகையால் எங்களுக்குக் காணியா
ட்சிசுடலைதான் உமக்குஅயோத்திதான் அரசாட்சியென்றான் அப்
போதுசந்திரவதியையும்பிள்ளையையும்அடிமைகொண்ட சுக்கிரப
கவான் கயிலாசவாசகர் பக்கம்வந்து ஓய் அரிச்சந்திர மகாராஜனே
நீயென்னைசொன்னாய் உன்பெண்சாதியையும் பிள்ளையும் எனக்கு
விற்றது உனக்கு இகழ்ச்சியோ நான்பிராமணனல்ல என்பேர்சுக்
கிரபகவான் உன்னுடைய நிலைமையைச் சோதிக்கும்படியாய் இ
ப்படிக்கெல்லாம் ஆனதேயொழிய வேறல்ல ஆகையால் நீயெழு
திக்கொடுத்த முறிசீட்டு இந்தாருமென்று சங்கரன்முன்பாக வை
த்தான் அப்போது அரிச்சந்திரனுமகிழ்வடைந்தான்.

இப்பால் எமதர்மராஜனானவன் கருங்கடாவின்மீதேறி மேக
ம்போலக்கறுத்த நிறஞ்ஜொலிக்கவும் கண்கள் சிவக்கவும்காதினிற்
குண்டலக்குழைதழைக்கவும் சூலமும் காலதண்டமும் கரத்தினிற்
றன்னவெழுந்து (சிவசாம்பவ மூர்த்தியினிடத்திற்கு) வந்து தீர்க்
கதெண்டஞ்செய்து அநேகதுதிகள்புரிந்து பின்பு ஓய் அரிச்சந்தி
ரமகாராஜனே நீபுலையனுக்கு அடிமையாவாயென்று நான்முன்
னடியறிந்து புலையனாகவந்து உம்மையடிமைகொண்டவன் நான்
தான் மேலும் நீயெழுதிக்கொடுத்த அடிமைச்சீட்டு இதோதந்தே
ன் பாரும் நீ சுடலையிலிருந்தேனென்பது சுடலையல்ல அதுவேள்
விச்சாலை இதோபாரென்று அதின்மகிமைகளையெல்லாங்காண்பித்
து பின்னும் எமதர்மராஜன் சொல்லுகிறான் ஓய்மகாராஜனே நீ
மாத்திரமா அவஸ்தைப்பட்டாய் உன்னுடனேகூட சுக்கிரபகவா
னும் நானும்தான் படாதபாடுபட்டோம்(குடிகளுக்கு வந்ததுன்
பம்அரசனுக்கு அரசனுக்குவந்ததுன்பம் தேவர்களுக்கு தேவர்க
ளுக்குவந்ததுன்பம் திரிமூர்த்திகளுக்கல்லவா) வென்றான் எமதர்
மராஜன்-பின்பு அரிச்சந்திரன் இருவர்கொடுத்த இரண்டுசீட்டும் த
ன்கையெழுத்துதானென்று சந்தோஷப்பட்டான் பின்னும் எம
தர்மராஜன் அந்தயாகசாலையின்பெருமைகளையும் திவ்யமானகுண
ங்களையும் வாசமிகுந்தசோலைகளையும் பின்னுமவ்விடத்திலுள்ள நா
ன்குதிக்கும்யாககுண்டலமாயும்விருக்ஷங்கள்யூபமாயும்ஆகாயமெ
ல்லாம்ஆகுதித்தூமமாயும் பிணஞ்சுடுந்தீயென்றாயே முத்தீ - இங்
குகிடப்பதெல்லாம் எலும்பென்றாயே அது எலும்பல்ல தருப்

யை-திப்பட்ட விறகுகள் சமிதை இங்குலாவதெல்லாம் பேயென்றுயேஅல்ல அவர்களெல்லாம் இவ்விடத்திலியாகஞ்செய்யு முனிவர்கள்கூச்சலாவதெல்லாம் வேதகோஷ்டம்பிணமென்றுயே பிணங்களல்ல அவைகளெல்லாம்கருக்கள் என்று எமதர்மராஜன்சொல்லவே அரிச்சந்திரன் சந்தோஷமடைந்தான்.

அப்போது (கயிலாசவாசகர்) அப்பா அரிச்சந்திரமகாராஜனே நீஇப்போது அயோத்திக்குச்சென்று மகுடஞ்சூட்டி விஸ்வாமித்திரன் தவத்திற்பாதியும் பெற்றுக்கொண்டு உன்னுடையநாடு நகரம்எல்லாவற்றையும்பெற்று அரசாண்டு பின்பு நம்முடைய பதவிக்குவாருமென்று அனுக்கிரகஞ்செய்து தேவேந்திரன்காசிராஜன்முதலாகியாவரையுங் கூட்டியனுப்பி திரிமூர்த்திகளும்கந்தசுவாமியும்விநாயகரும்தங்கள்தங்களிருப்பிடம்போய்ச்சேர்ந்தார்கள்.

இப்பால் காசிராஜன்தன்னுடையபட்டணத்தில் இவர்கள்வந்துபட்டபாடுகளைமனதில்நினைத்துவருத்தப்பட்டு அரிச்சந்திரமகாராஜனுக்கு அநேகவுபசாரணைகள்செய்து சிலநாள்தம்மிடத்திலிருக்கச்செய்துதக்கபடிபரிசளித்துத் தானும்இந்திரமகாராஜனும்காசிபன்-பிருகு-ரோமன்-கௌதமன்-பரத்துவாசன் - விஸ்வாமித்திரன்-வசிஷ்டன் சன்னு-குருமுனி-மரீசி-நாரதன்-மதங்கன்- அத்திரி முதலோர்கள் சூழும்படியாகவும் சேனைவெள்ளம் திரண்டுவரும்படியாகவும் யானை-தேர்-குதிரை-சிவிகை முதலாகியது வரவும்-அவரவர்கள் அவரவர்கள்வாகனங்களி லேறிக்கொள்ளவும் அரிச்சந்திரன்-சந்திரவதி-சத்தியகீர்த்தி-தேவதாசன்-நால்வரும் - காசிராஜன்கொடுத்த கனகரதத்தி லேறிவரவும்முாதுக்குடைபட்டுக்குடைபிடிக்கவும் ஆலவட்டம் தாலவட்டம் போடவும் வெண்சாமரைவீசவும் கட்டியர் கட்டியங்கூறவும் கவிவாணர்-வேதியர்- கலந்துவாழ்த்தவும்-மின்னார்கள் நடனம்புரியவும் - விண்ணோர்கள் பூமாரிசொரியவும் தம்புருவீணை யாழ்மீட்டவும்பேரிகை - பூரி - டமாரம்காளம்-எக்காளம்-முழங்கவும் நானாவித வைபவங்களுடனே அரிச்சந்திரமகாராஜனும் காசிதேசத்திலிருந்து புறப்பட்டு கங்கையைவந்துசேர்ந்து யாவரும் ஸ்நானபூசை செய்துமுடித்து தக்கபடியே சமைத்து வுண்டு தாம்பூலந்தரித்து அன்றுதங்கிமறுநாள் கோமதியாற்றினண்டைவந்தார்கள்.

அவ்வாற்றினபெருமைகளையும்அங்குள்ள சோலைகளின்வளப்பங்களையும்-முனிவர்களால்கேள்விப்பட்டு யாவருமகிழ்வடைந்து போஜனாதிகளை யருந்திப்புறப்பட்டு காடு-மலை-வனம்-வநாந்திரம் கோயில்-குளம்-ஊரு-பதிகள் - முதலாகியவிடங்களின் அற்புதங்களையும் விநோதங்களையும் - கேழ்விப்பட்டும் - அங்கங்கே ஒருநாள் இரண்டுநாள்தங்கியும் புறப்பட்டு அயோத்தியாபுரிக்குச் சமீபத்

தில் வரும்போது விஸ்வாமித்திரனால் விட்டசேனைகள் அயோத்தி
க்குப்போய் அரிச்சந்திரமகாராஜனனவர்பட்ட அவஸ்தையெல்
லாந்துலைந்து அரசாளவருகிறுரென்று அறிக்கைசெய்து வீதிகள்
தோறும்அலங்கரிக்கவும்-தோரணங்கள்கட்டவும்-அரண்மனை-ஆஸ்
தானத்தைச் சுத்திபண்ணவும் அரசிபற்றும் கொலுமண்டபத்தல
ங்கிர்தஞ்செய்யவும்ஆக்கியாபிக்க அப்படியேசெய்து அவரவர்கள்
அண்ணல்வருவதை எதிர்பார்த்துக்கொண்டும் தாபந்திரியப்பட்ட
வர்களெல்லாம் சந்தோஷசாகரத்தினில்மூழ்கி பிள்ளையொருபக்க
ம்-பெண்சாதியொருபக்கம்-மன்னவனையொருபக்கம் பிரித்துவிட்
டமாதவமுனிக்குஇன்றுதான்மனதுவந்ததோவென்றுமகிழ்வடை
ந்திருப்பாரும்நீதியும்நெறியும் நிறைந்தஅரசனுகையாலேதான்அ
வஸ்தைக ளத்தனையுந்துலைத்து தன்னரசுக்கு வருகிறுரொன்றும்,
சொல்லிக்கொண் டிருக்கையில் சமுத்திரவெள்ளந் திரண்டுவருவ
துபோலதேன்கூண்டை ஈமொய்த்ததுபோலும் அயோத்தியாபு
ரியின் ஊரினுள்ளேபுகுந்து தோரணவீதிகளைக்கடந்து சுவாமிச
ந்நிதியைக்கண்டுஅவரவரேறிவந்தவாகனங்களை விட்டிழிந்துஆலய
த்தினுட்புகுந்துயாவரும்பலவிததோத்திரஞ்செய்து ஏத்திப்போ
ற்றிப் பணியவும் அரிச்சந்திரமகாராஜனும் தான்பட்டவருத்தங்க
ளனைத்துஞ்சொல்லி வந்தனைவழுபாடுடனே பலமுறைவலம்வந்து
சாஷ்டாங்கமாகத் தானும்மனைவியும் மகனும்சத்தியகீர்த்தியும் வி
ழுந்துதுதிசெய்து அரண்மனையினுள்ளே யாவரும்போனுர்கள்.

இப்பால் அரிச்சந்திரன்வந்தயாவருக்கும் பத்திவிசுவாசத்து
டன் முக்கனிசர்க்கரையுடனே போசனமுதவிச்சந்தனம்-புஷ்பம்
தாம்பூலமளித்துத் தன்னையவர்கள்புகழவுந் தானவர்களை துதித்து
ப்புகழவும் அத்தருவாயினில் பலஅரசர்கள் போற்றிப்பணியவும்
சிம்மாசனத்திலேற்றிப் பொன்முடி பூணச்செய்து வாகுவலயந்
தோளில்தரித்துஅறமுடையகையில்செங்கோலையுங்கொடுத்து அர
சாண்டிருவென்றுபலவாறுவர்ழ்த்திதேவேந்திரமகாராஜன் தன்னு
டையபொன்னகரம்போய்ச்சேர்ந்தான் முனிவர்களிற்சிலர் ஓய்அ
ரிச்சந்திரமகாராஜனே இந்தக்காருள்ளளவும் - கடல்நீருள்ளளவும்
பாருள்ளளவும்-உன்பேருள்ளளவும்-இனிமேல்உமக்கொரு குறை
வும்வாராதென்று ஆசீர்வாதஞ்சொரிந்து போய்விட்டார்கள் அப்
போதுவிஸ்வாமித்திரன்ஓய்அரிச்சந்திரமகாராஜனே உன்னுடைய
மைந்தனையும்மனைவியையும்உன்னையும் அநேகவருத்தமடையும்ப
டியாகஇடையூறுகள்பலவாய்ச்செய்துப்-உங்களிடத்தில் ஒருபொ
ய்யுங்கூதும்காண்கிலேன்ஆகையால்நீயேஉண்மையாளன்சத்தியச
ந்தனன்என்றுபலவிதத்தினுப்புகழ்ந்து ஜலத்தையள்ளிக்கையில்வி
டுத்துத்தான்செய்ததவத்திற் பாதிகொடுத்து வசிஷ்டமுனிவனைப்

பார்த்துஉம்மையும்பலவாறாகஇகழ்ந்துபேசினேன் அதனைப்பொ
றுத்துக்கொள்வீரென்று இனியவசனங்களால் அவருக்குத்தேறுத
லையாகச்சொல்லிச் சந்திரவதியையுந் தேவதாசனையும் சத்தியகீர்
த்தியையும் வாழ்த்தி அவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு த
ன்னுடைய தவவனம் கௌசிகன்போனான்.

அயோத்திபாபுரிக்கு வந்தயாவரும் போனபிறகு அரிச்சந்
திரன்மந்திரிகள் மநுநீதிசொல்லிப்போற்றவும் வாணர்கள்வண்ண
வண்ணப்பாடலைப் புகழ்ந்துசாற்றவும் வேதவேதியர்கள் ஆசிர்வா
தம்பண்ணவும் வேந்தர்கள்வந்து இணையடியை நண்ணவும்நாரிய
ரநேகர் நடனமாடவும் தம்புருவீணைகொண்டு மங்கையர்கள்பா
டவும் கட்டியர்கட்டியங்கூறவும் ஊரிலுள்ளகுடிகள் யாவருங்களி
ப்பேறவும் தருமம்-நீதி-நெறி - யாவும்வழுவாமல் அரசியற்றிவரு
ங்காலையில் காசிவேந்தன் எழுந்து வசிஷ்டமகாமுனிவரை வலம்பு
ரியிடம்புரியாகவந்து வந்தனைவழிபாடுடனே சாஷ்டாங்கமாக ந
மஸ்காரஞ்செய்து சுவாமி முனிவர்களுக்குத் தவமே பெரிதாகு
மே அத்தவத்தைக் கௌசிகன்விட்டு இந்தஅரிச்சந்திரமகாராஜன்
மீதுகோபங்கொண்டு ஊரைவிட்டுத்துறத்தவும் தான்அரசாளும்
படியாகக்கருத்துகொண்டதும் என்னகாரணமென்றுகேட்க (வசி
ஷ்டமகாமுனிவர்)கேளாய்காசிராசனே மண் பெண்-பொன்-என்
னும்அவாவைவிட்டு மாதவஞ்செய்யப்போனாலும் தன்குணமாறு
மாமாறாது அதுபோலக்கௌசிகன் மாதவத்தில்வந்தாலும்தன்னு
டையகுலமகிமை குன்றுமாகுன்றாது ஆகையால் கௌசிகன் ஒரு
வர் வாழ்வுற்றாலும்பார்க்கான் தாழ்வுற்றாலுந்தாங்கான் அவன்தவ
த்திலேவந்திருந்தாலும் அவனுடையசெய்கை நீங்குமோநீங்க
மாட்டாதென்று வசிஷ்டர்சொல்ல பின்னுங்காசிராஜனந்தக்கௌ
சிகன்மன்னவனானவாறும் பின்புமுனிவனானவாறும் அடியேனுக்
குச்சொல்லவேண்டுமென்று பணிந்துகேட்க வசிஷ்டர் சொல்லத்
தொடங்கினர். கேளுங்காசிராஜனே திசைமுகப்பிரம்மாவின்வழி
யினிலுற்பவித்த குசனென்ற ஒராசனிருந்தான் அவனுக்குக் குச
ன்-குசநாபன்-வதூர்த்தன்- வசு - என்னும்புத்திரர் நால்வர்கள் இவ
ர்களில் குசனுக்குக் கிரிவிரசநாடும் குசநாபனுக்கு கௌசாம்பி
நாடும் வசுவுக்கு வசுமதிநாடும் வதூர்த்தனுக்கு வாரணநாடும்குச
னென்பவன்கொடுக்க இவர்கள்பெற்றுக்கொண்டு அரசாண்டிருந்
தார்கள் அப்போதுகௌசாம்பி நாட்டையாளும் குசநாபனுக்கு
அடவியிலுற்பவித்த மங்கையர்கள் ஒருபூஞ்சோலையிற்சென்று வி
ளையாடிக்கொண் டிருக்குங்காலையில் அப்பெண்களினிடத்தில் வா
யுபகவான்சென்று அவர்களைப்பார்த்து வேர்த்து-வியர்த்து - களை
த்துக்-காமற்றிற்றிளைத்து-மூச்சையாகி விழுந்தெழுந்து-ஆ-ஆ-இ

வர்கள்யாரோ-எந்தவூரோ-என்னபேரோ-இவர்களுக்ுச்சரியாக விண்மாதரும் ஒப்பிடலாகாது மண்மாதரையுஞ் செப்பிடலாகாது என்று அருகில்நெருங்கி ஓமாதர்களே உங்களைக்கண்டேன் அளவில்லாதமோகங்கொண்டேன் ஆகையால் என்னுடையகாதலடங்கும்படியாய் கலந்துவிளையாடி கலவிக்குரிய பாடலைப்பாடி களித்திருக்க நீங்கள்தயவுசெய்யவேண்டுமென்று வாயுபகவான் வருந்திக்கேட்க அம்மாதர்கள் ஓய்வாயுபகவானே எங்கள்பிதாவறியும்படியாய் மணம்புரிந்தால் நாங்கள்புணருவோம் இல்லாவிடில் இசையமாட்டோமென்று மாதர்கள்சொல்லக் கேட்டவாய்வுபகவான் பின்னுந் தன்னுலியன்றமாத்திரஞ்சொல்லியும் அந்தமெல்லியர்கள்கேளாமையால் வாய்வுபகவானுக்குச் சினமுண்டாகி அம்மாதர்கள் முதுகுஒடியும்படியாய் கைகால்கள் துவண்டிடும்படியாய்வாய்வானது மோதிமோதியடித்து முறித்துக்கீழேயலறிவிழுந்தழும்படியாய்ச்செய்து வாய்வுபகவான் போய்விட்டார்.

பின்பு அம்மாதர்கள்தளர்வுற்று தங்களரண்மனைக்குவந்து பிதாவாகியகௌசாம்பிராஜனுக்கு அந்தசங்கதியைச்சொல்ல அவ்விராசன் மறுத்தொன்றுஞ்சொல்லாமல் தனக்குள்ளேயடக்கிக்கொண்டு அப்பெண்களைச்சூளிமைந்தனாகிய பிரமதத்தனுக்குப்பாணிக்கிரகணஞ்செய்துகொடுத்தான் அம்மாதர்கள் அவனை மணந்துப்புணர்ந்து வாழ்ந்துவரும்நாளையில் குசநாபனென்னு மிராஜன் செய்தவேள்வியில் காதியென்னும் ஒருபிள்ளைபிறந்து வித்தைவில்வித்தைமுதலியவைகளையு மிதமின்றிக்கற்று அதிவீரதீரசூரனாகி அம்புவிமன்னர்மதிக்கஅடையலர்துதிக்க அம்பொன்முடிசூடிஅரசாண்டு வருங்காலையினில் கவுசிகையென்னும் ஒருபெண்ணையும் கௌசிகனென்னும் ஒருபிள்ளையும்பெற்றுஇருவரும் வளருங்காலையினில் இருசிகன் அந்தக்கௌசிகையைப்புணர்ந்து சிலநாளின்பத்தைநுகர்ந்து இரண்டுபிள்ளைகளைப்பெற்ற பின்புபிரமனுலகஞ்சென்றுதவத்தைச்செய்வதை மனைவியானவளறிந்து தன்னைவிட்டு நீங்குவதைத்தெரிந்து கௌசிகையானவள் புலம்பும்போதுமுனிவன் கண்டுகடுங் கோபங்கொண்டுசீறி ஓ பெண்ணே நீகங்கையாறாகப் போகக்கடவதென்றுசாபங்கொடுக்கவே அப்புனலாறானதுமானதவாவியில்வீழ்ந்து சரையுவென்னும் நதியருகேயுற்று பின்புகேமதியாறானாள். இப்பால்கௌசிகராஜன் அரசாண்டுவரும்நாளையில் நூறுபிள்ளைகளைப்பெற்று அப்பிள்ளைகள் வெற்றிபொருந்தியவாள்திறத்திலும் விற்றிறத்திலும் யானையேற்றம் குதிரையேற்றத்திலும்புஜபலசௌரியத்திலும்இவர்களைப்போலத் தீரவான்கள் இவ்வுலகத்தில்யாவருமில்லையென்றுசொல்லத்தக்கதாய்பேர்பெற்றிருக்குங்காலையில்ஒருநாள்சேனைகள்யானைகள் இரதங்கள்பிள்ளைகள் நூறு

பேரும்மந்திரிகளுஞ்சூழும்படியாய் மான்வேட்டையாட வனத்
தினில்வந்துவேட்டையாடி-புலி-கரடி-யானை-யாளி-சிம்யம் பன்றி
முள்ளம்பன்றி முதலாகிய துஷ்டமிருகங்கள் தட்டுகெட்டுத்தடுமா
றிமுகம்வேறு கால்வேறுவால்வேறுகும்படியாய்-வாளினாலும் வே
லினாலும்-வளைதடிக்கோலினாலும்-அம்பினாலும் - கும்புகும்பாய்
விழும்படிஜெகைத்தும் முனிவர்களுடைய தவவனங்களைப் பாழ்ப
டுத்தியும் அநேகம்பட்சிசாதிகளை அதாஹதஞ்செய்து சுட்டுதின்
றும்-மென்றும்-சுவைபார்த்தும்-வனமுழுதுமிவ்வாறாக வேட்டை
யாடிவிடாய்ப்பட்டுக் கௌசிகமகாராஜனானவன் ஒருமானைக்கண்
டு அம்மானை அப்பினாலெய்ய ஆசைகொண்டு அதனைத்துறத்திக்கொ
ண்டு சேனையுந்தானுஞ்சிலதூரம்போகையில் அந்தமானானது அத்
தனைப்பேரையும் அயர்ச்சிகொள்ளும்படியாய் ஏமாறச்செய்தும்
இவர்கண்ணுக்குப்புலப்படாமல் ஒரு இருண்டவனத்திற்போய்ப்
பதுங்கிவிட்டது பின்புகௌசிகமகாராஜனும் சேனைகளும் களைப
ட்டுகாதுவிடாயுற்று அருந்தப்புனலுமகப்படாமல் ஆயாசங்கொ
ண்டு ஒருமானினாலல்லவோ இத்தனைவருத்தம் சம்பவித்ததென்று
யாவருமொன்றாய்சேர்ந்து என்னுடையதவவனம்வந்தார்கள் நா
னும்இந்தக்கௌசிகனைப்பார்த்துஓய்மகாராஜனே நீர்எந்தவூர்என்
னபேர்இங்குவந்த காரியமென்னவென்றுகேட்டேன் அப்போது
கௌசிகராஜன் தான்வந்ததும் வேட்டையாடினதும் ஒருமானைத்
துறத்திக்கொண்டுவந்ததும் அதுமறைத்துவிட்டதையும் அதனாற்
களைத்து கவருத்தமுற்றதையுஞ்சொன்னான் அப்போதுநான் அ
வனையுமவனுடன்வந்தசேனைகளையும்பார்த்து-ஆ-ஆ- இவர்கள்மெத்
தவிடாய்பட்டுவெசாரிவந்தார்களென்று ஆயாசந்தீரவும் அதிகசந்
தோஷமீறவும்காமதேனுவையழைத்து இவர்கள்யாவருக்கும் அறு
சுவையோடன்னம்பரிமாறும்படியாய் அந்தக்காமதேனுவுக்கு ஆ
க்கியாபித்தேன் அவ்வாறே அந்தப்பசுவானதுயாவருக்கும்திருப்தி
யாகும்படியாய்-நெய்-பால்-தயிர்-தோசை- வடை - அப்பம் - அ
திரசமும்-அறுசுவையோடுஅன்னமும்பரிமாறி அவர்கள் காதடை
ப்பு களைப்பு முதலாகியதுந் தீரச்செய்தது.

அதன்பின்புகௌசிகராஜன்மந்திரிகள் சேனைகளியாவருஞ்சூ
ழும்படியாய்என்னிடத்திற்குவந்துதவசிரேஷ்டவசிஷ்டமகாமுனி
யேதாங்கள்தயவுகூர்ந்துஅடியேனுக்கு இப்பசுவைத்தரல்வேண்டு
மென்றுசாஷ்டாங்கநமஸ்காரமாகவணங்கிக்கேட்டான் அதற்குநா
னும் ஓய்கௌசிகராஜனே அப்பசுவிற்குரியவனானல்ல அதுவோ
தெய்வலோகப்பசு அதையொருவர் தீண்டக்கூடாது ஒருவரிடத்தி
லும்நிற்கவுமாட்டாது யாராவது நினைத்துவருபவர்களுக்குத்திவ
லென்றுஅன்னங்கொடுக்கப்பட்ட அற்புதப்பசு ஆனதால் உனக்குக்

அதுஉதவமாட்டாதென்றுசொன்னேன் உடனேகௌசிகன்கனைத்துதன்னுடையசேனை-யானை-குதிரை-காலாள்வீரர் முதலானவர்ம்நெருங்கும்படியாய்அப்பசுவைவளைத்துக்கொண்டபோசத்தைஅதன்பேரிலேவீசவே அதற்குக்கோபமதிகமாகிக் குறுகுறுத்துகண்களைநெறித்துக் கால்கள்பூமியிற்றங்காமல் சேனைகளெறிந்த கயிற்றோடே ஆகாயத்திற்கிளம்பிக் குதிகுதித்து சேனைகளின்பேரில் வியாக்கிரம்போலத்துள்ளிவிழுந்தது விழவே(கௌசிகன்சேனைகளில்)முறியட்டும்கால்கரங்கள் தறிபட்டும்போனவர்கள்சிலர் பின்னும்வாலினால்விசிறிவிசிறியடிப்பதினால் இடையொடிந்தவரும்நடைகெட்டு மனமடிந்தவருமானார்கள் சிலர்பின்னங்கால்களிரண்டையுந்தூக்கி யுதைப்பதினால் குடல்கள்சரிந்தும் கால்கள்பிளந்தும் குய்யோமுறையோவென்றுகூவியழுபவர்சிலர் கொம்பைத்தீட்டுகிறதைப்பார்த்துக்கையிலிருக்கும்வேலும்-அஸ்திரமும்-ஈட்டி-எறிபீட்டியையுங்கீழேபோட்டுக்குளறிவழிந்து கொல்லவந்தஎமன்போலாயிற்றேயென்று கும்பிட்டோடுவார்கள்சிலர் அன்னமளித்து ஆவியைக்கொல்லவமைந்ததோவென்று அழுபவர்கள்சிலர் பின்னும்வானமட்டுக்குமெழும்பி-யானை - குதிரைமுதலாகியதுகளை சின்னபின்னப்படுத்திப்பிரமைகொண்டுசிதறியோடும்படிசெய்து அந்தக்காமதேனுவாகிய பசுவானது மறுபடியும் என்னிடத்திற்குவந்து இன்னம்அடியேன்செய்யவேண்டியதியாதோ தேவரீர்திருவாய்மலர்ந்தால் அவ்வாறேசெய்கிறேனென்றுசொல்ல அதற்குநானப்பசுவைப்பார்த்து ஓகாமதேனுவே நீஇவ்விட மினியிருக்கவேண்டாம்சீக்கிரம் தெய்வலோகம்போய்ச்சேரென்றேன் அந்தக்ஷணம் பசுவானதுபோய்விட்டது.

அப்பால் கௌசிகராஜனுடையபுத்திரர்கள் நூற்றுவரும்சினந்து-கனத்து என்னுடனெதிர்த்து எங்கைக் கொல்லும் படியாய் அமோகமான அக்கினியாஸ்திரம்-வருணாஸ்திரம்-வாய்வாஸ்திரமுதலாகியதை அடுக்கடுக்காயெடுத்துத்தொடுத்து சரமாரியோலும் விடுத்தார்கள். பின்னும் குயவன்திகிரியைப்போலக் ககரவென்றுசுழன்றுகையொடுகைதட்டிக்கறுகி-மீசையுறவி-கடவிரைச்சல் போலக்-கதை-வாள்-ஈட்டி-எறிபீட்டி-சக்கரமுதலாகியதை யெறிந்தார்கள்-அப்போதுஎனக்குக்கோபம்பிறந்து கண்கள்சிவந்து கனல்கள்ஜொலித்துக்குபீல்குபீலென்றுபுறப்படவே அந்தத்தீயில்கௌசிகராஜன் மைந்தர்கள்நூற்றுவருஞ்செங்காடு தீப்பட்டாற்போலுவ-திரிபுரத்தைச்சிவனெரித்திட்டதைப்போலும்-சிறுவர்களகப்பட்டுதீய்ந்துமாய்ந்திட்டார்கள் அதனைக்கண்ட கௌசிகராஜன் ஆ-ஆ,நம்முடைய அருமைத்திருமைந்தர்கள் நூற்றுவரும் வருந்திக்கரிந்துபோகும்படியாய்இந்த அருந்தவனாகியவசிஷ்டமுனிவன்

செய்தானல்லவா என்று என்மேல்எரிந்தவ னெதிரில்வந்து தன்கையிலி
ருக்கிறதனுவவளைத்து அட்டகாசஞ்செய்து சந்திரபாணம்-இந்தி
ரபாணம்-சதகோடி கோடியாய்த்தாக்கி என்னைநோக்கிவிட்டான்
அதுகளையெல்லாஞ்சாப்பிடும்படியாய்என்கையிலிருக்குந்தண்ட
த்தினை எதிரினில்தரையிலேநாட்டினேன்பின்னும் இக்கொடியன்வி
டும்-வாள்-வேல்-மழு-கதை-சக்கரம் - முதலாகியதையுஞ் சாப்பிட்
டேயப்பிட்டுநம்முடையதண்டபானது மிண்டனாகிய கௌசிகரா
ஜனையும்மண்டைசிதரக்கண்டனஞ் செய்கிறதென்றுஎன்னுடை
ய அண்டையில்வந்துசேரவேகௌசிகராஜன்வெட்கி-மனமுட்கி-எ
ன்பேரில்வஞ்சம்வைத்து கொஞ்சநஞ்சந்தப்பித்தவறியேசேனைக
ளுடன்தனதுபட்டணஞ்சென்றபின்பு அரசுநமக்காகாதென்றுவி
டுத்து மரவுரியுடுத்திதலையிலிருக்கும் வச்சிரமுடியைப்போக்கி ச
டைமுடியுண்டாக்கிகையிலிருக்குஞ்செங்கோலைநீக்கி தண்டுகமண்
டலந்தாக்கி அறுசுவையுணவைவிண்டு அருங்காய்கனிகளையுட்கொ
ண்டுமாணிக்கச்சிம்மாசனத்தைத்துறி-மரப்-கல்-முள்ளுள்ள மலை
யேறிஇவன்தவஞ்செய்தான் அத்தவத்தையழிக்கும்படியாய்வச்சிர
பாணியாகிய இந்திரமகாராஜன்சுந்திரமுள்ளதிலோர்த்தமையைவி
டுத்தான்விடுக்கவே அந்தத்திலோர்த்தமையானவள்மல்லிகை-முல்
லை-மருவேர்-குருவேர்-கொண்டையில் முடித்துவாசனைவீச-கந்த
கதம்பம் புழுகுகஸ்தூரியை காந்தியுள்ளமேனியிற்பூசி - நல்லகலை
பணிகளைப்பூண்டுகலகலென்றொலிக்கும்படியாய் தண்டைகொலு
சுகாலிலணிந்து அன்னம்போல்வந்து அவன்முன்புநின்றாள் அப்
படிநின்ற அவளதின்வாசவாடையினால் கௌசிகனவன்செய்யுந்
தவமழிந்து தியானஞ்செபமுமொழிந்து மனதொருமையுங்கெ
ட்டுமங்கைவலையிற்கட்டுப்பட்டு கண்ணைத்திறந்துக்கடுங்கோபம்பி
றந்து கன்னியைப்பார்த்து களைத்து திரேகம்வேர்த்து அவள்வந்த
காரியத்தைவிசாரித்து கருத்திலாலோசித்து என்னுடையதவத்தை
க்கெடுத்தாயல்லவா அடிகாதகிகொடியபாதகிஎன்று அவள்பேரிற்
கடுகடுத்துஇன்றுதொடங்கி நீதெய்வலோகத்தைவிட்டு பூமியில் ம
னிதர்பிறப்பினிற்பிறக்கக்கடவதென்று அந்தத்திலோர்த்தமைக்குச்
சாபங்கொடுத்து தானுமந்தத்திசையைவிட்டு தென்திசைசென்று
பரமசிவனைநினைத்துஅதிகவுக்கிரமானதவம்புரிய அத்தவமானதுநி
றைவேறிப் பரமசிவனிடத்தி லழியாதவரத்தைப்பெற்றிருந்தான.

இன்னமுங்கேளுங்காசிராஜனே இந்தக்கவுசிகன் இவ்வாறாகவி
ருக்கையில்அந்தக்காலத்தில்அரிச்சந்திரன்தந்தையாகியதிரிசங்குஎ
ன்னிடத்தில்வந்துசுவாமிஅடியேன் அங்கத்துடனே சுவர்க்கலோ
கம்போகும்படியாய் அனுக்கிரகம்பண்ணவேண்டுமென்று அநே
கவிதமாக என்னைவணங்கிக்கேட்டுக்கொண்டான் அப்போதுநான்

சொன்னதென்னவென்றால் கேளாய்திருச்சங்குமகாராசனே தெய்
வலோகம்போகக்கூடாது அப்படியல்லவென்றுபோனால்அங்கிரு
க்குந்தேவர்கோன்முதலாகியவர்கள்உன்னைச்சேர்க்கமாட்டார்கள்
ஆகையாலந்தயெண்ணத்தைத்தள்ளிவிடென்றுமறுத்தேன் அதை
க்கேளாமல்திருச்சங்குமகாராசனானவன் தங்களாலாகாதென்றால்இ
ன்னமிருக்கப்பட்டமுனிவர்கள்எவர்களாலாவது அந்தஇந்திரலோ
கம்போவேனென்றுசொன்னான் ஓய்திரிசங்குராஜனே யாதாமொ
ருவர்(அடாதகாரியஞ் செய்வார்களேயானால் படாதபாடுபடுவார்
களென்கிறபழமொழியை) நீயுணராமல்பிறரா லடைவேனென்று
என்னிடத்திற் பிரதிக்கினைபண்ணினபடியால் நீபுலையனாகக்கடவா
யென்றுசாபங்கொடுத்தேன் உடனேதிரிசங்குக்குத் தன்னுடைய
மெய்யினழகுங்கெட்டு வையகத்தோர்கள்தன்னைப் புகழ்ச்சிசெய்
வதைவிட்டுஇகழ்ச்சிசெய்யும்படியாய்த் தன்னூர்க்குச்சென்றுதன்
சுற்றத்தாரும்பழிக்கும்படியான இழிவைப்பெற்றுஎன்னையு மறந்
துகௌசிகமுனிவனைப்போயடைந்து ஐயாநான்அங்கத்துடனேசு
வர்க்கம்போகும்படியாய்த் தேவரீரனுக்கிரகஞ் செய்யவேண்டு
மென்றுதிர்க்கதெண்டப்புரிந்து என்னைக்கேட்டதும் நான்சொன்
னதுஞ்சாபமிட்டதும் அந்தக்கவுசிகனிடத்திற்சொல்ல அவன்என்
னுடன்சமர்புரிந்ததைநினைத்து இதுதான்சமயமென்று என்னாலா
காதகாரியந்தன்னாலாகும்போலெண்ணிஓய்திரிசங்குமகாராஜனே
உம்முடையயெண்ணத்தின்படியேநான்செய்கிறேன் நீர்சந்தேக
ப்படவேண்டாமென்று ஒருவிமானம்வரவழைத்து அதின்மேலே
ற்றித்திரிசங்குவைச் சுவர்க்கமனுப்ப அச்சுவர்க்கந்திரிசங்குபோய்
ச்சேர அவனைக்கண்ட அங்கிருந்ததேவர்கள் அதிககோபங்கொண்
டுஅடாபுலையா நீதேவலோகம்வரலாகுமா எங்களைத்தான் நீகாண
ப்போகுமா இவ்வளவுதுணிவும் மனவலிவும் உனக்குயார் கொடு
த்ததுசொல்லென்று கல்லல்செய்யவுடனே(திரிசங்கு)தன்விமான
த்தைநிறுத்திமெத்தவியாகூலப்பட்டுவியசனமுற்று ஒன்றுஞ்சொ
ல்லாமல் ஊமைபோலநிற்கப் பின்னும்தேவர்கோன் முதலாகியவ
ர்கள்சீறிக் கோபமிகவுமீறி திரிசங்குபுலையா கேளாய் இந்தத்தெய்
வலோகத்திற்குவரும்படியாய் ஊணற்று உண்டியற்றுஊர்விட்டு
பெண்டுபிள்ளையைநீக்கி பெரியமலைகளிலும் - குகைகளிலும்-இரு
ந்து காற்றுமழைகளில்நனைந்தும்-வெய்யலில் உலர்ந்தும்-விடாய்
ப்பட்டும்-கர்த்தனைவருந்தித்தவப்புரிந்துங் காத்திருக்கிறார்கள் அ
வர்களுக்கெல்லாங்கிட்டுவது அரிதாயிருக்கநீஅரசாண்டு அருமுனி
வரிடத்தில் வசையுற்றபுலையனென்கிற சாபத்தைப்பெற்று நாண
மில்லாமல்அகஸ்மாத்தாய் விமானத்திலேறி அச்சமில்லாமல்வருவ
துநீதியல்ல நில்லென்று வந்தவழிசெல்லென்று விமானத்தைப்பி

ன்னுக்குத்தள்ள திரிசங்கு விமானத்தோடு திரிந்தலைந்து திப்பிர
மைகொண்டு தியங்கி மயங்கி கௌசிகமுனிவே அபயம் இப்போ
து என்னைக்காக்கவேண்டுமென்று கலங்கிக் கண்ணீர்விடவும் விமா
னம் பூமியில்விழவும் வருவதைக்கண்ட கௌசிகமுனிவன் தக்ஷண
ம்எதிர்சென்று விமானத்தைவிழாமல்நிறுத்தி ஓய்திரிசங்குமகாரா
ஜனே உன்னைச்சுவர்க்கம் அனுப்பியும் இவ்விடத்தில்நீதவித்திருப்
பதென்ன உன்னைத்தடைசெய்தவரார் சொல்லென்று கௌசிகமு
னிவன்கடுங்கோபங்கொண்டு கண்களினின்றெழுந்த அக்கினியான
து பலதிக்கிலும்பரவ அதனால்சகலவுயிரும் அதனிற்கட்டுண்டுவே
குமென்று புழுவைப்போலும் பதைபதைக்கஇப்படியாகப்
பதினாலுலகமும் பாதவிக்கும்படியாகச்செய்து ஓய்திரிசங்குமகா
ராஜனே என்னுடைய தவவல்லமையினால் இந்திரனும்பிரம்மாவு
ம் இன்னம் பலதெய்வங்களையும் வேறுவேறு சிருஷ்டித்து உலகங்
களைமாற்றி உம்பர்கோனையும் ஏமாற்றி உடுக்களையும்தலைகீழாகமா
ற்றி சத்தசாகரங்களையும் அலையெழாமல் தனக்குள்ளேயடக்கிச்ச
கலமும் வெவ்வேறுபடைத்து சங்கரன் திருமால் சத்தி தாங்கள்ம
திக்கும்படியாய்உனக்குந் தெய்வலோகத்திற்கு மேலானஉலகத்தி
ற்சேர்க்கிறேன்பாரென்று திடச்சித்தமாய் சித்தத்தைநிறுத்திதெ
ய்வலோகத்தில் கௌசிகன் தியானஞ்செய்திருக்கையில் சித்தர் கி
ன்னரர் தேவர்கள் முப்பத்துமுக்கோடி முனிவர்கள் இதுஎன்ன
மாய்ப்போகுமோ எப்படியாகுமோஎன்றெண்ணி இடிந்து இர்
தயமடிந்து இருந்தவிடமிட்டு எழுந்திராமல் ஏக்கங்கொண்டிருக்
கையில் எந்தையாகிய நந்தகோபனறிந்து இவ்வளவு வல்லமையும்
கௌசிகமுனிவனுக்கு சந்திரசேகரனால் வந்ததென்று இருதயத்தி
லுன்னி இதற்கோருபாயம் செய்யவேண்டுமென்று கருடவாகன
ரூடராய்ப்புறப்படவே அதனைக்கண்டசிவன்-பிரமன்- மற்றவர்களு
ம் பின்றொடரும்படியாய் எல்லோரும் ஏகோபித்து ஒருமுகமாய்
வந்து உலகம் நிலைநிற்கும்படியாய் உத்தேசித்துஓங்காரங்கொண்
டகௌசிகன்சினத்தைஆற்றி திரிசங்குக்குச்சொன்ன அங்கத்தைமா
ற்றி நக்ஷத்திரமண்டலப்பதவியைக்கொடுக்கும்படியாய் ஆக்கியா
பிக்க அவ்வாறேகொடுத்து மும்மூர்த்திகளும் கௌசிகமுனிவனு
ந்தங்கள்தங்க விருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள்.

கேட்டீரோகாசிராஜனே இவ்வளவுதண்மையையுடையகௌ
சிகமுனிவனானவன் அந்நாளில் என்னுடனெதிர்த்துசமர்புரிந்தம
னப்பொறுமையால்நான் எந்தக்காரியஞ்செய்தாலும் மகாராஜச
பைகளிற்போய் எதைச்சொன்னாலுந்தடுப்பவன் மேலும்நான்ஆ
குமென்றுசொன்னால் அவன் ஆகாதென்பான் நான் ஆகாதென்று
சொல்லியஒருகாரியத்தை அவன் ஆகுமென்றுசொல்லி வாதுகொ

டுத்துவருவான் இப்படிவருங்காலையில் இந்திரன்சபையில்இந்தஅரிச்சந்திரனை நான்மெய்யனென்றேன் அதற்கவன்சுத்தப்பொய்யனென்றான்(சத்தியசந்தானனென்று நான்சொன்னேன் (அவன்சுத்தஅசத்தியனென்றான் இப்படி நாஞ்சொன்னத்திற்கெல்லாம் பதிற்சொல்லி பொல்லாதபோர்கொடுக்கையில் புரந்திரன் முதலாகியவர்கள்தடுத்து சமாதானப்படுத்திக் கௌசிகமுனிவனை அரிச்சந்திரன் நிலைமையைச்சோதிக்கும்படியா யனுப்பினார்கள் அவனப்படியேபுறப்பட்டுவந்து தனனாலும் பிறராலும் அரிச்சந்திரனைச்சோதிக்க இந்தஅரிச்சந்திரன்எதற்குஞ்சலியாமல் (தருமமேஜெயம்பெருமாளே துணை) என்றசத்தியத்தைவிடாமல் உறுதியாயிருக்கும்போது கௌசிகனுக்குத் தான்செய்தசபதம்நிறைவேறாமற்சலித்துதன்னாற்சம்பாதித்த தவத்தினிற்பாதிதந்ததை யாவருங்கண்டீர்களேயென்று வசிஷ்டரானவர் திருவாய்மலர்ந்தருளினார்.

அப்போது காசிராஜனும் மற்றவர்களும் சுவாமிவேதசாகரமே நன்மை தின்மையும் வருங்காலம் நிகழ்காலம் செல்காலமும் கண்டறிந்துசொல்லும்-ஞானவிளக்கே அந்தக்கௌசிகமுனிவனுடையகாரணந்தங்களுக்குத் தெரியுமேயொழிய மற்றவர்களுக்குத்தெரியுமா இப்போது தெரியவந்தது என்றுயாவரும்எத்துத் துதித்து இருபதத்தைவணங்கி யிருக்குங்காலையில் காசிராஜன் வசிஷ்டமுனிவரைப்பார்த்துசுவாமி அடியேன்வந்து வெகுநாளாயிற்றாகையால் நான்என்பதிக்குப்போய்வரும்படியாகத்திருவாக்களிக்கவேண்டுமென்று வசிஷ்டமகாமுனிவரிடத்திலும்மற்றமுனிவர்களிடத்திலும்அரிச்சந்திரமகாராஜனிடத்திலுஞ்சிலவுபெற்றுக்கொண்டுமகாமேன்மையுடனே சகலவைபோகவாத்தியகோஷ்டத்துடன் காசிராஜன்தன்பட்டணம்போய்ச்சேர்ந்தான்பின்பு அரிச்சந்திரமகாராஜன்முடிதரித்து அரியாசனத்தில் அமைச்சர்முதலாகிய சேனைகள்சூழவும் மாதவமுனிவர்களும் வேதவேதியரும் மங்களத்துடன்வாழ்த்தவும் ஆறிலொருகடமை குடிகளிடத்திற் பெற்றுக்கொண்டு யாதாமொரு குறைவில்லாமல் அயோத்தியாபுரியை அரசியற்றிவந்தான்.

ஆதலால் இப்பேர்க்கொற்ற உத்தம சத்தியசந்தவிரதசீல சற்குணனாகிய அரிச்சந்திரமகாராஜன் திவ்வியகதையைப் படித்தவர்களுக்கும் படிக்கக்கேட்டவர்களுக்கும் ஸ்ரீமந்நாராயணருடைய கருணாகடாக்ஷமும்-தேவதேவராகிய கயிலாசவாசருடைய கிருபையும்பெற்றுதனகனகசம்பத்தும் தீர்க்காயுளுமடைந்துசுகசீவியாய்வாழக்கடவதென்று உத்தரகாண்டத்திற் சொல்லியிருக்கின்றதை மொழிபெயர்த்தெழுதினே மென்றவாறு.

அரிச்சந்திரமகாராஜன்கதை-முற்றுப்பெற்றது.